ஸ்ரீ:

மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபா

தமிழ் வெளியீடு — நெ. 5.

Sat Grantha Prakasana Sabha, Madras.

Tamil Publication No. 5.

# பன்னிரு திங்களநுபவம்.

பன்னிரண்டு மாதங்களிலும் அவதரித்த ஆழ்வாராசாரியர்களின் விசேஷங்களை விரிவாக விளக்குவது.



இது

ஸபை வித்வான் ஸ்ரீகாஞ்சி

P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளால்

எழுதப்பட்டு



மதராஸ் ரத்தினம் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது

(25-3-48)

இதன் விலை :— ஸபை மெம்பர்களுக்கு ... ரூபா 1 4 0
இதரர்களுக்கு ... „ 1 10 0

கிடைக்குமிடம் :—

ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபா ஆபீஸ்,
14, ஸ்ட்ராட்டன் முத்தியா முதலி வீதி,
ஜி. டி., மதராஸ்.

# முன்னுரை.

சீரும் சிறப்புமுற்ற நமது ஸம்பிரதாயத்திற்கு ப்ரவர்த்தகர்களாகவும் மஹோபகாரகர்களாகவும் அவதரித்தருளின ஆழ்வார்களும் ஆசாரியர்களும் நம்மனோரால் நிச்சலும் அநுஸந்திக்கப்படவேண்டிய பெருமை வாய்ந்தவர்கள். அவர்களுடைய திவ்விய சரித்திரங்களையும் திவ்ய ஸ்ரீஸூக்திகளிலுள்ள நவநிதி போன்ற விசேஷப் பொருள்களையும் நாம் எவ்வளவு அநுபவித்தாலும் அவை ஆராவமுதமாயிருக்கும். ※ எப்பொழுதும்நாள் திங்களாண்டூழியூழி தொறும் அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதமே ※ என்னும்படியாக அமைந்த அவற்றை நாம் நித்யமும் அநுஸந்தானம் செய்து அகமகிழ அவகாசம் பெறாவிட்டாலும் அவ்வாழ்வாராசாரியர்கள் அவதரித்தருளின திருநக்ஷத்திரங்களிலாவது அநுஸந்திக்கப்பெறவேணும்.

குருபரம்பராப்ரபாவாதி சரித்திர நூல்களும் திவ்ய ப்ரபந்த வியாக்கியானங்கள் முதலியவையுமாகிற அமுதக் கடல்களில் ஆழ்ந்திருக்கும் ஆரியர்கள் அநுபவிக்கும் முறை அற்புதமானது. அவ்வமுதக் கடல்களில் அதிகமாக அவகாஹிக்கப் பெறாதவர்களுங்கூட ஒருவாறு அனுபவித்து ஆனந்திப்பதற்கே இந்நூல் தொகுக்கப்படுகின்றது.

முதலாழ்வார்கள் அவதரித்தது ஐப்பசித் திங்களிலாதலால் அம்மாதந் தொடங்கி மாதவரிசையாகப் புரட்டாசி வரையில் பன்னிரண்டு மாதங்களின் விசேஷங்களையும் விரிவாக அனுபவிப்பிக்க விரும்பி இஃது அமைக்கின்றேன். அந்தந்த மாதங்களில் அவதரித்துள்ள நம் ஆழ்வாராசாரியர்களின் விசேஷங்களை விவரிக்கின்றேன்.

இங்ஙனம்:

P. B. அண்ணங்கராசாரியர்.

(15—3—48)

ஶ்ரீ

# இதிலுள்ள விஷயங்களின் அட்டவணை.

விஷயங்கள். பக்கலக்கம்.



விஷயஸூசிகை முற்றிற்று.

ஸ்ரீ:.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# பன்னிரு திங்கள் அநுபவம்.

ஸ்ரீகாஞ்சி. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

## 1. ஐப்பசி மாதம்.

இம்மாதத்தில் அவதரித்த ஆழ்வார்கள் மூவர்; ஆசாரியர்கள் இருவர். முதலாழ்வார்களெனப்படுகிற பொய்கையார் பூதத்தார் பேயார் ஆகிய ஆழ்வார்கள் மூவரும்; பிள்ளை லோகாசாரியர் மணவாள மாமுனிகள் ஆகிய ஆசாரியர்கள் இருவரும் ஆக ஐவருடைய விசேஷங்கள் ஐப்பசி மாதத்தின் அநுபவமாக இங்கு அளிக்கப் படுகின்றன.

### 1. 2. 3. முதலாழ்வார்கள்.

நம் ஸம்ப்ரதாயத்தில் முதலாழ்வார்களென்று கொண்டாடப்படுகின்ற பொய்கையார் பூதத்தார் பேயார் என்னும் மூவர் ஓடித் திரியும் யோகிகளாய், தம்மில் ஒருவரையொருவர் அறியாமல் தனித் தனியே ஸஞ்சரித்துக் கொண்டிருந்ததாகவும், இம் மூவரையும் ஓரிடத்தில் சேர்த்து ஆட்கொள்ள எம்பெருமான் குதூஹலங் கொண்டிருந்ததாகவும், ஒருநாள் ஸூர்யன் அஸ்தமித்த பின்பு பொய்கையாழ்வார் கனமழையினால் திருக்கோவலூரை யடைந்து ம்ருகண்டு மஹர்ஷியின் திருமாளிகையிற் சென்று அதன் இடைகழியிற் பள்ளிகொண்டிருக்க, பூதத்தாழ்வாரும் பிறகு பேயாழ்வாரும் அவ்விடத்திற்கே வந்து சேர்ந்ததாகவும் அங்கு மூவரும் அளவளாவி நிற்கையில் இவர்களை எம்பெருமான் நெருக்கிக் கலந்து பரிமாறினதாகவும் சரித்திரம் கூறப்பட்டு வருகின்றது. இதனால் முதலாழ்வார்கட்குத் திருக்கோவலூரில் மிக்க ஈடுபாடென்பது விளங்குகின்றது. * 'அந்யோந்யம் கொண்டாடுகிற'வர்களாகச் சொல்லப்பட்ட ஆழ்வார்களுள் ஸர்வ கநிஷ்டரான திருமங்கை மன்னன் திருக்கோவலூர்க்குப் பதிகம் பாடுமிடத்து இவ்வரலாற்றினை அநுஸந்தித்திருக்குமழகு இங்கு வெளியிடப்படுகின்றது.

பெரிய திருமொழியில் திருக்கோவலூர்ப் பதிகத்தில் நான்காவது பாசுரத்தில் (2-10-4.) "ஆங்கரும்பிக் கண்ணீர் சோரந் தன்பு கூருமடியவர்கட்கு ஆரமுதமானான் றன்னை" என்றவிடத்தில் ஆசார்ய ஹ்ருதயத்தில் காட்டியருளப்பட்ட பரமரஹஸ்யார்த்தம் இங்கு விவரிக்கலாகிறது. அதில் மூன்றாம் ப்ரகரணத்தில் யோகத்திற்கு ஸ்வாபதேச மருளிச் செய்கிற "பூண்டநாள் சீர்க்கடலை யுட்கொண்டு" இத்யாதி சூர்ணையில் "அன்புகூருமடியவர்" என்றுள்ளதை வ்யாக்யானித்தருளாநின்ற மணவாள மாமுனிகள் "ஆங்கரும்பிக் கண்ணீர் சோர்ந்தன்பு கூருமடியவரான முதலாழ்வார்கள்" என்றருளிச் செய்திருப்பது குறிக்கொள்ளத்தக்கது. "ஆங்கரும்பிக் கண்ணீர் சோர்ந்தன்பு கூருமடியவர்கள்" என்கிற சந்தை திருமங்கையாழ்வாருடைய திருக்கோவலூர்ப் பதிகத்திலுள்ள தென்னுமிடம் மறக்கத்தக்கதன்று. அப்படிப்பட்ட அடியவர்கட்கு ஆரமுதமாக இருந்தவன் திருக்கோவலூரெம்பெருமானென்று [illegible]துள்ளது.

அங்கு அடியவர்கள் என்றது முதலாழ்வார்களே யென்று நம் பூருவாசாரியர்கள் [illegible] த்த திருவுள்ளம் பற்றி யிருந்தார்களென்றுமிடம் மணவாள மாமுனிகளின் [illegible] [illegible] தெற்றென விளங்குகின்றது. இந்த நிர்வாஹம் மிகுந்த உபபத்தியோடு கூடியது.

அடியவர்—அன்பு கூருமடியவர்—ஆங்கரும்பிக் கண்ணீர் சோர்ந்தன்பு கூருமடியவர் என்று வகுத்துக் கொள்ளவேணும். முந்துற 'அடியவர்' என்பது பேயாழ்வாரை. இவர் "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்ற முதற் பாசுரத்தில் எம்பெருமானுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தைத் தாம் காணப்பெற்றதாகப் பேசி, அந்த திவ்யமங்கள விக்ரஹத்துள் திருவடியொன்றே தமக்கு உத்தேச்யம் என்பதைத் தமது திருவந்தாதியில் ஆதி மத்ய அவஸானங்களில் வெகு அழகாகக் காட்டினார். "இன்றே கழல் கண்டேன்" என்றார் ஆதியில். "பைம் பொன் முடியா னடியிணைக்கே பூரித் தென்னெஞ்சே புகி" "முயன்று தொழு நெஞ்சே!...தண்ணலங்கல் மாலையான் தாள்" "கரியான் கழலே தெருள் தன்மேல் கண்டாய் தெளி" 'வாழும் வகையறிந்தேன்—எங்கள் பெருமானடி சேரப் பெற்று" என்று (நாற்பது முதலாக அறுபது ஈறான பாசுரங்களுள்) மத்யத்தில் பேசினமை காண்க. "குட்டத்துக் கோள் முதலை துஞ்சக் குறித்தெறிந்த சக்கரத்தான் தாள் முதலே நங்கட்குச் சார்வு" என்று அவஸானத்திலும் தாளையே பேசித் தலைக் கட்டினார். ஆக இங்ஙனம் எம்பெருமானது அடியையே சிக்கெனப் பற்றினவர் என்ற காரணத்தினால் பேயாழ்வார் அடியவராகக் கூறப்பட்டார்.

'அன்பு கூருமடியவர்' என்றது பூதத்தாழ்வாரை. எங்ஙனே யென்னில், (அன்பு கூரும் என்றது அன்புமிகுந்தவர் என்றபடி.) இவ் வாழ்வார் "அன்பே தகளியா" என்று தொடங்கி "வின்னின் காய் கன்றினால் வீழ்த்தவனே! என்றனளவன்றால் யானுடைய அன்பு" என்று முடிவு பாசுரத்தில் தமது அன்பு மிகுதியை வாய்விட்டுரைத்தவராதலால் அன்புகூருமடியவராக இவரே கருதத் தகுதியுடையவராவர்.

இனி, அரும்பிக் கண்ணீர் சோருமடியவர் பொய்கையாழ்வார். எங்ஙனே யென்னில், இவ்வாழ்வார் "பழுதே பலபகலும் போயின வென்று அஞ்சியழுதேன்" என்று தம் வாக்கினாலே பேசியருளினபடி அரும்பிக் கண்ணீர் சோர்ந்திருப்பவராதலால்.

ஆக இங்ஙனம் முதலாழ்வார்கள் மூவரையும் அழகாகக் குறிப்பிட்டு இவர்களுக்கு அமுதமாயிருந்தவன் அத்தலத்து நாதன் என்று கலியன் அருளிச் செய்தார்.

ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகனும் "அடியவர்கட்கு ஆரமுதமானான்" என்ற [illegible] [illegible] தேஹளீச ஸ்துதியில் (7) "காஸார பூர்வ கவி முக்ய விமர்த [illegible] [illegible] ஸ் தே" என்றருளிச் செய்தார். அமுதமென்று [illegible] என்றார் தேசிகன். பரம போக்யதையைப் பேசினபடி. [illegible] அடியவர்கட்கு ஆரமுதமானான் தன்னை யென்ற பாசுரத்திலேயே 'சுழாவரி வண்டிசை பாடும் பாடல் கேட்டுத் தீங்கரும்பு கண் வளரும் கழனி சூழ்ந்த" என்றதை நோக்கியே தேசிகனின் [illegible] அருளியது.

அடியவர்கட்கு என்ற ஸ்ரீஸூக்தியை ஊன்றி நோக்கினால், கலியன் இங்கு மூன்று திருநாமங்களை விவக்ஷித்திருக்கிறார் என்று நன்கு விளங்கும். அடியவன்; அடியவர், அடியவர்கள் என முப்பிரிவுடைமை காண்க.

அங்கு அடியவர்கள் என்றது முதலாழ்வார்களை யென்று நம் பூருவாசாரியர்கள் ஒருமிட்டுக் திருவுள்ளம் பற்றி யிருந்தார்களென்னுமிடம் மணவாள மாமுனிகளின் வியாக்கியானத்தினால் தெற்றென விளங்குகின்றது. இந்த நிர்வாஹம் மிகுந்த உபபத்தியோடு கூடியது.

அடியவர்—அன்பு கூருமடியவர்—ஆங்கரும்பிக் கண்ணீர் சோர்ந்தன்பு கூருமடியவர் என்று வகுத்துக் கொள்ளவேணும். முந்துற 'அடியவர்' என்பது பேயாழ்வாரை. இவர் "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்ற முதற் பாசுரத்தில் எம்பெருமானுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தைத் தாம் காணப்பெற்றதாகப் பேசி, அந்த திவ்யமங்கள விக்ரஹத்தின் திருவடி யொன்றே தமக்கு உத்தேச்யம் என்பதைத் தமது திருவந்தாதியில் ஆதி மத்ய அவஸாநங்களில் வெகு அழகாகக் காட்டினர். "இன்றே கழல் கண்டேன்" என்றார் ஆதியில். "பைம் பொன் முடியா னடியிணைக்கே பூரித் தென்னெஞ்சேபுரி" "முயன்று தொழு நெஞ்சே!...தண்ணலங்கல் மாலையான் தாள்" "கரியான் கழலே தெருள் தன்மேல் கண்டாய் தெளி" 'வாழும் வகையறிந்தேன்—எங்கள் பெருமானடி சேரப் பெற்று" என்று (நாற்பது முதலாக அறுபது சுருன பாசுரங்களுள்) மத்யத்தில் பேசினமை காண்க. "குட்டத்துக் கோள் முதலை துஞ்சக் குறித்தெறிந்த சக்கரத்தான் தாள் முதலே நங்கட்குச் சார்வு" என்று அவஸாநத்திலும் தாளையே பேசித் தலைக் கட்டினார். ஆக இங்ஙனம் எம்பெருமானது அடியையே சிக்கெனப் பற்றினவர் என்ற காரணத்தினால் பேயாழ்வார் அடியவராகக் கூறப்பட்டார்.

'அன்பு கூருமடியவர்' என்றது பூதத்தாழ்வாரை. எங்ஙனே யென்னில், (அன்பு கூரும் என்றது அன்புமிகுந்தவர் என்றபடி.) இவ் வாழ்வார் "அன்பே தகளியா" என்று தொடங்கி "விளவின் காய் கன்றினால் வீழ்த்தவனே! என்றனௗவன்றால் யானுடைய அன்பு" என்று முடிவு பாசுரத்தில் தமது அன்பு மிகுதியை வாய்விட்டுரைத்தவராதலால் அன்புகூருமடியவராக இவரே கருதத் தகுதியுடையவராவர்.

இனி, அரும்பிக் கண்ணீர் சோருமடியவர் பொய்கையாழ்வார். எங்ஙனே யென்னில், இவ்வாழ்வார் "பழுதே பலபகலும் போயின வென்று அஞ்சியழுதேன்" என்று தம் வாக்கினாலே பேசியருளினபடி அரும்பிக் கண்ணீர் சோர்ந்திருப்பவராதலால்.

ஆக இங்ஙனம் முதலாழ்வார்கள் மூவரையும் அழகாகக் குறிப்பிட்டு இவர்கட்கு அமுதமாயிருந்தவன் அத்தலத்து நாதன் என்று கலியன் அருளிச் செய்தார்.

ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகனும் "அடியவர்கட்கு ஆரமுதமானான்" என்ற பாசுரத்திலேயே நோக்காக தேஹளீசஸ்துதியில் (7) "காஸார பூர்வ கவி முக்ய விமர்த ஜந்மா பண்ணே தமேட்க்ஷுரஸ ஸ்பகஸ்ய ரஸோ பஹுரஸ தே" என்றருளிச் செய்தார். அமுதமென்று ஆழ்வாருளிச் செய்ததைக் கரும்பு என்றார் தேசிகன். பரம போக்யதையைப் பேசினபடி. * அடியவர்கட்கு ஆரமுதமானான் தன்னை யென்ற பாசுரத்திலேயே 'குழாவரி வண்டிசை பாடும் பாடல் கேட்டுத் தீங்கரும்பு கண் வளரும் கழனி சூழ்ந்த" என்றதை நோக்கியே தேசிகனிங்ஙனமருளியது.

அடியவர்கட்கு என்ற ஸ்ரீஸூக்தியை ஊன்றி நோக்கினால், கலியன் இங்கு மூன்று திருநாமங்களை விவக்ஷித்திருக்கிறார் என்று நன்கு விளங்கும். அடியவன்; அடியவர், அடியவர்கள் என முப்புரியூட்டினமை காண்க.

முதலாழ்வார்களின் திருநாமங்களை ஸ்பஷ்டமாகப் பேசிப் பாசுரம் பாடியிருக்கலாகாதோ வென்று சிலர் சங்கிப்பர்கள். வெளிப்படையாகக் கூறுவதிற் காட்டிலும் இவ்வகையாகக் கூறுவதே ரஸவத்தரம். ஆளவந்தார் நம்மாழ்வாரைத் துதிக்கப் புகுந்த "மாதா பிதா யுவதய:' என்கிற ச்லோகத்தில் நம்மாழ்வாரது திருநாமத்தைக் கூறிற்றிலர்; அந்த ச்லோகம் எம்பெருமான் விஷயமாகவே யிருக்கலாம் என்று கூட நினைக்கத்தக்க நிலைமையினுள்ளது. ஆயினும் வகுளாபிராமம் என்ற ஒரு விசேஷண ஸ்வாரஸ்யத்தினால் மாத்திரம் 'அந்த ச்லோகம் நம்மாழ்வார் விஷயமே என்று நிர்ணயிக்கலாகிறது. இங்ஙனே நுட்பமாகக் கண்டறிய வேண்டும்படி பேசுவது வக்தாக்களின் ஆழ்ந்த அறிவையும் பக்தியின் கனத்தையும் காட்டும்.

ஐப்பசித் திருவோணத்தில் ஸ்ரீகாஞ்சி புரியைச் சேர்ந்த திருவெஃகாவில் [ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமான் ஸன்னிதிப் புஷ்கரிணியில்] பொய்கையாழ்வாரது திருவவதாரம். இவரருளிச் செய்த திவ்யப் பிரபந்தம்—முதல் திருவந்தாதி 100 பாசுரம். ஐப்பசியில் அவிட்டத்தில் திருக்கடன் மல்லையில் பூதத்தாழ்வாரது திருவவதாரம். இவரருளிச் செய்த திவ்யப் பிரபந்தம் இரண்டாந் திருவந்தாதி 100 பாசுரம். ஐப்பசியில் சதயத்தில் * மாடமாமயிலையில் பேயாழ்வாரது திருவவதாரம். இவரருளிச் செய்த திவ்யப் பிரபந்தம் மூன்றாந் திருவந்தாதி 100 பாசுரம்.

## 4. பிள்ளைலோகாசார்யர்.

ஐப்பசியில் திருவோணத்தன்று அவதரித்த பரமகாருணிகரான இவ்வாசிரியரின் பெருமையைச் சிறிது பேசி மகிழ்வோம். இவருடைய ஜ்ஞாநாநுஷ்டானப் பெருமைகள் ஒருபுறமிருக்க, பரமகருணையின் திறத்தை என்னென்று பகர்வது! ஆசாரியர்கள் பொதுவாக இருவகைப்படுவர்கள்; 1. அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யர்கள் என்றும் 2. க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர்களென்றும். சிஷ்யர்கள் பலகால் துவண்டு வேண்ட அதனாலே அநுக்ரஹிப்பவர்கள் அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யர்களாவர். சிஷ்யப்ரார்த்தனையைச் சிறிதும் எதிர்பாராமல் தம்முடைய இயற்கையின்னருளால் தாமாகக் கனிந்து * பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும் செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்வான் * என்ற கணக்கிலே தம்பேறாக அநுக்ரஹித்தருள்பவர்கள் க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர்கள். நமது ஆசார்ய கோஷ்டியில் எம்பெருமானார் தாம் க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யரென்ற பட்டத்தை முதன்மையாகப் பெற்றவர். ஆயினும் அவர் ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்த விவரணமாக ஒரு க்ரந்தமும் அருளிச் செய்தாரல்லர். ப்ரஹ்மஸூத்ரங்களின் அர்த்தங்களை விவரிக்க மூன்று நூல்களையருளிச்செய்தவர் ரஹஸ்யார்த்த விவரணமாக ஒரு சிறு நூலாவது அருளிச் செய்திருக்கலாம். இன்னுமொரு திருக்கோலம் பூண்டு [அதாவது—மணவாளமாமுனிகளாக அவதரித்து] அப்போது அருளிச் செய்யவேணுமென்று திருவுள்ளம்பற்றியிருந்தமையாலே ஸ்ரீராமாநுஜரான அந்த அவதாரந்தன்னிலே ரஹஸ்யார்த்தங்களை எடுபடுத்தாமே சென்றனர்; ஸ்ரீபாஷ்யம் கீதாபாஷ்யம் முதலிய திவ்ய க்ரந்தங்களில் ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்தங்களும் ஆங்காங்குச் சேமிக்கப்பட்டேயிருந்தாலும் அவற்றைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டித் தாராத குறை குறையே. அக்குறை தீரவே ஸர்வஜ்ஞ ஸார்வபௌமரான இப்பிள்ளை யுலகாசிரியர் தாமே முதன்முதலாக ஸ்ரீவைஷ்ணவ மண்டலிக்கு மஹோபகாரஞ் செய்தருளினர். லோகாசார்யரென்கிற திருநாமம் இவர்க்கே தகும். இவ்விருள் தருமாஞாலத்தின் அகவிருளை அறவேயொழிக்கவல்ல

திவ்ய ஸ்ரீஸூக்திகளைத் தேனும் பாலும் நெய்யுங் கன்னலு மமுதுமாக அளித்தருளினவர் இம்மஹாசார்யர். இவருடைய ஸர்வஜ்ஞத்வமும் பரமகாருணிகத்வமும் பரம ப்ராமாணிகத்வமும் ஒவ்வொன்றும் நெஞ்சால் நினைப்பரிதே. ஒரு அர்த்தத்திலும் ஆக்ரஹமின்றிக்கே ஆசார்யபரம்பராப்ராப்தமான அர்த்தங்களையே அற்புதமாக அமைத்திருக்குமழகு இவருடைய க்ரந்தங்களுக்கே அஸாதாரணச் செல்வமாயிருக்கும். இவரருளிச் செய்த நூல்கள் அஷ்டாதச ரஹஸ்யமென்று ஸுப்ரஸித்தமாயிருக்கும்.

## 5. மணவாள மாமுனிகள்.

ஐப்பசியில் திருமூலத்தன்று அவதரித்தருளின இவ்வாசார்ய ஸார்வபௌமருடைய அமுதிலுமாற்றவினிய பெருமையை இன்று நாம் புதிதாகப் பேசப்போகிறோமோ? எத்தனை தடவை பேசினாலும் * அப்பொழுதைக் கப்பொழுதென்னாராவமுதமே * என்னும்படியாகவிருக்கும் இவர் பெருமை. எம்பெருமானார் அவ்வவதாரத்திலே சேஷித்திருந்த காரியங்களை நிறைவேற்றுவதற்கென்றே இங்ஙனேயொரு திருக்கோலம் மீண்டும் பூண்டபடி. பெரும்பாலும் வியாக்கியான க்ரந்தங்களை யருள்வதிலேயே இரண்டவதாரத்திலும் முழு நோக்கு. அத்யுக்தி அதிசயோக்தியென்னும்படியான வசனவ்யக்திகளைக் கனவிலு மறியாமை இரண்டவதாரத்திற்கும் அஸாதாரணம். மயங்கவைத்தல் வலிந்து கூறல் முதலிய குற்றங்களுக்குச் சிறிதும் இடம் தாராமே தெள்ளமுதெனும் திவ்யஸூக்திகளை அருளுந்திறன் இவ்விரண்டவதாரத்திலேயே கண்டதாகும்.

கீழே பிள்ளைலோகாசார்யரைப் பரமகாருணிகரென்று புகழ்ந்தோம். மணவாளமாமுனிகள் திருவவதரியாவிடில் அவருடைய பரமகாருணிகத்வமும் * கன்னலினுங் காட்டகத்தோர் வல்லிக் கடிமலரின் நன்னறுவாசம் மற்றாரானுமெய்தாமே மன்னும் வறுநிலத்து வாளாங்கு உகுத்ததுபோலாகுமத்தனை. அவ்வாசிரியர் அருளிய அஷ்டாதச ரஹஸ்யங்களுள் தலைசிறந்து விளங்கும் முமுக்ஷுப்படி தத்வத்ரயம் ஸ்ரீவசநபூஷணமென்னும் மூன்று ரஹஸ்யங்களுக்கு இவருடைய வியாக்கியானங்களில்லையேல் இம்மாஞாலம் இருள்தருமாஞாலமேயாம்.

இவர்க்கு விசதவாக் சிகாமணி யென்றொரு பிருதம் வழங்கிவருகின்றது. இதனை முதன் முதலாக அளித்த மஹாநுபாவர் யாரோ அறிகின்றிலோம். மருமமறிந்து அளித்த அந்த விருது இவ்வாசார்ய சிகாமணியொருவர்க்கேதான் ஏற்கும். நீறுபூத்த நெருப்பு என்ன நின்ற இவ்வாசிரியரின் திருவாக்குப்போல் இவ்வுலகில் இதுகாறும் கண்டதில்லையென்றால் இனிமேலா காணப்போகிறோம். இவருடைய திவ்யமங்கள விக்ரஹமும் திருவுள்ளமும் ஸத்வ குணமொன்றே வடிவெடுத்ததாயிருந்ததென்பது இவரது திருவாக்குக்களில் அக்ஷரந்தோறும் புலப்படாநின்றது. ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் வெகு அழகாகத் திருவுள்ளத்திலே யடக்கிக்கொண்டு நாட்பூ அலர்ந்தாற்போலே ஸ்ரீஸூக்திகளை எற்றக் குறைவின்றி அமைத்திருக்கிற அழகு என்னே! என்னே!! என்று உள்ளம் குழைகின்றதத்தனை. விமர்சசக்தி, நிருபணநைபுண்யம் என்றிங்ஙனே சொல்லும்படியான திறமையெல்லாம் மிக வியக்கும்படியான முறையில் இவர் தம்முடைய வியாக்கியான ஸ்ரீஸூக்திகளிலே தானுள்ளது.

பல சொல்லி என்? ஸாரமாக வொன்று சொல்லித் தலைக்கட்டுவோம். * அப்திர் லங்கித ஏவ வாநரபடை:......என்று முராரியென்கிற வொரு மஹாகவி சொல்லுகிறார். வாநா

வீரர்கள் கடலைக்கடந்து அப்பால் சென்று விட்டார்களெனினும் கடலின் ஆழத்தை அவர்கள் சிறிதும் அறியகில்லார்கள். கடலினுள்ளே பாதாளம் வரையில் அமிழ்ந்து கிடந்த மந்தர மலைக்கன்றோ அந்த ஆழம் தெரியும்—என்பது இந்த ச்லோகத்தின் கருத்து. ஜ்ஞாதாக்களென்று பேர்படைத்த மற்றவர்களெல்லோரும் வானரமுதலிகளின் ஸ்தானத்திலேயாய், மணவாளமாமுனிகளொருவரே மந்தர மலையின் ஸ்தானத்திலே யென்னக்கூடியவராகவுள்ளார். ஆசார்யனென்கிற சொல்லுக்கு மாமுனிகளொருவரே இலக்காமவர் என்றும், ஸூக்தி ஸ்ரீஸூக்தி திவ்யஸூக்தி திவ்ய ஸ்ரீஸூக்தி என்றிங்ஙனே சொல்லும் சொற்களெல்லாம் மாமுனிகளின் திருவாக்கையேதான் இலக்காகக் கொள்ளத்தக்கவை யென்பதும் [illegible] ஸித்தாந்தம்.

* செந்தமிழ் வேதியர் சிந்தை தெளிந்து சிறந்து [illegible] தருள் நற்கலை தேசு பொலிந்திடவும், மந்தமதிப்புவி மானிடர் தங்களை [illegible]திடவும், மாசறு ஞானியர் சேரெதிராசர்தம் வாழ்வு முளைத்திடவும், கந்த மலர்ப்பொழில் சூழ் குருகாதிபன் கலைகள் விளங்கிடவும் இந்த நிலந்தனில்வந்து உதயஞ்செய்த பரமாசாரியனன்றோ இவர். நமது ஆழ்வார்களும் ஆசாரியர்களுமெல்லாரும் ஒருங்கே திரண்டு அவதரித்த அவதாரமான இம் மாமுனிகளின் தனியனையும் வாழித் திருநாமங்களையும் இப்பாரதக்கண்டம் முழுவதும் அநுஸந்தித்து உஜ்ஜீவனம் பெறுகின்றது.

திருவாய்மொழிக்குச் சிறந்த வியாக்கியானமாக அமைந்த ஈடு முப்பத்தாறாயிரப்படியின் விசேஷார்த்தங்களை இவ்வாசிரியருடைய திருவாக்கினால் கேட்கப் பெறவேணுமென்று ஆவல் கொண்ட அரங்கநாதன் தனது ஸந்நிதியின் திருமுன்பே கருட மண்டபத்தில் எழுந்தருளியிருந்து ஸாதித்தருளவேணுமென்று இவர்க்குக் கட்டளையிட்டனன். அப்படியே ஒரு ஸம்வத்ஸரம் பகவத்விஷய ப்ரவசனம் நடந்துவர, ஸமாப்தி தினத்தில் ஸ்ரீரங்கநாதன் ஒரு சிறு குமாரனைத் திருவோலக்கத்திலே வந்து நின்று

“ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்,
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்”

என்கிற திவ்ய பத்யத்தைக் கைகூப்பி நின்று விஜ்ஞாபித்தனனென்பது இதிஹாஸப்ரஸித்தம். இந்தத் தனியனில் அமைந்திருக்கின்ற சொற்களின் அழகை ஆராய்ந்தால் இது தெய்வவாக்கேயன்றி மானிட வாக்கு அன்று என்பது அனைவருமிசையற்பாலதாகும். அவ்வழகினை இங்குச் சிறிது விவரிப்போம்.

## [1. ஸ்ரீசைலேச தயாபாத்ரம்]

“மாமுனி வேள்வியைக் காத்து அவபிரதமாட்டிய அடுதிறலயோத்தியெம்மரசே! அரங்கத்தம்மா!” என்கிறபடியே ஸ்ரீரங்கநாதனே விபவரூபேண ஸ்ரீராமபிரானாகத் தோன்றியிருந்தனனாதலால் அத்திருவவதாரத்தில் சைலேச தயாபாத்ரத்தை வணங்கியிருந்தானாயினும் ஸ்ரீசைலேச தயாபாத்ரத்தை வணங்கப் பெறவில்லை. சைலேச தயாபாத்ரமென்று ஸுக்ரீவனைச் சொல்லி, ஸ்ரீபதத்தினால் தத்வ்யாவ்ருத்தி பண்ணுகிறது. ஸ்ரீராமாயணம், கிஷ்கிந்தா காண்டத்தில் பதினோராவது ஸர்க்கத்தினால் ஸுக்ரீவ மஹாராஜர் சைலேச தயாபாத்ரபூதர் என்பது அறிக. அது எங்ஙனேயென்னில்; இங்கே சைலமாவது ரிச்யமூகபர்வதம். அதற்கு

வீரர்கள் கடலைக்கடந்து அப்பால் சென்று விட்டார்களெனினும் கடலின் ஆழத்தை அவர்கள் சிறிதும் அறியகில்லார்கள். கடலினுள்ளே பாதாளம் வரையில் அமிழ்ந்து கிடந்த மந்தர மலைக்கன்றோ அந்த ஆழம் தெரியும்—என்பது இந்த ச்லோகத்தின் கருத்து. ஜ்ஞாதாக்களென்று பேர்படைத்த மற்றவர்களெல்லோரும் வானரமுதலிகளின் ஸ்தானத்திலேயாய் மணவாளமாமுனிகளொருவரே மந்தர மலையின் ஸ்தானத்திலே யெண்ணத்கூடியவராகவுள்ளார். ஆசார்யரென்கிற சொல்லுக்கு மாமுனிகளொருவரே இலக்காமவர் என்றும், ஸூக்தி ஸ்ரீஸூக்தி திவ்யஸூக்தி திவ்ய ஸ்ரீஸூக்தி என்றிங்ஙனே சொல்லும் சொற்களெல்லாம் மாமுனிகளின் திருவாக்கையேதான் இலக்காகக் கொள்ளத்தக்கவை யென்றும் சிஷ்டசுகுபாதர்களின் விஸ்தாரத்தம்.

* செந்தமிழ் வேதியர் சிந்தை தெளிந்து சிறந்து மகிழ்ந்திடவும், சீருலகாரியர் செய்தருள் நற்கலை தேசு பொலிந்திடவும், மந்தமதிப்புவி மானிடர் தங்களை வானிலுயர்த்திடவும், மாசறு ஞானியர் சேரெதிராசர்தம் வாழ்வு முளைத்திடவும், கந்த மலர்ப்பொழில் சூழ் குருகாதிபன் கலைகள் விளங்கிடவும் இந்த நிலந்தனில்வந்து உதயஞ்செய்த பரமாசார்யரன்றோ இவர். நமது ஆழ்வார்களும் ஆசாரியர்களுமெல்லாரும் ஒருங்கே திரண்டு அவதரித்த அவதாரமான இம் மாமுனிகளின் தனியனையும் வாழித் திருநாமங்களையும் இப் பாத கண்டம் முழுவதும் அநுஸந்தித்து உஜ்ஜீவனம் பெறுகின்றது.

திருவாய் மொழிக்குச் சிறந்த வியாக்யானமாக அமைந்த ஈடு முப்பத்தாறுயிரப்படியின் விசேஷார்த்தங்களை இவ்வாசிரியருடைய திருவாக்கினால் கேட்கப் பெறவேணுமென்று ஆவல் கொண்ட ஸ்ரீரங்கநாதன் தனது ஸந்நிதியின் திருமுன்பே கருட மண்டபத்தில் எழுந்தருளியிருந்து ஸாதித்தருளவேணுமென்று இவர்க்குக் கட்டளையிட்டனன். அப்படியே ஒரு ஸம்வத்ஸரம் பகவத்விஷய ப்ரவசனம் நடந்துவர, ஸமாப்தி தினத்தில் ஸ்ரீரங்கநாதன் ஒரு சிறு குமாரனைத் திருவோலக்கத்திலே வந்து நின்று

> " ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்,
> யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம் "

என்கிற திவ்ய பத்யத்தைக் கைகூப்பி நின்று விஜ்ஞாபித்தனனுகை இதிஹாஸம் ப்ரஸித்தம். இந்தத் தனியனில் அமைந்திருக்கின்ற சொற்களின் அழகை ஆராய்ந்தால் இது தெய்வ வாக்கேயன்றி மானிட வாக்கு அன்று என்பது அனைவருமிசையற்பாலதாகும். அவ்வழகினை இங்குச் சிறிது விவரிப்போம்.

## [1. ஸ்ரீசைலேச தயாபாத்ரம்]

"மாமுனி வேள்வியைக் காத்து அவபிரதமாட்டிய அடுதிறலயோத்தியெம்மரசே! அரங்கத்தம்மா!" என்கிறபடியே ஸ்ரீரங்கநாதனே விபவரூபமான ஸ்ரீராமபிரானைத் தோன்றியிருந்தனனாதலால் அத்திருவவதாரத்தில் சைலேச தயாபாத்ரத்தை வணங்கி யிருந்தானாயினும் ஸ்ரீசைலேச தயாபாத்ரத்தை வணங்கப் பெறவில்லை. சைலேச தயாபாத்ரமென்று ஸுக்ரீவனைச் சொல்லி, ஸ்ரீபதத்தினால் தத்வ்யாவ்ருத்தி பண்ணுகிறது: ஸ்ரீராமாயண, கிஷ்கிந்தா காண்டத்தில் பதினொராவது ஸர்க்கத்தினால் ஸுக்ரீவ மஹாராஜர் சைலேச தயாபாத்ரபூதர் என்பது அறிக. அது எங்ஙனேயென்னில்; இங்கே சைலமாவது ருச்யமூகபர்வதம். அதற்கு

ஈசர்—மதங்கமுனிவர். அவருடைய தயைக்கு ஸுக்ரீவன் பாத்ரமாக இருந்தனன். துந்துபி யோடு போர்புரிந்த வாலியானவன் அவனது உடலைத் தூக்கி வீசியெறிந்தவளவில் அவனது வாயிலிருந்து ரத்த பிந்துக்கள் காற்றினால் தள்ளுண்டு மதங்கமாமுனியின் ஆச்ரமத்தில் போய்விழ, அது கண்டு கோபித்த அம்முனிவர், இத் தீய செயல் செய்தவன் வாலியென்று ஞானக்கண்ணாலுணர்ந்து அவ்வாலிக்குச் சாபமிட்டதும் அதுவே காரணமாக ஸுக்ரீவன் அம் முனிவருடைய அருளுக்கு இலக்கானதும் கொண்டு சைலேச தயாபாத்ரத்வம் ஸுக்ரீவனுக் குப் பொருந்தியது. எம்பெருமான் அவனை அடிபணிந்திருந்தானென்பது* ஸுக்ரீவம் சரணம் கத: * என்கிற ப்ரமாணத்தினால் ஸித்தம். சரணம் புகுந்தவிடத்தில் மநஸ்தாபமின்றிக்கே யிருக்கவேணுமே, ஸுக்ரீவன் விஷயபோகங்களிலே ஒருப்பட்டிருந்து குறிப்பிட்ட காலத் திலே வந்திலனாக, இளைய பெருமாளை யனுப்பித் தீவ்ர தண்டம் நடத்த நினைத்தமையை வெளியிட்டபடியாலே, அந்த சைலேச தயாபாத்ரனிடத்திலே முன்பு பணிந்து பின்பு வருந் தின குறைதீர இப்போது ஸ்ரீசைலேச தயாபாத்ர பூதரை வணங்கி வாழ்கின்றேனென்றதா யிற்று. திருமலையாழ்வாரென்கிற திருவாய்மொழிப்பிள்ளையின் இன்னருளுக்கு இலக்கான வர் மாமுனிகள் என்கை.

## [2 தீபக்த்யாதி குணார்ணவம்.]

ஸ்ரீராமனாக அவதரித்திருந்த அக்காலத்திலே ஸுக்ரீவன்காலிலே குனிந்ததுபோலவே, லவணார்ணவத்தின் காலிலும் குனிந்தமை யுத்தகாண்ட ப்ரஸித்தம். “ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணம் கந்துமர்ஹதி” என்ற விபீஷணாழ்வானுடைய வாக்கின்படி லவணார்ணவத்தை அடிபணிந்திருந்து அங்கும் மநஸ்தாபம் மிகுந்தது ஸுப்ரஸித்தம். * ஸாகரம் சோஷயிஷ் யாமி * என்று நிக்ரஹத்திலே யன்றோ ஒருப்பட்டது. அப்படியான குறை தீர அந்த லவ ணார்ணவத்தை விட்டு தீபக்த்யாதி குணார்ணவத்தை அடிபணிகின்றே னென்றதாயிற்று. ஞான பக்தி விரக்திகளுக்குக் கடல் மாமுனிகள் என்கை.

## [3. யதீந்த்ரப்ரவணம்]

யதீந்த்ரரென்று எம்பெருமானார்க்குத் திருநாமம். “அப்பனுக்குச் சங்காழியளித் தருளும் பெருமாள்” என்று போற்றப்படுகின்ற எம்பெருமானாரானவர், எம்பார் ஆண்டான் முதலானார்க்குத் திருவிலச்சினையளித்ததுபோலவே திருவேங்கடமுடையானுக்கும் திருவிலச் சினை யளித்ததாக இதிஹாஸமாகையாலே *மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள் சந்தி செய்ய நின்ற அரங்கத்தரவினணையான் யதீந்திரரிடத்திலும் சிஷ்ய வ்ருத்தி கொண்டிருந்தமை தேறிற்று. இராமாநுச நூற்றந்தாதியிலே * தன்னை யுற்றாட்செய்யுந்தன்மையினோர் * என்கிற பாசுரத்தைத் திருச்செவி சாத்தின பிறகு ‘யதீந்திரரிடத்திலே சிஷ்ய வ்ருத்தி செய் வதிற்காட்டிலும் யதீந்திரப்ரவணரானார் பக்கலிலே சிஷ்யவ்ருத்தி செய்வதே சிறந்தது என்று தோன்றினபடியாலே இப்போது யதீந்த்ர ப்ரவணரை அடிபணிகின்றமை மிகவும் பொருந்தும்.

## [4. ரம்யஜாமாதரம் முநிம்]

ராமாவதாரத்தில் விச்வாமித்ர முனிவன் பக்கலிலும், க்ருஷ்ணாவதாரத்தில் ஸாந்தீபனி முனிவன் பக்கலிலும் சிஷ்யவ்ருத்தி செய்திருந்து அவர்களிடத்திலே ஸம்ஸாரித்வ பூர்த்தி

யையே கண்டு திருவுள்ளம் நொந்திருந்தபடியாலே அக்குறைதீர, விரக்தாக்ரேஸரரான மணவாளமாமுனிகளை யடிபணிந்தேனென்கை.

விச்வாமித்ர முனிவனுடைய ஸம்ஸாரித்வம் அவனது கதைகளினால் விசதம். ஸாந்தீபநி முனிவனது ஸம்ஸாரித்வம் என்றைக்கோ மறிகடல்வாய் மாண்டொழிந்த மகனை மீட்டுத் தர வேணுமென்று விரும்பியதனால் விளங்கும்.



ஆக இப்படிப்பட்ட அர்த்த விசேஷங்களுக்கு ஸ்புடப்ரதீதி யுண்டாகும்படி சப்த ஸந்நிவேசங்களை அமைத்துத் தனியனிட்டு உலகங்களை உஜ்ஜீவிப்பித்தருளின அழகிய மணவாளனுக்கு ஆசிரியரான அழகிய மணவாளமாமுனிகளை அநுதினமும் சிந்தை செய்து அகமகிழ்வோமாக.



## 2. கார்த்திகை மாதம்.

இம்மாதத்தில் அவதரித்த ஆழ்வார்கள்—திருமங்கை மன்னனும் திருப்பாணாழ்வாரும். ஆசாரியர்கள்—அருளாளப்பெருமாளெம்பெருமானாரும் நம்பிள்ளையும்.

### 6. திருமங்கைமன்னன்.

கலியன், கலிகன்றி, வாள்வீசும்பரகாலன், ஆடல்மாவலவன், ஆலிநாடன், மங்கை வேந்தன், மங்கையர் கோன், திருமங்கையாழ்வார் என்றிவை முதலான பல திருநாமங்கள் இவர்க்குள்ளன. திருவாலி திருநகரியைச் சார்ந்த திருக்குறையலூரில் கார்த்திகை மாதத்துக் கார்த்திகை நன்னாளில் இவரது திருவவதாரம். "மாறன்பணித்த தமிழ் மறைக்கு மங்கையர்கோன் ஆறங்கங்கூறவவதரித்த" என்ற உபதேசரத்தினமாலையின் படியும், "வேத சதுஷ்டய அங்கோபாங்கங்கள் பதினாலும் போலே இவ்வாளுக்கும் இருந்தமிழ் நூற்புலவர் பனுவலாறும் மற்றை யெண்மர் நன்மாலைகளும்" என்ற ஆசார்யஹ்ருதய (43) சூர்ணையின்படியும் அறிய வேண்டிய விசேஷமொன்றுண்டு. வடமொழி வேதத்திற்கு அங்கங்களும் உபாங்கங்களும் இருப்பது போலே தமிழ் வேதத்திற்கும் அவையுள்ளன; ருக் யஜுஸ் ஸாமம் அதர்வணமென்கிற நான்கு வேதங்களுக்கும்—சிக்ஷா வியாகரணம் நிருக்தம் சந்தஸ் கல்பம் ஜ்யோதிஷம் என்கிற ஆறு அங்கங்களும் மீமாம்ஸா ந்யாய புராண தர்மசாஸ்த்ரங்கள் முதலிய உபாங்கங்கள் எட்டும் ஆகப் பதினான்கு உறுப்புக்கள் அமைந்திருப்பது போலவே, நம்மாழ்வாருளிச் செய்த திருவிருத்தம் திருவாசிரியம் பெரிய திருவந்தாதி திருவாய்மொழி யென்கிற தமிழ்மறை நான்கிற்கும் இத்திருமங்கையாழ்வாருடைய திவ்யப் பிரபந்தங்களாறும் மற்றையாழ்வார்கள் எண்மருடைய திவ்யப் பிரபந்தங்களும் அங்கோபாங்கங்களென்று ஸ்ரீமந்நாத முனிகள் முதலான பூருவாசாரியர்கள் அறுதியிட்டனர். இவ்வாழ்வாருடைய பெரிய திருமொழி, திருக் குறுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல், திருநெடுந்தாண்டகம் ஆகிய ஆறு பிரபந்தங்களும் ஆறு அங்கமாகக் கொள்ளப்பட்டன. வடமொழி வேதங்களுக்கு சிக்ஷா வியாகரணம் நிருக்தம் முதலியவை

அங்கமாகுந்தன்மையை பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் "சீக்ஷாயாம் வர்ணசிக்ஷா பதஸமதிகமோ வ்யாக்ரீயா நிர்வசோப்யாம்" இத்தியாதிச்லோகத்தினல் நிரூபித்துக் காட்டியிருப்பது போல நம்மாழ்வாருடைய தமிழ்மறைகளுக்கு இவ்வாழ்வாருடைய ஆறு பிரபந்தங்களும் அங்கமாகுந்தன்மையை நிரூபித்துக் காட்ட வேண்டாவோ வென்னில்; கேண்மின்; அங்காங்கிபாவ ஸமந்வயம் பலபடிகளால் பொருந்தும். ஸம்ஸ்க்ருத வேதங்களுக்கும் சிக்ஷை முதலியவற்றிற்கும் அங்காங்கி பாவம் எவ்விதமாகப் பொருந்தியிருக்கின்றதோ அவ்விதமாகவே இங்கும் பொருந்தவேணு மென்கிற நிர்ப்பந்தமில்லை. நம்மாழ்வாருடைய திருவுள்ளத்தைப் பெரும்பாலும் பின்பற்றியே இவ்வாழ்வார் அருளிச் செய்துள்ளாரென்பதுவே இங்கு முக்கியமாகக் குறிக்கொள்ளத் தக்கது. இதையிட்டே "மாறன்பணித்த தமிழ் மறைக்கு மங்கையர்கோன் ஆறங்கங்கூற" என்றது. ஸ்தாலீபுலாக நீதியாய்ச் சில விஷயங்களை நிரூபித்துக் காட்டுவோமிங்கு:—

திவ்விய தேசங்களுள் நம்மாழ்வார்க்கு எந்த திவ்விய தேசத்தில் அதிகமான அபிநிவேச மென்று ஆராயுங்கால், அது திருக்குடந்தையிலே யென்பது அறிய வெளிதாகும்; நம்மாழ்வார் இந்நிலத்திலிருந்து கொண்டே * சூழ்ந்து நின்ற மால் விசும்பில் தொல்லை வழி காட்ட, ஆழ்ந்ததனை முற்று மனுபவித்து—வாழ்ந்தங் கடியருடனே யிருந்தவாற்றை யுரை செய்தான், முடிமகிழ்சேர் ஞானமுனி * (திருவாய்மொழி நூற்றந்தாதி 99.) என்னும்படி பரமபதா நுபவத்தைச் செய்து அமைத்த * சூழ்விசும்பணி முகிற் பதிகத்தில் ஒரு திவ்ய தேசத்தைப்பற்றியும் ப்ரஸ்தாவஞ் செய்ய வேண்டிய அவசியம் இல்லாதிருக்கவும் (அப்பதிகத்தில் ஏழாவது பாசுரமாகிய) * மடந்தையர் வாழ்த்தலும் * என்கிற பாட்டில் "குடந்தையெங் கோவலன் குடியடியார்க்கே... தொடர்ந்தெங்கும் தோத்திரஞ் சொல்லினர்" [அதாவது, இந்த முக்தாத்மா திருக்குடந்தை யெம்பெருமானிடத்திலே குடிகுடியாக அடிமைப்பட்டவரென்று சொல்லிக் கொண்டு அங்குள்ளார் கொண்டாடினர்] என்று அருளிசெய்திருக்கையாலே திருநாட்டிலுங்கூட மறக்க முடியாதபடி நம்மாழ்வார்க்குத் திருக்குடந்தைப் பதியின் அனுபவம் செல்லுகின்றதென்று தெரிவதனால் இத்திருப்பதியே நம்மாழ்வாருடைய நிகரில்லாத அபிநிவேசத்திற்கு ஆஸ்பதமானதென்று அறுதியிடப்படும். அன்றியும் திவ்யப்பிரபந்தங்களெல்லாம் லோபமடைந்திருந்த வொரு காலவிசேஷத்தில் ஸ்ரீமந்நாத முனிகள் அவற்றைப் புநருத்தாரஞ் செய்வதற்கு, திருக்குடந்தைப்பதி விஷயமான * ஆராவமுதே யென்கிற திருவாய்மொழியே மூல காரணமாயிற்றென்று ஐதிஹ்ய மிருப்பதனுலும் மேலே குறித்த விஷயம் ஊர்ஜிதமாகும். இதற்குச் சேரவே திருமங்கையாழ்வார் தாம் திருமொழி பாடத் தொடங்கும் போதே "தூவி சேரன்னம் துணை யொடும் புணருஞ் சூழ்புனற் குடந்தையே தொழுது" என்றும் "சொற்பொருளாளீர் சொல்லுகேன் வம்மின் சூழ்புனற் குடந்தையே தொழுமின்" என்றும் அருளிச் செய்து, சரமப் பிரபந்தமாகிய திரு நெடுந்தாண்டகத்தின் முடிவிலும் "தண் குடந்தைக் கிடந்த மாலை நெடியானையடிநாயேன் நினைந்திட்டேனே" என்று திருக் குடந்தையையே பேசித் தலைக்கட்டினுர். அன்றியும் திருக்குடந்தைக் கென்றே தனிப் பிரபந்தமு மொன்று [திருவெழுகூற்றிருக்கை] திருவாய் மலர்ந்தருளினார்.

அர்ச்சாவதாரம் நிற்க; விபவாவதாரங்களுள் எவ்வவதாரத்தில் நம்மாழ்வார்க்கு மிகுந்த அபிநிவேசமென்று ஆராயுங்கால், முதற் பிரபந்தமான திருவிருத்தத்தில் "பெருங் $ கேழலார் தம் பெருங்கண் மலர்ப்புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழ வைத்தார்" என்றும், "ஏனத்துருவாயிடந்த—ஞானப் பிரானையல்லாலில்லை நான் கண்ட நல்லதுவே" என்றும் அருளிச்செய்து * அவாவற்று வீடு பெறுவற்கு முன்னே "கோலவராக மொன்றாய் நிலங் கோட்டிடைக் கொண்ட எந்தாய்!—உன்னைப் பெற்றினிப் போக்குவனோ?" என்று சொல்லித் தலைக்கட்டுகையாலே ஸ்ரீவராஹ நாயனார் பக்கலிலே நம்மாழ்வார்க்கு நல்லன்பு என்று தெரியலாகும். இதற்குச் சேரவே திருமங்கையாழ்வார் தாம் திருமொழி தொடங்குகையில் விபவாவதாரத்தைப் பற்றி வாய்திறக்கும் போதே "பன்றியாயன்று பாரகங் கீண்ட பாழியானாழியானருளே, நன்று நானுய்ய நான் கண்டு கொண்டேன்" என்று ஸ்ரீவராஹநாயனாரையே பேசியருளினர்.

நம்மாழ்வார் தமது திருவுள்ளத்தில் ஆராத்ய தேவதையாகக் கொண்டது தேவப்பெருமாளையே என்பது—முதற் பிரபந்தத்தின் முதற் பாசுரத்தில் "இமையோர் தலைவா! மெய்ந்நின்று கேட்டருளாய் அடியேன் செய்யும் விண்ணப்பமே" என்றதனாலும், சரமப்பிரபந்தத்தின் முதற் பாசுரத்தில் "அயர்வறுமமரர்களதிபதியவனவன் ‡ துயரறு சுடரடி தொழுதெழென்மனனே!" என்றதனாலும் தேறநிற்கும். இதற்குச் சேரவே இவ்வாழ்வார் தமது திருமொழியில் "ஆணியினியுனக்குச் சொல்லுவன் மனமே! தொழுதெழு—அமரர் பெருவிசும்பருளும் பேரருளாளனெம்பெருமான்" என்று பணித்தார். நம்மாழ்வாருடைய * தொழுதெழென்மனனே போலவே இவருடைய * தொழுதெழுமனமேயும் பேரருளாளன் விஷயத்திலேயே அமைந்த அமைதி நோக்கத்தக்கது.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் * மாசறு சோதிப் பதிகத்தில் மடலூர்தலை ப்ரஸ்தாவித்து விட்டார்; இவ்வாழ்வார் அதற்கென்று தனிப்பட 'சிறிய திருமடல், பெரிய திருமடல்' என இரண்டு பிரபந்தங்களைப் பணித்தருளினர்.

நம்மாழ்வார் திருவாசிரியத்தில் "நளிர்மதிச் சடையனும் நான்முகக்கடவுளும்...முழுவது மகப்படக் கரந்து ஓராலிலைச் சேர்ந்த எம்பெருமாமாயனை யல்லது ஒருமா தெய்வம் மற்றுடையமோ யாமே" என்று ஒரு பாசுரத்தினால் சுருங்கவருளிச் செய்த விஷயமொன்றை இவ்வாழ்வார் தமது திருமொழியில் (11-6.) * மைந்நின்ற கருங்கடல்வாயுலகின்றி * என்ற வொருபதிகத்தினால் விரியவுரைத்தருளினர். இங்ஙனே பெரியார்வாய்க் கேட்டறிய வேண்டிய பல பல விஷயங்கள் இங்குப் பொருத்தமாக உணரத்தக்கன.

இவ்வாழ்வார் திருவரங்கம் பெரிய கோயிலிலே மிகப் பெரிய திருப்பணிகள் பல செய்தருளினர். அதைப்பற்றி பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் அருளிச் செய்யுமிடத்து * ஜிதபாஹ்யஜிநாதி மணிப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணிமண்டப வப்ரகணாந் விததே பரகாலகவி: ப்ரணமேமஹி தாந் * என்றருளிச் செய்தார். இந்த ச்லோகமமைந்த

$ பெருங்கேழலார்—மஹாவராஹப் பெருமான். கேழல்—வராஹம்.

‡ துயரறுசுடரடி யென்றது—ப்ரணதார்த்திஹரத் திருநாமத்திற்குச் சேர-

அழகு வெகு அற்புதமானது. இதன் கருத்தைச் சிறிது விளக்குவோம். ஆழ்வார்களுடைய திருவவதாரம் அவைதிகர்களையும் வைதிகர்களாக்குவதற்காக. திருமங்கை யாழ்வாருடைய திருவவதாரத்தினால் இவ்வர்த்தம் நன்கு விளங்கிவிட்டது. மற்றை யாழ்வார்கள் அவைதிகர்களாயிருந்த சேதநர்களை மாத்திரமே வைதிகர்களாக்கிக் கொண்டார்கள். இவ்வாழ்வார் அவைதிகங்களாயிருந்த அசேதநங்களையுங்கூட வைதிகங்களாகத் திருத்திப் பணிகொண்டாரென்பது தன்னேற்றம். அவைதிகங்களாயிருந்த ஜைந பௌத்த விக்ரஹங்களையும் இவ்வாழ்வார் வைதிகங்களாக ஆக்கிவிட்டாரன்றோ. பகவத் பாகவத விஷயங்களில் விநியோகிக்கப் பெறுவதே வைதிகத்வமாகும். (வரலாறு—) இவ்வாழ்வார் திவ்ய தேசயாத்திரையாக எழுந்தருளுமளவிலே திருவரங்கஞ் சேர்ந்து அழகியமணவாளன் பக்கலிலே மிக்க ஈடுபாடு கொண்டு பல திருமொழிகள்பாட, அது கேட்டுத் திருவுள்ள முகந்து அப்பெருமான் திருமுகமலர்ச்சியோடு ஆழ்வாரைக் குளிர நோக்கி 'நமக்கு விமானம் மண்டபம் கோபுரம் பிராகாரம் முதலிய கைங்கரியங்களைச் செய்யும்' என்று கட்டளையிட்டருள, ஆழ்வார் அவ்வாணையைச் சிரமேல் தாங்கி அங்ஙனமே திருப்பணி புரிய விரும்பித் தமக்கு அந்தரங்கரான மந்திரிகள் நால்வரையுமழைத்து ரஹஸ்யமாக விருந்து 'ஸ்ரீரங்கநாதனுக்குத் திருமதிள் திருமண்டபங்கள் தொடக்கமான கைங்கரியங்களைப் பண்ணுதற்குப் பொருளீட்டுமாறு என்ன வுபாயம் செய்யலாவது?' என்று ஆலோசிக்கிற வளவிலே, மந்திரிகள் 'நாகப்பட்டணத்தில் பொன்மயமானதொரு புத்த விக்ரஹம் பௌத்தர்களால் அமைக்கப்பட்டதோராலயத்தில் அவர்களின் கொண்டாட்டத்திற்கு இலக்காயுள்ளது; அதனைக் களவாடிக் கொண்டுவந்திடுவோமாயின் பல திருப்பணிகளையும் நடத்தி முடிக்கச் சிறிதும் பொருட்குறைபாடு இராது' என்று உபாயங் கூறவே ஆழ்வார் அங்ஙனமே வெகு தந்திரமாக அவ்விக்ரஹத்தை அபஹரித்து உருக்கி அந்தப் பொன்னை விலைப்படுத்திப் பெற்ற பொருளால் பல திருப்பணிகளை நிறைவேற்றியருளினர் என்றுணர்க.

இவ்வாழ்வாருடைய கவித்திறம் "சதுஷ்கவி ப்ரதாநாய பரகாலாய மங்களம்" என்றதனால் மிகவிளங்கும். ஆசு கவி, மதுர கவி, சித்ர கவி, விஸ்தார கவி—என்று நால்வகைப்பட்ட கவிகளிலும் இவர் வல்லவரென்பது இவரது ஆறு பிரபந்தங்களினாலும் அறிய வெளிதாகும். அந்த திவ்ய ஸூக்திகளின் பதவுரை பொழிப்புரை விசேஷ வுரை ஸ்வாபதேச வுரை முதலியன யாவும் அடியேனுடைய திவ்யார்த்த தீபிகையுரையின் வாயிலாக அறியத்தக்கன.

## 7. திருப்பாணாழ்வார்.

இவர் கார்த்திகையில் உரோகிணி நாளில் உறையூரிலுதித்தருளினர். இவரது சரித்திரவரலாறு நாடு நகரமும் நன்கறிந்ததே. இவர் அவதார புருஷராயிருக்கச் செய்தேயும் தம்முடைய சாதியியல்வுக் கேற்ப சாஸ்திரமரியாதை வழுவாது வர்த்தித்து வந்தார். இவர் லோகஸாரங்கரானவர் உத்தமவ்யக்தி யென்பதை உலகுக்குக் காட்ட விரும்பிய ஸ்ரீரங்கநாதன் முனிவாஹனரென்று இவர்க்குத் திருநாமம் நீடூழிவிளங்குமாறு செய்து லோகஸாரங்கமஹாமுனிகளென்கிற ஒரு உத்தமாச்ரமியின் திருத் தோள் வழியாக இவரைத் தம்பக்கல் வரவழைத்துக் கொண்டார். கொண்ணியரங்கன் என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்

னினைக் காணவே" என்று பாசுரம்பாடித் தலைக்கட்டினவுடனே இவர் தனது திருமேனியிலேயே லயிக்கும்படி செய்துகொண்ட அற்புதம் இவர்க்குத் தனிப்பட்ட அதிசயமாகும்.

ஆண்டாள் திருப்பாவையில் * புள்ளுஞ் சிலம்பின காண் * என்ற ஆறாவது பாசுரம்முதற் கொண்டு பத்துப் பாசுரங்களினால் ஆழ்வார்கள் பதின்மரையும் எழுப்புவதாக ஒரு அநுபவமுண்டே; அதில் "உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்" என்ற (14) பாசுரம் இத்திருப்பாணாழ்வாருடைய வைபவங்களை வெகு அழகாக விவரித்துள்ள தென்பதும் இங்கு அறியத்தக்கது. [அதைச் சிறிது விவரிக்கிறோம்.] இப்பாசுரத்தில், நங்காய்! நாணாதாய்! நாவுடையாய்! என்ற மூன்று விளிகளும் இவ்வாழ்வார்க்கு நன்கு பொருந்தும். நங்காய்! என்றது குணபூர்த்தியுள்ளவரே! என்றபடி. அழகிய மணவாளனுடைய நியமனத்தினால் லோகஸாரங்க மஹாமுனிகள் வந்து என் தோளின் மீது ஏறிக் கொள்ளும் என்ன, "தேவரீர் எங்கே, நானெங்கே? நீசனேன் நிறையொன்று மிலேனென்று கிடக்கிற அடியேன் தேவரீருடைய அருகிலும் வரத்தகாதே" என்று சொல்லி இருந்து ஓடாமல் தம்முடைய அத்யந்த பாரதந்த்ரியஸ்வரூபத்தை நினைத்து அதற்கு உடன்பட்டதானது இவருடைய குணபூர்த்தியை நன்கு விளக்கும். அங்ஙனம் அந்தணர் தலைவரான அம்முனிவரது தோளின் மீது ஏறியிருக்கச் செய்தேயும் சிறிதும் செருக்குக் கொள்ளாமல் * அடியார்க் கென்னையாட்படுத்த விமலன் * என்றே பேசினவராதலால் நாணாதாய்! என்ற விளியும் மிகப் பொருந்தும். (நாண்—அஹங்காரம்.) "பாண் பெருமாள் பாடியதோர் பாடல் பத்தும் பழமறையின் பொருளென்று பரவு மின்கள்" என்று வேதாந்த தேசிகர் அருளியபடியே ஸகல வேதார்த்தங்களையும் பத்துப் பாசுரத்திலே அடக்கிப் பேசின பரம சதுரராதலால் நாவுடையாய்! என்ற விளியும் இவர்க்கே மிகப் பொருந்தும். அமலனாதி பிரானில் "கையினார் சுரிசங்கன லாழியர்" என்று சங்கொடு சக்கர மேந்தின அழகையும் "கரியவாகிப் புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப் பெரிய வாய கண்கள் என்னைப் பேதைமை செய்தனவே" என்று பங்கயக் கண்களின் பெருமையையும் இவ்வாழ்வார் சிறக்கப் பேசின படியால் அதற்குச் சேர "சங்கொடு சக்கர மேந்துந் தடக்கையன் பங்கயக் கண்ணனைப் பாட" என்றது. இவ்வாழ்வார் தமது சாதி நிலைமைக்கு* ஏற்ப வாழ்ந்த விடத்தைக் காட்டுவது "உங்கள் புழைக் கடைத் தோட்டத்து வாவியுள்" என்றது. அங்கே லோகஸாரங்க மஹாமுனிகள் வாயைத் திறந்து பழிப்பேசினதும் இவ்வாழ்வார் தமது அபராதத்திற்கு நொந்து வாயை மூடியிருந்ததும் தொனிக்க "செங்கழுநீர் வாய் நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்பின காண்" என்றது. அந்த லோக ஸாரங்க மஹாமுனிகளின் தன்மையைக் காட்டுவது "செங்கற்பொடிக் கூறை வெண்பல் தவத்தவர்" என்பது. அவர் இவரைக் கோயிலுக்குள்ளே கொண்டு போனதைத் தெரிப்பது "தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்றார்" என்பது. "எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும் நங்காய்"! என்றதில் ஒரு அழகிய பொருள் தொனிக்கும்: அதாவது—எழுப்புவதாவது தூக்கிக் கொள்வது; எங்களை யென்றது—பாகவதர்களை யென்றபடி. பாண் பெருமாளே! உம்முடைய முதற் பாசுரத்தில் "அடியார்க் கென்னையாட் படுத்த விமலன்" என்ற சொல்நயத்தை நோக்குங்கால் பாகவதர்களை நீர் தோளில் தூக்கிக் கொண்டாடுபவர்போலத் தெரிகின்றது; ஆனால் உமது கதையோ இதற்கு எதிராக வுள்ளது. மஹாபாகவதரான லோக ஸாரங்க மஹாமுனியின் தோளின்மீதேறி யன்றோ

யிருந்தீர்; ஆகவே முந்துற முன்னம் பாகவத சேஷத்வத்தை நீர் சொல்லிக் கொண்டது, அப் பேச்சு மாத்திரமே போதும்! என்று விநோதமாகக் கூறுகிறபடி.

## 8. அருளாளப் பெருமாளெம்பெருமானார்.

இவர் கார்த்திகை மாதத்துப் பரணி நக்ஷத்திரத்தில் தோன்றியவர். இவர் அத்வைத மதஸ்தராயிருந்து எம்பெருமானாராலே திருத்திப் பணி கொள்ளப் பெற்றவர். (அந்த வரலாறு வருமாறு.)

யஜ்ஞமூர்த்தி யென்னுமொரு மாயாவாதி ஸந்ந்யாஸி எம்பெருமானாருடைய வைபவங்களைக்கேட்டு அவரோடே தர்க்கித்துவெற்றிபெறவேணுமென்று விரும்பிக் கோயிலிலே ஸ்வாமி மடத்திலே வந்து ஸேவித்து 'நான் கேட்கிற கேள்விகளுக்கெல்லாம் நீர் விடை கூற வேணும்; தருக்கிரமமாக விடைபெற்றேனாகில் உமக்கு சிஷ்யனாகக்கடவேன்' என்று சொல்ல, ஸ்வாமியும் இசைந்தருள, பதினேழு நாள் வரையில் வெற்றி தோல்வியின்றியே வினாவிடை செல்லாநிற்க, முடிவில் உத்தரமருளிச் செய்யவேண்டிய பொறுப்பு ஸ்வாமிக்கு தலையிலே வந்துநின்று விஷயம் தோன்றாமேயிருக்கையில் 'நாளைக்கு ஆகிறது' என்று சொல்லி ஸபாவிஸர்ஜநமாயிற்று. பிறகு ஸ்வாமியின் திருவுள்ளம் மிகவும் வியாகுலப்பட்டு தம் திருவாராதனமான பேரருளாளரைத் திருவடி விளக்கி அமுது செய்யப்பண்ணி 'ஆழ்வார் தொடங்கி ஆளவந்தாரளவாக இத்தனை காலம் ஒரு குறையுமின்றியே விளங்கிவந்த இந்த தரிசனம் இன்று அடியேனால் பங்கமடையக்கடவதோ? இப்படியும் ஒரு லீலை கொண்டாடத் திருவுள்ளமாயிற்றோ?' என்று விண்ணப்பஞ்செய்து தாமும் அமுது செய்யாமலே கண்வளர்ந்தருள, அன்றிரவு பேரருளாளர் கனவிலே யெழுந்தருளிக் காட்சி தந்து மாயாவாதியின் வாயடங்கும்படியான சில அர்த்தவிசேஷங்களை ஸ்புரிக்கச்செய்து மறைய, ஸ்வாமியும் சிற்றஞ்சிறு காலையெழுந்து பரமஸந்துஷ்டராய் நித்யாநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு ப்ரஸங்கம் பிராய் விசாரகோஷ்டிக்கு எழுந்தருள, அவ்வளவிலேயே யஜ்ஞமூர்த்தி இன்று நமக்குத் தோல்வியே திண்ணமென்று நிச்சயித்து அப்போதே யெழுந்து ஸ்வாமி திருவடிகளிலே ஸாஷ்டாங்க ப்ரணாமம் பண்ணி நின்று 'அடியேனை அங்கீகரித்தருளவேணும்' என்று கை கூப்பிப்ப்ரார்த்திக்க, 'மேலே விஷய விசாரம் நடைபெறவேண்டியிருக்க இதுவென்?' என்று ஸ்வாமி கேட்க, அதற்கு யஜ்ஞமூர்த்தி 'ஸ்வாமிந்! தேவரீருக்குப் பெரியபெருமாள் ப்ரத்யக்ஷமானபின்பு தேவரீரென்றும் பெருமாளென்றும் வாசியுண்டோ? இனி அடியேன் தேவரீர் ஸந்நிதியில் வாய்திறந்து ஒரு வார்த்தை சொல்ல ப்ராப்தியில்லை; இந்த ஆத்மா இதுவரையில் அநர்த்தப்பட்டதுபோதும்; இனியும் அநர்த்தப்படாதபடி நோக்கியருளவேணும்' என்று கனக்க ப்ரார்த்தித்து ஸ்வாமியின் இசைவும் பெற்று அப்போதே ஏகதண்டத்தை முறித்தெறிந்து ப்ராயச்சித்த பூர்வகமாய் சிகாயஜ்ஞோபவீதங்களையும் பஞ்சஸம்ஸ்காரங்களையும் பெற்று முக்கோல்பிடித்த முனியாகி சாஸ்த்ரப்படி ஆசார்யனுடைய நாமத்தையே வஹிக்க விரும்பி ப்ரார்த்திக்க, ஸ்வாமியும் பேரருளாளனுடைய ப்ரஸாதமடியாகவே இவர் ஆட்பட்டாரென்கிற உபகார ஸ்ம்ருதி உலகப்ரஸித்தமாம்படி அருளாளப் பெருமாளெம் பெருமானார் என்று திருநாமம் சாத்தியருளினார். உடனே அவரை யழைத்துக்கொண்டு போய்ப்

நீரிருந்தீர்; ஆகவே முந்துற முன்னம் பாகவத சேஷத்வத்தை நீர் சொல்லிக் கொண்டது; வாய் பேசுமத்தனையே போலும்! என்று விநோதமாகக் கூறுகிறபடி.

## 8. அருளாளப் பெருமாளெம்பெருமானுர்.

இவர் கார்த்திகை மாதத்துப் பரணி நக்ஷத்திரத்தில் தோன்றியவர். இவர் அத்வைத மதஸ்த்தராயிருந்து எம்பெருமானுராலே திருத்திப் பணி கொள்ளப் பெற்றவர். (அந்த வரலாறு வருமாறு.)

பெரிய பெருமாளை ஸேவிக்கப்பண்ணிச் சிறப்புகளும் பெறுவித்து, அன்று முதலாகவே திருப்பல்லாண்டு தொடங்கி நாலாயிரமும் ஓதுவித்து, மற்றும்தத்வசிக்ஷைகளும் செய்வித்தருளினர்.

அக் காலத்திலே, அனந்தாழ்வான் எச்சான் தொண்டனூர் நம்பி மருதூர் நம்பி என்னுமிவர்கள் எம்பெருமானார் திருவடிகளிலே ஆச்ரயிக்க வேணுமென்று வர, ஸ்வாமி அவர்களை அருளாளப் பெருமாளெம் பெருமானார் திருவடிகளிலே ஆச்ரயிப்பித்தருளினர். அப்போது அவர் அஞ்சி நடுங்கி அவ்வடியார்களை நோக்கி “குருவியின் கழுத்திலே பனங்காயைக் கட்டினாப் போலே ஸ்வாமி செய்தருளினாராகிலும், நீங்கள் ஸ்வாமி திருவடிகளே சரண மென்றிருங்கள்” என்று நியமித்தருளினர்.

## 9. நம்பிள்ளை.

கூரத்தாழ்வான் திருக்குமாரரான பட்டராலே திருத்திப் பணிகொள்ளப்பட்டு அவரையல்லதறியாதே அவர்தம்மையே பரதெய்வமாகக் கொண்டிருந்தவர்களில் தலைவர் நஞ்சீயர். அவருடைய திருவடிகளிலே ஆச்ரயித்தவர்களில் தலைவர் நம்பிள்ளை. இவர்க்கு இயற்கையான திருநாமம் ‘நம்பூர் வரதராஜாரியர்’ என்பது. ஸ்வாசார்யரான நஞ்சீயர் உகந்து சாத்தின திருநாமம் நம்பிள்ளையென்பது. அந்தத் திருநாமம் சாத்துகைக்கு அடியென்னென்னில்; நஞ்சீயர் பட்டருடைய நியமனப்படி திருவாய்மொழியின் திவ்யார்த்தங்களை ப்ரவசனஞ் செய்வதையே போது போக்காகக் கொண்டு வாழ்ந்துவந்தார் திருவரங்கம் பெரியகோயிலில். அவருடைய காலக்ஷேப கோஷ்டியில் அந்வயித்திருந்தவர்களில் நம்பூர் வரதராஜாசார்யரும் ஒருவராயிருந்து வந்தார். இவர் நீறுபூத்த நெருப்புப்போல இருந்துவந்தபடியாலே இவருடைய ஞான வைபவம் முதலிய பெருமைகளை விசேஷித்து யாரும் அறியாதிருந்தனர்.

இப்படியிருக்கையில், நஞ்சீயர் திருவாய்மொழிக்குத் திருக்குருகைப்பிரான் பிள்ளானுடைய ஆறாயிரப்படியிற் காட்டிலும் சிறிது விரிவாக வொரு வியாக்கியானமிடும்படி பட்டருடைய நியமனம் பெற்றிருந்ததனால் ஒன்பதினாயிரப்படி யென்றொரு வியாக்கியானம் இட்டருளியிருந்தார்: அதைச் செவ்வையாகப் பட்டோலைகொள்ள வல்லாரிடம் கொடுத்து எழுதுவிக்க வேணுமென்று கருதி இதற்குத் தகுந்தவர்கள் யாரேனு முளரோவென்று அந்தரங்கர்களை விசாரிக்கையில் ‘நம்பூர் வரதராஜாசார்யரென்றொருவர் ஸ்வாமியின் காலக்ஷேப கோஷ்டிக்குத் தவறாது வருகின்றாரே; அவர் நல்ல விரகர்; எழுத்திலும் வல்லவர்; அவரைக் கொண்டு இப்பணியை நிறைவேற்றிக் கொள்ளலாமே’ என்று கூறினார்கள். பிறகு அவரை அருகே வரவழைத்து ஆராய்ந்து பார்க்கையில் அவருடைய யோக்யதை ஒப்புயர்வற்றதென்று தெரியவந்தது; அதனால் உள்ளம்பூரித்து அவர்பால் விசேஷ கடாக்ஷம் செய்தருளித் தம்முடைய ஒன்பதினாயிரப்படியை வரியடைவே அவர்க்கு ப்ரவசனமும் செய்து அதை யெழுதித் தரும்படி ஸ்ரீகோசத்தை அவரிடம் கொடுத்தார். அதைப் பெற்றுக் கொண்டவர் தம்மூருக்குச் சென்று எழுதிக்கொண்டு வருவதாகச் சொல்லிப் போகையில் திருக்காவேரியில் நீஞ்சிச் செல்ல நேர்ந்தது. அப்போது திருமுடியில் கட்டிக்கொண்ட அந்த ஸ்ரீகோசம் நெகிழ்ந்து விழுந்து வெள்ளத்திற் போய்விடவே, இப்படி அபசாரமாய்த் தலைக்

கட்டிற்றே யென்று வருந்த நேர்ந்தது. ஆனாலும் இவர்தாம் அந்த வியாக்கியானத்தை ஸ்வாசார்யர் திருவடிகளிலே வரியடைவே கற்றிருந்தபடியாலும் அவருடைய கருணைகடாக்ஷத்தை விசேஷித்துப் பெற்றிருந்தபடியாலும் அவருடைய திருவடிகளைச் சிந்தித்துக் கொண்டே பட்டோலை கொள்ளத் தொடங்கி விரைவில் எழுதி முடித்து ஸ்ரீகோசத்தை நஞ்சீயர் திருவடிகளிலே கொண்டு வைத்தார். 'நாம் கொடுத்த ஏடு எங்கே?' என்று அவர் கேட்கவே நடந்தது நடந்தபடியே விண்ணப்பஞ் செய்ய வேண்டியதாயிற்று. பிறகு நஞ்சீயர் ஸ்ரீகோசத்தை அவிழ்த்துக் கடாக்ஷிக்கையில், தாமருளிச் செய்த ஸ்ரீஸூக்திகள் விடாமலும் தம்மிடம் அவர் கேட்டிருந்த சில அர்த்த விசேஷங்களும் பொருந்தமாக அமைந்தும் விரிவுமில்லாமல் இருந்த அழகுக்கு மிகவுகந்து 'வாரீர் நம்முடைய பிள்ளையே!' என்று எடுத்தணைத்துக் கொண்டார். அது முதலாக நம்பிள்ளை யென்றே இவர் வழங்கப் பெற்று வாந்தார். **திருக்கலிகன்றி தாஸர்** என்பதும் இவர்க்கு நஞ்சீயர் சாத்தின திருநாமம்.

இவருடைய ஞானவைபவத்தைப் பற்றி நாம் விரிவாக எழுத வேண்டுமோ? பெரிய திருமொழி வியாக்கியானத்தில் (5-8-7) * ஓதுவாய்மையு முவனியப் பிறப்பு முனக்கு முன் தந்த அந்தணனொருவன் * என்ற விடத்து. "முற்பட த்வயத்தைக் கேட்டு இதிஹாஸபுராணங்களையும் அதிகரித்துப் பர க்ஷ ப்ரதிக்ஷேபத்துக்குடலாக ந்யாயமீமாம்ஸைகளுமதிகரித்து, போதுபோக்கும் அருளிச்செயலிலேயாம் நம்பிள்ளையைப் போலே" என்று பெரிய வாச்சான் பிள்ளை யருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்தி யொன்றே இவருடைய ஞானப் பெருமையை விளக்கக் கூடியது. திவ்யப்ரபந்தங்களுக்கும் இதிஹாஸ புராணாதிகளுக்கும் ஆழ்ந்த இன்சுவையே வடிவெடுத்த அர்த்தங்களை யருளிச் செய்வதில் இவர்க்கு ஒத்தாரும் மிக்காருமில்லை.

லோகாசார்யரென்கிற திருநாமமும் இவர்க்கு உண்டு. அது நிகழ்ந்த வரலாறு கேண்மின்: இவர் கோயிலில் வாழ்ந்த காலத்தில் ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களும் இவர் திருவடிகளிலேயே ஆச்ரயித்து ஸகலார்த்தங்களும் கேட்டு வந்தார்கள். 'நம்பெருமாள் கோஷ்டியோ நம்பிள்ளை கோஷ்டியோ!' என்னும்படி மிகப் பெரிய சிஷ்ய கோஷ்டி ஸம்பத்துடன் வாழ்ந்து வந்தார். அப்போது முதலியாண்டான் திருப்பேரனாரான கந்தாடைத் தோழப்பரும் அங்கு வாழ்ந்து வந்தார். அவரும் வித்வானாயிருக்கச் செய்தேயும் அவரிடத்தில் ஒருவரும் ஆச்ரயியாதிருக்கவே அவர்க்குப் பொறாமை யுண்டாகி ஒருநாள் நம்பிள்ளையைப் பெருமாள் கோஷ்டியிலே திரஸ்காரமான வார்த்தைகளைச் சொல்லிப் பரிபவித்துவிட்டுத் திருமாளிகைக் கெழுந்தருளினார். அவருடைய தேவிகள் இந்த அபசாரத்தை யறிந்து கண்ணுங் கண்ணீருமாக வந்து 'அந்தோ! இப்படியும் பரமாசார்யர் திருவடிகளிலே அபசாரப் படுவீரோ? உமக்கு உய்யும் வழியுண்டோ? என் செய்தீர்! என் செய்தீர்! ஐயோ!' என்று பலவுஞ் சொல்லி அநுதாபத்தை யுண்டாக்க, தோழப்பரும் அநுதபித்து நம்பிள்ளை திருவடிகளிலே சென்று க்ஷமைவேண்ட வேணுமென்று பாரித்திருந்தார். அதற்குள்ளே நம்பிள்ளை தாமே தோழப்பர்திருமாளிகையேற வந்து வேரற்ற மரம் போலே விழுந்து தெண்டனிட்டு, தேவரீருடைய திருவுள்ளம் கன்றும்படி வர்த்தித்த வடியேனுக்கு தேவரீருடைய க்ஷமையல்லது புகலில்லை யென்று பலவுமருளிச் செய்து தாம் க்ஷாமணம் பண்ணிக்கொண்டார். அப்போது தோழப்பர் அந்த மஹா குணத்திற்கு வியந்து 'ஸ்வாமிந்! தேவரீரை இத்தனை நாளும்

சிறிது பேர்களுக்கு ஆசார்யராக எண்ணியிருந்தேன்; இப்போது லோகத்துக்கெல்லாம் ஆசார்யர் தேவரீர் என்று திண்ணமாகக் கொண்டேன்' என்றார். அது முதலாக நம்பிள்ளைக்கு லோகாசார்யரென்று திருநாமம் வழங்கி வந்தது. "துன்னுபுகழ்க் கந்தாடைத் தோழப்பர் தம்முகப்பால் என்னவுலகாரியனோவென்றுரைக்க, பின்னை யுலகாரியனென்னும் பேர் நம்பிள்ளைக் கோங்கி, விலகாமல் நின்றதென்றும் மேல்." என்ற உபதேசரத்தின மாலைப் பாசுரம் இங்கே அநுஸந்திக்கத்தகும்.

நம்பிள்ளை திருவடிகளில் பலர் ஆச்ரயித்தாலும் பின்பழகிய பெருமாள் ஜீயர்க்கு இருந்த ஆசார்ய பக்தி ஒப்பற்றதென்று தெரிகிறது. உபதேச ரத்தின மாலையில் "பின்பழக ராம் பெருமாள்சீயர் பெருந்திவத்திலன்பதுவுமற்று மிக்க வாசையினால்—நம்பிள்ளைக்கான வடிமைகள் செய் அந்நிலையை நன்னெஞ்சே! ஊனமற வெப்பொழுது மோர்" என்று விசேஷித்து அருளிச் செய்கையாலே.

இப்பேராசிரியரின் திருவடிகளில் பணிந்து அல்லும் பகலும் ஸகலார்த்தங்களையுங் கேட்டுத் தரித்த வடக்குத் திருவீதிப் பிள்ளையும் பெரியவாச்சான் பிள்ளையும் உலகுக்குச் செய்திருக்குமுபகாரம் கைம்மாறற்றது.

பட்டருடைய ஸந்ததியில் தோன்றி மஹா வித்வானாயிருந்த நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டரும் கந்தாடைத் தோழப்பர் போலவே நம்பிள்ளை யிடத்தில் பொறாமை கொண்டிருந்தவர். அவர் ஒருநாள் ராஜஸபைக்குச் சென்றிருந்தார். அந்த ராஜா மஹா விவேகியுமாய், தன்னிடம் வருகிற பண்டிதர்களையெல்லாம் ஸ்ரீராமாயணாதி க்ரந்தங்களில் கேள்வி கேட்பவனுமாயிருந்தபடியால் இந்த பட்டரையும் ஸ்ரீராமாயணத்தில் ஒரு கேள்வி கேட்டான். அதாவது: ஸ்ரீராமபிரான் நாராயணத்வ ப்ரயுக்தமான பரத்வத்தை மறைத்துக் கொண்டு அஜ்ஞனைப் போலவும் அசக்தனைப்போலவும் அவதரித்திருக்கையில் "மயா த்வம் ஸமநுஜ்ஞாதோ கச்ச லோகாந் அநுத்தமாந்" என்று ஜடாயுவுக்கு முத்தியளித்தது எங்ஙனே பொருந்தும்?—என்று. இக்கேள்விக்கு த்ருப்திகரமான விடையளிக்க பட்டருக்கு ஸ்புரியாமையாலே ஆலோசிக்க வேண்டியதாயிற்று. அப்போது ராஜாவும் அந்யபரனாயிருக்க, இவருடைய பாக்ய வசத்தாலே அங்கு ஒரு ஸ்வாமி தென்பட்டார். அவர் நம்பிள்ளை திருவடிகளில் அர்த்த விசேஷங்கள் கேட்டவர். இந்த பட்டர் அவரை ஏகாந்தமாக நோக்கி 'இவ்வரசன் கேட்ட கேள்விக்கு நம்பிள்ளை எப்படி நிர்வஹிப்பது?' என்று கேட்டார். அவர் "ஸத்யேந லோகாந் ஜயதி" என்கிற ச்லோகத்தைக் கொண்டு நிர்வஹிப்பர் என்று சொல்ல, அதை இவர் தமது மனதில் நன்றாக வாங்கிக் கொண்டு பிறகு ராஜாவிடம் உபந்யஸித்தார். அரசனும் அதற்கு உகந்து விசேஷஸத்காரங்கள் செய்தான். அந்த ஸத்காரங்களை ப்ராமாணிகரான இவர் நம்பிள்ளை திருவடிகளிலே கொண்டு ஸமர்ப்பித்து தேவரீருடைய ஸ்ரீஸூக்திகளில் சிந்திப்போன வொரு சொல்லுக்குப் பெற்ற ஸத்காரமிது: இனி அடியேனை அங்கீகரித்தருளி வாழ்விக்க வேணுமென்று வேரற்ற மரம் போலே விழுந்து ப்ரார்த்திக்க அவரையும் சேர்த்துக் கொண்டு உய்வித்தார். நம்பிள்ளையின் பகவத் விஷயோபந்யாஸங்களை அவரும் ஏடுபடுத்தி ஸபாத லக்ஷம் க்ரந்தமாக்கியிருந்தார். அதை நம்பிள்ளை ப்ரசாரத்திற்கு நியமித்தருளவில்லை.

நம்பிள்ளையின் வைபவம் அர்த்த விசேஷங்களைப் பொறுத்ததேயாதலால் அவ்வர்த்த விசேஷங்கள் திவ்யப்ரபந்த வியாக்கியானங்களிலும் வார்த்தாமாலை முதலியவற்றிலும் பாக்கிய சாலிகளால் உய்த்து உணரத்தக்கன.

## 3. மார்கழி மாதம்.

### 10. தொண்டரடிப் பொடியாழ்வார்.

முன்னியசீர் மார்கழியில் கேட்டையானது, தன்னுபுகழ் மாமறையோன் தொண்டரடிப்பொடியாழ்வார் பிறப்பால் நான்மறையோர் கொண்டாடும் நாள் என்பது உலகப்ரஸித்தே. இவ்வாழ்வார் பேரருள்கொண்டு நமக்கு ஊட்டிய அர்த்த விசேஷங்களுள் சிலவற்றை இன்று நாம் அநுஸந்திப்பது நன்று.

இவ்வாழ்வாரருளிய திருமாலையின் சிறப்பை, "திருமாலையறியாதவன் பெருமாளையறியான்" என்னும் முதுமொழியே விளக்கக் காட்டும். அத்தகைய பெருமைவாய்ந்த அத் திவ்யப்பிரபந்தத்தில் "மொய்த்த வல்வினையுள் நின்று மூன்றெழுத்துடையபேரால், க்ஷத்திரபந்துமன்றே பராங்கதி கண்டுகொண்டான்" என்ற பாசுரத்தில் எடுத்தாளப்பட்டுள்ள க்ஷத்ரபந்துவின் சரிதை நாம் அவசியம் அறியத்தக்கது. இது ஸ்ரீவிஷ்ணுதர்மத்தில் தொண்ணூற்றேழாவது அத்தியாயத்தில் பரக்கக்கூறப்பட்டுள்ளது. அதன் சுருக்கம் வருமாறு:—



(க்ஷத்ரபந்துவின் உபாக்கியானம்.)

மிக்கொடிய நடத்தைகளையுடையனாய், பல்வகைப் பாவங்களும் உருவெடுத்து வந்தன வென்னும்படி மஹாபாபியான க்ஷத்ரபந்து என்பானொருவன் இருந்தான்; அவன் தனது கொடுமையினால் தாய் தந்தை மக்கள் மித்திரர் அனைவராலும் கைவிடப்பட்டவனாய், காட்டிலே திரிந்துகொண்டு ஜீவஹிம்ஸையினால் வயிறுவளர்த்து வந்தான். இங்ஙனம் நெடுநாள் சென்றவளவில், ஒருநாள் ஒரு மாமுனிவர் கொடிய வெய்யில்வேளையில் வழிதப்பி, இப்பாவி திரியுங் கானகத்திலே புகுந்து இவனது கண்ணுக்கு இலக்காயினர். அவரைக் கண்டதும் அவருடைய பரிதாபத்தைக் கண்ட இவனுக்குத் தன்னையுமறியாமல் அம்முனிவர் விஷயத்திற் காருண்யமுண்டாகி, 'மாமுனிவரே! இஃது உம்முடைய வழியன்றே; வழிதப்பி வந்தீர்போலும்; உற்றுநோக்கிப் பாரும்' என்று முனிவரை நோக்கிக் கூற, அவரும் உணர்ந்து, பொறுக்க முடியாத தாஹத்தையுடையவராய் ஒரு தடாகத்தைத் தேடிச் செல்லுகையில் அருகே ஒரு அழகிய பொய்கையைக்கண்டு, தாபமிகுதியால் சடக்கென அக்குளத்திற்போய் விழுந்திட்டார். அப்போது அங்கிருந்த க்ஷத்ரபந்து தனது கையிலிருந்த வில்லையும் அம்புகளையும் எறிந்துவிட்டு, அம்முனிவரைப் பிடித்துத் தூக்கித் தேற்றித் தாமரைக்கிழங்குகளை உணவாகக்கொடுத்து விடாயைப்போக்கி மகிழ்வித்தான். பிறகு அவர் கரைமீதேறி ஒருமரத்தடியில் உட்கார அவரது கால்களின் நோவுதீர நன்றாகப் பிடித்து உபசாரங்களைச்செய்த க்ஷத்ரபந்துவை நோக்கி அம்முனிவர், 'பேருபகாரம்புரிந்த பெரியோனே! யாருடைய சிறந்த குலத்திற் பிறந்தவன் நீ? உனது வரலாறுகளைக் கேட்க விரும்புகிறேன்' என்ன, அது கேட்ட அவனும் 'முனிவர் கோமானே! நான் ஸூர்யவம்சத்தில் விச்வாதன் என்பவற்கு மகனாய்த் தோன்றியவன்' என்று தொடங்கித் தனது கொடுமைகளை யெல்லாம் ஒன்றும் ஒளிக்காமல் உள்ளபடி சொல்ல; அவற்றைச் செவியுற்ற முனிவர் இவனை நல்வழியிற் செலுத்தவேணுமென்ற கருத்துக்கொண்டு 'அப்பா! இனி இத்தீய குணங்களையெல்லாம் விட்டிட்டு ஜீவகாருண்யத்தையே பரம தர்மமாகக் கடைப்பிடிக்க

உன்னாலாகாதோ ?' என்று கேட்க ; அதற்கு அவன் 'காமம், க்ரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் என்னும் தீக்குணங்கட்குப் பிறப்பிடமான நான் அவற்றைவிட்டுப் பிரிந்து ஒரு க்ஷணகாலமும் இருக்ககில்லேன் ; என்மனம் என்வசமன்று ; இது தவிர வேறு நியமமுண்டாகில் சிரமேற்கொள்ளக் காத்திருக்கிறேன்' என்ன ; எப்படியாவது இவனை வழிப்படுத்தவேணுமென்னும் பேரவாக்கொண்ட முனிவர் 'இது மாட்டாயாகில், எப்போதும் **கோவிந்த! கோவிந்த!** என்று சொல்லிக்கொண்டிருக்கவாவது உன்னால் முடியுமோ? இருமினாலும் தும்மினாலும் **கோவிந்த!** என்றே சொல்லிக்கொண்டிருப்பாயாகில் உனக்கு மிக்க நன்மையுண்டாம்' என்று சொல்லிவிட்டுப்போயினர். அது முதலாக க்ஷத்ரபந்து கோவிந்த நாமத்தை இடைவிடாது ஸங்கீர்த்தநம் பண்ணிக்கொண்டிருந்தான். சிலகாலங் கழித்து அவன் மரணமடைந்து அந்தணர்குலத்தில் பூர்வஜந்ம ஸ்மரணத்துடன் பிறந்தான். உடனே அவனுக்கு இக்கொடிய ஸம்ஸாரத்தில் மிக்க நிர்வேதம் உண்டாயிற்று. இப்படிப்பட்ட உத்தமோத்தமமான ப்ராஹ்மண குலத்தில் எனக்குப் பிறவிநேர்ந்ததும் பூர்வஜந்ம ஸ்மரணமுண்டானதும் நான் முன்பு பண்ணின கோவிந்தநாம ஸங்கீர்த்தநத்தின் பயனன்றோ? ஆகவே எனக்கு மேலான நன்மையை விளைத்த அந்த கோவிந்தனையே நான் ஆராதனஞ்செய்து, *நீண்டாவழும்புஞ் செந்நீருஞ் சீயுநரம்புஞ் செறிதசையும் வேண்டா நாற்றமிகு முடலைவிட்டு* மாய வன்சேற்றள்ளற் பொய்ந்நிலத்தைக் கடந்து நலமந்தமில்லதோர் நாடாகிய பரமபதத்தை அடையக் கடவேன் என்பதாகத் துணிந்து அங்ஙனமே செய்து பரம பாகவதனாகி வீடுபெற்றனன் என்பதாம்.

இத்திருமாலையிலுள்ள (2) *பச்சைமா மலைபோல் மேனி* (14) *வண்டினமுரலுஞ் சோலை* (19) *குடதிசை முடியைவைத்து*......இப்பாசுரங்கள் அநவரதமும் சொல்லிக் கொண்டிருந்தாலும் தெவிட்டாத அம்ருதமாயிருக்கும்.

இவ்வாழ்வார் இத்திருமாலை தொடங்கும்போதே *காவலில் புலனைவைத்து* என்று தொடங்குகின்றார். செவி வாய் கண் முதலிய இந்திரியங்களைச் சிறையில் வைத்து நமன் தமர்தலைகள்மீதே தாம் நர்த்தனஞ் செய்வதாகக் களித்துப் பேசுகின்றார். இவருடைய சரித்திரத்தில் இவர் சில காலம் இந்திரியங்களுக்கு வசப்பட்டிருந்ததாகவும் அதன்பலனாகச் சிறையிருந்ததாகவும் சொல்லப்படுகிறது. அப்படி தம்மைக் காவலில் வைத்த புலன்களைத் தாம் காவலில் வைத்ததாகப் பேசுகிறவிது, மந்தோதரியினுடைய ஒரு அழகிய பேச்சை நினைப்பூட்டுகின்றது. அதாவது, இராவணன் இராமபிரானால் கொல்லப்பட்டு மாண்டொழிந்தா னென்பதை யறிந்த அவள் போர்க்களத்திலே வந்து புரண்டழும்போது *இந்த்ரியாணி புரா ஜித்வா ஜிதம் த்ரிபுவநம் த்வயா, ஸ்மரத்பிரிவ தத் வைரம் அத்ய தைரேவ நிர்ஜித:* என்றுளவள். இராவணன் நெடுங்காலம் இந்திரியநிக்ரஹஞ் செய்து கோரமாக தவம்புரிந்து அதன் பலனாக மூவுலகங்களையும் வென்றவன். அந்த இந்திரியங்களானவை இப்பாவி நம்மைப் பங்கப்படுத்திவிட்டானே யென்று கறுவியிருந்து ஸமயம்பார்த்து அவையே இவனைப் பங்கப்படுத்திவிட்டனவாம். இந்திரியங்களை அடக்கியாண்டவன் இந்திரிய நிக்ரஹணமையாலே பங்கப்பட்டா னென்றவாறு. அதுபோலவே, இவ்வாழ்வாரும் தம்மை முன்பு பங்கப்படுத்தின [—சிறையிலிட்ட] அவ்விந்திரியங்களைத் தாம் பங்

புள்ள பிராக்கையறுத்து அநுஸந்திக்கப்புக்காலும் சுக்கான்பரல்போலே யிருக்கக் கடவ நெஞ்சுகள் பதஞ் செய்யும்படி, தார்மிகராயிருப்பார் இவை சில ஈரச்சொற்களைப் பொகட்டுப்போவதே! என்றருளிச் செய்தார். நஞ்சீயர் இவ்வார்த்தையை உருத்தோறுமருளிச் செய்வர்''—என்பது ஈட்டுஸ்ரீஸூக்தி. இதன் பொருளை நம்முடைய புன்சொற்களாலே விவரிக்கவேணுமோ? மேற்குறித்த பரமபோக்யமான ஸ்ரீஸூக்தியையே அநவரதம் ஆவ்ருத்தி பண்ணலாமே.

பெரிய திருமொழியிலே *தூவிரியமலருழக்கி* (3—6.) என்கிற திருமொழியின் அவதாரிகையிலே பெரியவாச்சான்பிள்ளை யருளிச் செய்துள்ள திவ்ய ஸ்ரீஸூக்திகள் கேண்மின்; "நஞ்சீயருடைய நோவிலே பெற்றி அறியப்புகுந்து இங்குத்தைக்கு வேண்டியிருக்கிறது என்னென்று கேட்க;'' என்று தொடங்கியுள்ளது. அதாவது நஞ்சீயர் திருமேனியிலே நோவுசார்த்திக் கொண்டெழுந்தருளியிருந்தபோது, பெற்றியென்கிற சிஷ்யர் ஸேவிக்கவந்து 'திருவுள்ளத்தில் ஏதேனும் விருப்பமிருந்தால் அருளிச் செய்யவேணும்' என்று விண்ணப்பஞ் செய்தாராம்; அதற்கு ஜீயர் இரண்டுமனோரதங்களைத் தெரிவித்தருளினாராம்; (1) *தூவிரியமலருழக்கி யென்ற திருமங்கையாழ்வார் பதிகத்தை அரையர்ஸேவிக்கக் கேட்கப்பெறவேணும். (2) பெருமாளெழுந்தருள முன்னும் பின்னும் ஸேவிக்கவேணும்—என்று இவ்விரண்டு விருப்பங்களுள்ளனவாகப் பணித்தாராம்; அப்போதே வாசுரும் பெருமாளரையர்ஸ்வாமியை வரவழைத்துப் பாட்டுக் கேட்பிக்கையில் *தானாக நினையானேல் தன்னினைந்து நைவேற்கு, ஓர் மீனாயகொடி நெடுவேள் வலிசெய்ய மெலிவேனோ* என்கிற பாசுரத்தை அரையர் பாடுகையில் நஞ்சீயர் பரவசராய்ச் சிலவார்த்தைகள் பேசி மோஹித்தாராம். அதே தருணத்தில் திருநாட்டுக்கெழுந்தருளினா ரென்றுஞ் சொல்லுவர்கள்.

நஞ்சீயர் பட்டர் திருவடிகளில் ஆச்ரயித்தபின்பு நெடுங்காலம் பட்டர்பாடே அர்த்த விசேஷங்கள் கேட்டு இன்புறவேணுமென்று இருந்தார். இருக்கையில் பட்டர் திருநாட்டுக்கெழுந்தருள நேர்ந்துவிட்டது. இந்த வருத்தத்தினால் நஞ்சீயர் திருவாய்மொழியில் (4—3—11) *வையம்மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே* என்கிற பாசுரத்தை யருளிச்செய்யும்போது உருத்தோறும் வெகுநிர்வேதப்படுவாராம்; (ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—) "வையம் மன்னி வீற்றிருந்தென்கிற விடத்தே 'நம்மைப்போலே வாய்ப்புகுசோறாகப் பறிகொடாதே நெடுங்காலம் பூமியிலே ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயோடே *நாட்டாரோடியல்வொழிந்தென்கிறபடியே தங்கள் வ்யாவ்ருத்தி தோற்றவிருக்கப்பெறுவர்க ளென்று ஜீயர் உருத்தோறுமருளிச்செய்வர். பால்யத்திலே பட்டரைப் பறிகொடுத்தாரிறே அவர்.'' என்று. [பட்டர் இருபத்தெட்டு அல்லது முப்பத்திரண்டு பிராயத்திலே திருநாட்டுக்கெழுந்தருளினா ரென்று சிலர் கூறுவதுண்டு; இதற்குப்போதுமான பிரமாணம் கிடைத்திலது; ஆராய்ந்து பார்க்குமளவில், பட்டர் ஐம்பது ஐம்பத்தைந்து பிராயம் எழுந்தருளியிருந்தா ரென்று சொல்வதற்குச் சான்றுகள் உள்ளன. நூற்றிருபத்தைந்து திருநக்ஷத்திர மெழுந்தருளியிருந்த எம்பெருமானாரை நோக்குமிடத்து பட்டர் எழுந்தருளியிருந்தது ஸ்வல்பகாலமென்று சொல்லலாம்படி யிருக்கையாலே நஞ்சீயர் நிர்வேதப்பட வேண்டிற்று.]

எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களையும் திவ்ய மங்கள விக்ரஹ வைலக்ஷண்யத்தையும் பரக்கப் பேசுகிற ஆழ்வார்பாசுரங்களை நஞ்சீயர் அநுஸந்திக்கும் ஸமயங்களில் அடிக்கடி ஒரு வார்த்தை யருளிச் செய்வராம்; அதாவது—"எம்பெருமானுக்கு விக்ரஹமில்லை விபூதியில்லை குணமில்லை யென்பார் செய்யாத துஷ்க்ருத மில்லை; அவர்களோடே யிருந்த உறவை யறுத்துக் கொண்டு ஸ்வாமியின் திருவடி கிழலிலே வந்து சேர்ந்த அடியேன் செய்யாத ஸுக்ருத மில்லை" என்று.

பட்டர் ஸஹஸ்ரநாம பாஷ்யமருளிச் செய்தது முக்கியமாக நஞ்சீயருடைய திருவுள்ள வுகப்புக்காகவே யென்றும் அந்த பாஷ்யம் நஞ்சீயர் திருக்கையாலேயே பட்டோலை கொள்ளப்பட்டதென்றும் பெரியார் கூறுவராதலால் ப்ரஸங்காத் அந்த பாஷ்யத்தின் பெருமையையும் இவ்விடத்திலே சிறிது பேசிக்களிப்போம். அன்றியும், நஞ்சீயருடைய திருவவதார நக்ஷத்ரமான பங்குனி யுத்தரம் ஸ்ரீரங்க நாச்சியாருடைய திருநக்ஷத்ரமாகவு முள்ளது; "ஸ்ரீரங்கராஜ கமலாபதலாளிதத்வம்" [ஸ்ரீரங்கராஜஸ்தவே] என்று, ஸ்ரீரங்கநாச்சியார் தமது திருவடிகளிலே பட்டரை யிட்டுக்கொண்டு சீராட்டி வளர்த்ததாக பட்டர் தம்மாலேயே ஸ்பஷ்டமாக அருளிச்செய்யப்பட்டிருத்தலால் அந்தப் பெரிய பிராட்டியாருடைய நன்னாளிலே பட்டருடைய திவ்ய ஸூக்திப் பெருமையை யநுபவிப்பதும் பாங்காகும்.

## 17. ஸஹஸ்ரநாம பாஷ்யப் பெருமை.

ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாமத்திற்கு த்ரிமதஸ்தர்களாலும் பாஷ்யமியற்றப்பட்டுள்ளது. அவற்றுள் நமது விசிஷ்டாத்வைத ஸம்பிரதாயத்திற்கான பாஷ்யம் பட்டருடையதேயாம். இதற்கு **பகவத்குணதர்ப்பண** மென்று திருநாமம் சாத்தினது சாலப் பொருத்தம். குணாநுபவஞ் செய்யக் குதூஹல முள்ளவர்கள் ஈடுமுப்பத்தாறாயிரப்படியென்கிற பகவத்விஷய திவ்யக்ரந்தத்தில் போது போக்கவேணுமென்பது ப்ரஸித்தம். அதில் அவகாஹிக்க ப்ராப்தியற்ற சுத்தஸம்ஸ்க்ருத பண்டிதர்கள் சாஸ்த்ரஜ்ஞானமுமுள்ளவர்கள் அற்புதமாகக் குணாநுபவஞ் செய்ய விரும்பினால் அவர்களுக்கு இந்த ஸஹஸ்ரநாம பாஷ்யமே சரணமென்பது யுக்தம். ஏற்கெனவே ஸஹஸ்ரநாமத்திற்கு சங்கரபாஷ்யம் தோன்றியுள்ளது. நிர்க்குணப்ரஹ்மவாதிகள் எம்பெருமானுடைய திருநாமங்களுக்கு அர்த்தஞ்சொல்லப் புறப்படுவது ஸாஹஸமென்றே பட்டர் திருவுள்ளம் போலும்.

பகவத்குணங்களை அற்புதமாக அநுபவிப்பதற்கென்றே அமைந்த இந்த ஸஹஸ்ரநாமத்திற்கு ஆழ்வார்களின் ஈரச்சொற்களில் ஆழ்ந்தவர்களன்றோ பொருள் சொல்ல முன்வரவேண்டும்; அவ்வருளிச் செயல்களுக்கு அதிமாத்ரம் வைதேசிகர்களான புறச்சமயிகள் இதற்குப் பொருளுரைப்பதாக விழுந்து மனம்போனபடியெல்லாம் வியாக்கியானம் செய்திருப்பது என்னே! என்று மிகவருந்தியே பட்டர்தாம் வியாக்கியானிக்க எம்பெருமானுடைய நியமனம் பெற்றிருந்தார். குணாநுபவத்திற்கென்று இட்டுப்பிறந்தவர்களில் தலைவரன்றோ பட்டர். அருளிச்செயலமுதக் கடலில் அல்லும் பகலும் குடைந்தாடி அரும் பெரும் பொருள்களை அற்புதமாக அநுபவித்தும் அநுபவிப்பித்தும் போந்த பாமரவிக

ஸார்வபௌமரான பட்டர் அருளிச்செய்த பாஷ்யத்தை நம்மவர்களிலும் பரிபூர்த்தியாக ஸேவிப்பவர்கள் மிகச் சிலரே. உண்மையில் இந்த பாஷ்யத்தை யநுபவிக்க அதிகாரிகள் துர்லபர்கள்; ஏனென்றால் "பரிசிதமிவ அதாபி கஹநம் பஹுமுகயவாணீவிலஸிதம்" என்று ஸ்ரீரங்கநாச்சியாரை நோக்கித் தாம் வேண்டினபடியே அதிகம்பீரமான வாக்விலாஸங்களைக் கொண்டே பெரும்பாலும் இந்த பாஷ்யத்தை அமைத்தருளியுள்ளார். ஆகவே இதற்கு அதிகாரிகள் மிகச் சிலரேயாவர். ஒருவாறு அதிகாரம் பெற்றவர்களும் இதைக்கொண்டு போதுபோக்குவதைக் காணோம். 'அவச்யமானபோது எடுத்துப் பார்ப்பது' என்கிற முறையில் இதையெடுத்துப் பார்ப்பவர்கள் சிலருளரே யன்றி ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்யாதிகளைப் போலவே இதையும் நியமேந ஸேவிக்கப் பெறுவாரில்லையே யென்கிற நிர்வேதம் நமக்குப் பெரிதுமுளது. திவ்யப்ரபந்தங்களில் அவகாஹநமில்லாமையோடுகூட அவற்றில் த்வேஷமுமுள்ளவர்கள் இந்த பாஷ்யாம்ருத ஸாகரத்தில் இறங்காதிருப்பதே மிக க்ஷேமம் என்றும் நாம் கருதியிருப்பதுண்டு.

இங்ஙனே நாம் பேசத்தக்க பெருமை இந்த பாஷ்யத்துக்கு உள்ளதென்பதை இங்குச் சிறிது நிரூபிக்க விரும்பி ஸஹஸ்ரநாமத்திலிருந்து சில திருநாமங்களை யெடுத்துக்கொண்டு, பிறருடைய பாஷ்யத்திற்காட்டிலும் பட்டருடைய பாஷ்யத்திலுள்ள ஸ்வாரஸ்யாதிசயத்தை அருளிச்செயல் ரஸிகர்களுக்கு அழகாக எடுத்துக் காட்டுகிறேன்.

**"ஸத்கதிஸ் ஸத்க்ருதிஸ் ஸத்தா ஸத்பூதிஸ் ஸத்பராயண:"** என்றவிடத்தில் **ஸத்க்ருதி:** என்ற திருநாமத்திற்குப் பிறர் செய்த பொருள் யாதெனில்; ஜகத் ஸ்ருஷ்டி முதலான சிறந்த காரியங்களைச் செய்பவர் என்பது. இப்பொருளை பட்டர் ஒன்றாக மதித்திலர். மேலே * **வஸுப்ரதோ வாஸுதேவோ வஸுர் வஸுமநா ஹவி:** * என்று வாஸுதேவ நாம ச்ரவணமிருப்பதால் இந்த ப்ரகரணத்திலுள்ள பல திருநாமங்கள் வஸுதேவாத்மஜனான கண்ணபிரானுடைய குண சேஷ்டிதங்களைத் தெரிவிப்பனவாகக் கொண்டு * **வஸுரேதா:** * என்கிற திருநாமம் முதலாகப் பல திருநாமங்களை க்ருஷ்ணாவதார கதாப்ரதிபாதகங்களாகவே பட்டர் வியாக்கியானித்தருளினார். ஸ்பஷ்டமாக இப்படியே அவதாரிகையும் இட்டருளினார். **ஸத்க்ருதி:** என்னுமிந்தத் திருநாமம் அந்த ப்ரகரணத்திலிருப்பதால் இதற்குப் பிறர் செய்த பொருள் விரஸமென்று கருதி, தயிர் வெண்ணெய் களவு செய்தது, உரலோடாப்புண்டிருந்தது, குரவை யாச்சியரோடு கோத்தது முதலான சிறந்த சேஷ்டிதங்களைச் செய்பவர்—என்கிற அழகிய பொருளைச் செய்தருளினார் பட்டர். ஆண்டாள் திருப்பாவையில் "உன்றன்னைச் சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே" என்கிறாள். 'கண்ணா! உனக்குப் பெரிய பெரிய பெயர்களிருக்க அவற்றை விட்டுச் சிறிய பெயரை யிட்டு உன்னை யழைத்ததற்காக நீ சீற்றம் கொள்ளலாகாது' என்று இங்கு க்ஷமை வேண்டப்படுகிறது. இங்குச் சிறிய பெயராகக் கருதப்படுவது எது? என்று ஆராயுமளவில் பட்டர் திருவடிகளிலே கேட்ட மஹாசார்யர்கள், நாராயணன், தேவாதிதேவன் இத்யாதி நாமங்கள் சிறிய பெயரென்றும், கோவிந்தன் கோபாலன் இத்யாதி திருநாமங்கள் பெரிய பெயரென்றும் அருளிச்செய்கிறார்கள். ஏனென்றால் அவனுகக்கும் திருநாமம் எதுவோ அதுவே பெருமை பெற்றதென்றும், அவன் வெறுக்கும் பெயரே சிறுமை பெற்றதென்றும்

கொள்ள வேண்டியிருக்கிறது. திருவாய்ப்பாடியில் இடையர்க்குத் தலைவனாய் வந்து பிறந்து கன்றுகளையும் பசுக்களையும் மேய்த்துப் பெருமை பெற நினைத்திருக்கையில் 'கன்று மேய்த்து இனிதுகந்த காளாய்!' என்று கூப்பிட்டால் அவன் திருவுள்ளமுகக்குமேயல்லது 'நாராயணா! வைகுண்டவாஸா!' என்றால் உகக்குமோ? மிக மிக வெறுப்பன்றோ உண்டாகும். கோவர்த்தன மலையைக் குடையாகத் தூக்கி நின்றபோது அவ்வதிமாநுஷ சேஷ்டிதத்தைக் கண்டு அதிசங்கித்தவர்கள் "**தேவோ வா த்வம்?**" (தேவனா நீ?) என்ன; அதற்கு மிகச் சீறினானன்றோ. உங்களில் ஒருத்தனாய் இடையனான வென்னைத் தேவனென்று பழிக்கிறீர்களே பாவிகாள்! என்றாயிற்று ஆண்டார்கோன் சீறியது. இவற்றுக்கெல்லாம் நன்கு பொருந்தவன்றோ பேசவேணும். * நாராயணனே நமக்கே பறைதருவான் * என்றும் * நாற்றத்துழாய் முடி நாராயணன் * என்றும் அநியாயமாய் உன்னைச் சிறு பேரையிட்டுப் பேசினோமே. கோவிந்தன் கோபாலன் என்கிற பெரும்பெயர்களையிட்டே பேசாத பிழையைப் பொறுத்தருளவேணும்—என்று சொல்லுவதாகப் பொருள்கொள்வதே பொருத்தமானதென்று கொண்டு ஆசாரியர்கள் இப்படி வியாக்கியானித்தருளினர். இந்தச் சுவையறியும் பாக்யமற்றவர்கள் இற்றைக்கும் இதற்கு விபரீதமான பொருளை யெழுதியும் பேசியும் வரக் காணாநின்றோம். நிற்க. ரஸிகர்கள் **ஸத்க்ருதி:** என்ற ப்ராக்ருத திருநாமத்தின் பாஷ்யம் அமைந்திருக்கு மழகை நோக்கவேணும். ஜகத்ஸ்ருஷ்டிமுதலிய வியாபாரங்களை பகவானுக்குச் சிறந்தவை யென்கிறார் சங்கராசார்யர்; அவையல்ல சிறந்தவை; *நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னுமீனச்சொல்லே!* என்றும், *தாயன் கடிமனையில் தயிருண்டு நெய்பருக நந்தன்பெற்ற வானாயன்* என்றும் நம் ஆழ்வார்கள் ஈடுபடும்படியான ஈனச்செயல்களே சிறந்தவை யென்கிறார் பட்டர். *மத்துறு கடைவெண்ணெய் களவினில் உரவிடையாப்புண்டு எத்திறமுரலினோடிணைந்திருந்தேங்கிய எளிவே!* என்று நம்மாழ்வாரை ஆறுமாஸம் மோஹிக்கச் செய்த செயலைவிட்டு மற்றொன்றையா **ஸத்க்ருதி** யென்பது! என்றாயிற்று பட்டர் திருவுள்ளம் பற்றியது.

இனி வேறுதிருநாமங்களிற் செல்வோம். "**விஜிதாத்மா விதேயாத்மா ஸத்கீர்த்திச் சிந்நஸம்சய:, உதீர்ணஸ் ஸர்வதச் சக்ஷு: அநீசச் சாச்வதஸ்திர:** * என்றவிடத்துள்ள பல திருநாமங்களுக்குப் பிறருடைய பாஷ்யத்தின் சுவையின்மையும் பட்டருடைய பாஷ்யத்தின் சுவைமிகுதியும் நிரூபிக்கப் படுகின்றன. **விஜிதாத்மா** என்பதற்கு மனத்தையடக்கினவர் ஜிதேந்த்ரியர் என்ற கருத்திற் சென்றார்கள் பிறர். இதில் என்ன சுவையுள்ளது? 'தம்மைப் பணிந்தவர்கள் விஷயத்தில் தாம் தாழ்ந்து வெற்றியை அவர்களுக்குக் கொடுத்துத் தோல்வியைத் தாம் ஏற்றுக் கொள்பவர்' என்கிற கருத்தை விவரித்தருளினார் பட்டர். இதுவன்றோ எம்பெருமான் திருவுள்ளமுகந்த பொருள். * அடிச்சியோம் தலைமிசை நீயணியாய் ஆழியங்கண்ணா உன் கோலப்பாதம் * என்று பக்தர்கள் விரும்பாநிற்க "மம சிரஸி மண்டநம் **கோபிகாதண்டகம்**" என்று பேசும்பெருமானது திருவுள்ளமுகக்கும் வியாக்கியானமிதுவன்றோ. * கூடாரை வெல்லுஞ்சீர்க் கோவிந்தா! * என்ற ஆண்டாள் ப்ரஸாதத்திற்கு உட்புகுந்த வியாக்கியானம் செய்தருள்கின்ற ஆசாரியர்கள் "கூடாதவர்களைத் தோற்கடிப்பதும் கூடுமவர்களுக்கு நீ தோற்றிருப்பதுமன்றோ உன் இயல்பு" என்று கருத்தை விவரித்தருளுகிறார்கள்; அதற்கு வழிகாட்டியாகவுள்ளது இவ்விடத்து பாஷ்யம்.

இதற்கடுத்த திருநாமத்திற் செல்வோம். 'விஜிதாத்மாவிதேயாத்மா' என்ற இவ்விடத்தில் அகாரப்ரச்லேஷமிருப்பதாகக் கொண்டு 'அவிதேயாத்மா' என்று பதம்பிரித்து ...ருக்குத்தகுந்த பொருளையுரைத்தனர் பிறர்; யாருக்கும் விதேயப்படாத ஸ்வரூபமுள்ளவர் என்பதாக. பட்டர் *விதேயாத்மா என்றே திருநாமமாகக் கொண்டு, நிற்பதோ இருப்பதோ கிடப்பதோ போவதோ வருவதோ உண்பதோ எல்லாவற்றிலும் பக்தர்களினுடைய ...க்கு விதேயப்பட்டிருக்கும் ஸ்வரூபமுள்ளவர் என்று இவ்வழகிய கருத்தைக் காட்டி... *கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி மணிவண்ணா! நீ கிடக்க வேண்டா ... பைந்நாகப்பாய் சுருட்டிக்கொள்* என்றால் உடனே பைந்நாகப்பாயை சுருட்டிக்கொண்டு கிளம்புவதும், *பைந்நாகப்பாய் விரித்துக்கொள்* என்றால் அப்படியே மீண்டுவந்து விரித்துக் கொள்வதுஞ் செய்து திருமழிசைப்பிரான் பேல்வார்திறத்தில் சொன்னவண்ணஞ் செய்தபெருமானென்றும் யதோக்தகாரீ யென்றும் திருநாமம் படைத்து பக்தவிதேயதையை விதிதபடிதமாக்கியிருக்கின்ற எம்பெருமானது திருவுள்ள முகக்கவேணுமானால் 'விதேயாத்மா' என்னாது வேறுவகையாகச் சொல்லலாகுமோ? *ஜ்ஞாநீது ஆத்மைவ மே மதம்* என்று கீதையிற் கூறியிருக்கின்ற எம்பெருமானுடைய திருவுள்ளந்தான் என்ன? ஞானிகளுக்கு நான் சரீரபூதனென்று ஸர்வசரீரியான பகவான்தானே வாய்விட்டுச் சொல்லுகின்றான். ஆத்மாவைக்குறித்து ஸர்வாத்மநா விதேயமாயிருக்கையன்றோ சரீர லக்ஷணம். ஞானிகளுக்கு விதேயனல்லனாகில், *ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதமென்று அவன் தான் கூறினதும் அதற்கு மஹாசார்யர்கள் அழுத்தம் திருத்தமாக வியாக்யானமிட்டருளினதும் என்னாகும்? தனது விதேயத்வத்தை வாயாற் சொன்னவளவன்றிக்கே அனுஷ்டானத்திலுமன்றோ காட்டியருளாநின்றான். "ஸேநயோருபயோர் மத்யே ரதம் ஸ்தாபய மே அச்யுத!" என்று அர்ஜுனன் கட்டளையிடவும் அப்படியே தான்செய்யவும் பாங்காகவன்றோ தன்னையமைத்து வைப்பது. பார்த்தஸாரதி யென்று பெயர்சுமந்து நிற்கிறானே.

அடுத்த திருநாமத்திலும் செல்வோம். சிந்நஸம்சய: என்றொரு திருநாமம். 'எல்லாவற்றையும் கையிலங்கு நெல்லிக்கனிபோல் எப்போதும் பார்ப்பவராதலால் ஸந்தேஹமற்றவர்' என்கிற கருத்தில் பாஷ்யமமைத்தனர் பிறர். ஐயம் திரிபு மறப்பு முதலானவையில்லாமை ஞானத்திற்கு அதிசயம். ஆகவே, பகவான் அதிசயித்த ஞானம்படைத்தவர் என்றதாயிற்று. இப்பொருள் ஸஹஸ்ரநாமத்தில் மற்றும் பல திருநாமங்களாலும் வெளிவந்ததே. இதில் சுவையொன்றுமில்லையென்று கருதிய பட்டர் அழகாக வியாக்யானித்தருளியுள்ளார்! இதற்குமுன்னேயுள்ள ஸத்கீர்த்தி: என்ற திருநாமத்திற்குப் பிறர்போல் ஸாமான்யமான பொருளைப் பணியாமல் 'ஸௌலப்யமிருப்பதினாலேயே யதார்த்தமான புகழ்பெற்றவர்' என்று ப்ரக்ருதாநுகுணமாகப் பொருளருளிச் செய்தாராதலால் சிந்நஸம்சய: என்றவித்திருநாமத்திற்கு அதையொட்டியே அழகிய பொருள்பணிக்கின்றார்! அதாவது, எம்பெருமான்விஷயத்தில் தெளிவுபெறாதவர்களுக்குப் பலவகையான ஸந்தேஹங்களுண்டாகுமாம்; அவர் அறியக்கூடியவரோ அறியக் கூடாதவரோ? எளியவரோ அரியவரோ? நமக்கு வசப்படுவரோ மாட்டாரோ? என்றிப்படி பலஸந்தேஹங்கள் தோன்றுமாம்! அவற்றைத் தமது நடத்தையினால் உடனே அறுத்திடுபவராம். தாம் தாரித்ரியமின்றியிருப்

இதற்கடுத்த திருநாமத்திற் செல்வோம். 'விஜிதாத்மாவிதேயாத்மா' என்ற இவ்விடத்தில் அகாரப்ரச்லேஷமிருப்பதாகக் கொண்டு 'அவிதேயாத்மா' என்று பதம்பிரித்து அதற்குத்தகுந்த பொருளையுரைத்தனர் பிறர்; யாருக்கும் விதேயப்படாத ஸ்வரூபமுள்ளவரென்பதாக. பட்டர் * விதேயாத்மா என்றே திருநாமமாகக் கொண்டு, நிற்பதோ இருப்பதோ கிடப்பதோ போவதோ வருவதோ உண்பதோ எல்லாவற்றிலும் பக்தர்களினுடைய கட்டளைக்கு விதேயப்பட்டிருக்கும் ஸ்வரூபமுள்ளவர் என்று இவ்வழகிய கருத்தைக் காட்டியருளினர். * கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி மணிவண்ணா! நீகிடக்க வேண்டா—நீயுமுன்றன் பைந்நாகப்பாய் சுருட்டிக்கொள்* என்றால் உடனே பைந்நாகப்பாய் சுருட்டிக்கொண்டு கிளம்புவதும், *பைந்நாகப்பாய் விரித்துக்கொள்* என்றால் அப்படியே மீண்டுவந்து விரித்துக் கொள்வதுஞ் செய்து திருமழிசைப்பிரான் பேல்வார்திறத்தில் சொன்னவண்ணஞ் செய்தபெருமானென்றும் யதோக்தகாரி யென்றும் திருநாமம் படைத்து பக்தவிதேயதையை விகிதபடிதமாக்கியிருக்கின்ற எம்பெருமானது திருவுள்ளமுகக்கவேணுமானால் 'விதேயாத்மா' என்னாது வேறுவகையாகச் சொல்லலாகுமோ?* ஜ்ஞாநீது ஆத்மைவ மே மதம்* என்று கீதையிற் கூறியிருக்கின்ற எம்பெருமானுடைய திருவுள்ளந்தான் என்ன? ஞானிகளுக்கு நான் சரீரபூதனென்று ஸர்வசரீரியான பகவான்தானே வாய்விட்டுச் சொல்லுகின்றான். ஆத்மாவைக்குறித்து ஸர்வாத்மநா விதேயமாயிருக்கையன்றோ சரீரலக்ஷணம். ஞானிகளுக்கு விதேயனல்லனாகில்,* ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதமென்று அவன்தான் கூறினதும் அதற்கு மஹாசார்யர்கள் அழுத்தம் திருத்தமாக வியாக்கியானமிட்டருளினதும் என்னாகும்? தனது விதேயத்வத்தை வாயாற் சொன்னவளவன்றிக்கே அனுஷ்டானத்திலுமன்றோ காட்டியருளாநின்றான். "ஸேநயோருபயோர் மத்யே ரதம் ஸ்தாபய மே அச்யுத!" என்று அர்ஜுனன் கட்டளையிடவும் அப்படியே தான்செய்யவும் பாங்காகவன்றோ தன்னையமைத்து வைப்பது. பார்த்தஸாரதி யென்று பெயர்சுமந்து நிற்கிறானே.

அடுத்த திருநாமத்திலும் செல்வோம். சிந்நஸம்சய: என்றொரு திருநாமம். 'எல்லாவற்றையும் கையிலங்கு நெல்லிக்கனிபோல் எப்போதும் பார்ப்பவராதலால் ஸந்தேஹமற்றவர்' என்கிற கருத்தில் பாஷ்யமமைத்தனர் பிறர். ஐயம் திரிபு மறப்பு முதலானவையில்லாமை ஞானத்திற்கு அதிசயம். ஆகவே, பகவான் அதிசயித்த ஞானம்படைத்தவர் என்றதாயிற்று. இப்பொருள் ஸஹஸ்ரநாமத்தில் மற்றும் பலதிருநாமங்களாலும் வெளிவந்ததே. இதில் சுவையொன்று மில்லையென்று கருதிய பட்டர் அழகாக வியாக்கியானித்தருளியுள்ளார்! இதற்குமுன்னேயுள்ள ஸத்கீர்த்தி: என்ற திருநாமத்திற்குப் பிறர்போல் ஸாமான்யமான பொருளைப் பணியாமல் 'ஸௌலப்ய மிருப்பதினாலேயே யதார்த்தமான புகழ்பெற்றவர்' என்று ப்ரக்ருதாநுகுணமாகப் பொருளருளிச் செய்தவராதலால் சிந்நஸம்சய: என்றவித்திருநாமத்திற்கு அதையொட்டியே அழகிய பொருள்பணிக்கின்றார்! அதாவது, எம்பெருமான்விஷயத்தில் தெளிவுபெறாதவர்களுக்குப் பலவகையான ஸந்தேஹங்களுண்டாகுமாம்; அவர் அறியக்கூடியவரோ அறியக் கூடாதவரோ? எளியவரோ அரியவரோ? நமக்கு வசப்படுவரோ மாட்டாரோ? என்றிப்படி பலஸந்தேஹங்கள் தோன்றுமாம்; அவற்றைத் தமது நடத்தையினால் உடனே அறுத்திடுபவராம். தாம் தாரித்ரிய மின்றியிருப்

பவர் என்பதைக் காட்டிலும் பிறரை தாரித்ரிய மற்றவர்களாகச் செய்பவர் என்பது எப்படி சிறந்ததோ, அப்படியே தாம் ஸந்தேஹமற்றவராயிருப்பவர் என்பதைக் காட்டிலும் பிறரை ஸந்தேஹமற்றவர்களாகச் செய்பவர் என்பது சிறந்ததென்று நாம் விவரிக்க வேணுமோ ? அதிலும், தம்முடைய பரத்வத்தைக் காட்டி ஸந்தேஹ மறுப்பவரென்னாமல் தம்முடைய எளிமையைக் காட்டி ஸந்தேஹ மறுப்பவரென்றுரைத்தது ரஸவத்தாம்.

அவ்விடத்திலேயே அநீச: என்ற திருநாமத்தின் பாஷ்யத்தையும் நோக்குவது. 'தமக்குமேல் ஈச்வரனில்லாதவர் அநீசர்' என்றார் பிறர். 'தமக்குத் தாம் கடவரல்லாதவர்—பக்த பராதீநத்வத்தாலே ஸ்வாதந்த்ரியமிழந்தவர் அநீசர்' என்றருளிச் செய்கிறார் பட்டர். * வில்லி புதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்லபரிசு வருவிப்பர் * என்று ஆண்டாளருளிச் செய்தபடி பக்தர்கள் வெந்நீரைக் காய்ச்சி, * நாரணா நீராடவாராய் * இன்று நீ நீராடவேண்டு மெம்பிரானோடாதேவாராய் * என்றழைத்தால் நீராட வோடிவருவதும், சில பூக்களைப் பறித்துக் கையிலே வைத்துக்கொண்டு * செண்பகப் பூச்சூட்ட வாராய் * மல்லிகைப் பூச்சூட்ட வாராய் * இருவாட்சிப் பூச்சூட்ட வாராய் * என்றழைத்தால் பூச்சூடவோடிவருவதுமான எம்பெருமானை எந்த பாஷ்ய முகப்பிக்கு மென்று காண்க.

இனி மற்றோரிடத்திற்குச் செல்வோம். * ஸுபுஜ ஸுமநாஸ் ஸத்யஸ் ஸமாத்மா ஸம்மிதஸ் ஸம: * என்ற விடத்தில் * அஸம்மித: * என்று திருநாமமாக்கி பரிச்சிந்நர் என்கிற பொருளைக் காட்டினர் பிறர். விலைகொடுத்து வினைவாங்குமாப்போலே இல்லாததொரு அகாரத்தைக் கொண்டு கூட்டி எதுக்கு இந்தச் சுவைக் கேடான பொருளைப் பணிக்க வேண்டு மென்று நிர்வேதங் கொண்ட பட்டர் ஸர்வப்ரகாரத்தாலும் அடியார்களுக்குப் பரிச்சிந்நரேயாவர் என்கிறார் ஸம்மித: என்றே கொண்டு. * அழுகையு மஞ்சி நோக்குமந்நோக்கும் அணிகொள் செஞ்சிறுவாய் நெளிப்பதுவும், தொழுகையுமிவை கண்டவசோதை தொல்லையின்பத் திறுதிகண்டாளே * என்ற பெருமாள் திருமொழிப் பாசுரத்தில் 'தொல்லையின்பத்து இறுதிகண்டாள்' என்பதற்கு—தொல்லையின்பமாகிய பகவானை [அபரிச்சிந்நனென்று ஓதிக் கிடப்பதற்குப் பிரதியாக]ப் பரிச்சிந்நனைக் கண்டாள் யசோதை—என்று சொல்லிப் போருவதொரு இன்சுவைப் பொருளுக்கு ஆகரம் பட்டரேயாவர்.

* நியந்தா நியமோயம: * என்கிற விடத்திலும் * ஆதாரநிலயோதாதா * என்கிற விடத்திலும் " அநியம :-நியம:." " அயம :—யம:" "அதாதா-தாதா" என்று இரண்டுபடியாகவும் பதச்சேதம் செய்து வியாக்கியானமிட்ட பிறர் * விஜிதாத்மாவிதேயாத்மா * என்ற விடத்திலும் * ஸமாத்மாஸம்மிதஸ் ஸம : * என்ற விடத்திலுங்கூட அப்படியே இரண்டுவிதமாகவும் பதச்சேதம் பண்ணி இரண்டுவகைப் பொருள்களையும் காட்டலாமாயிருந்தும் ஏன் காட்டவில்லை ? என்று ஆராயுமளவில், பகவத் குணங்களிலே ஆழங்காற்படுவதற்கேற்ற திவ்யப்ரபந்தாம்ருதஸாகர அவகாஹனம் பட்டர்க்குப் போல் பிறர்க்கு இல்லாமையினால்தான் என்று ஸ்ரீவைஷ்ணவர்கள் எளிதாக அறுதியிடலாம்.

பரத்வம் ஸௌலப்யம் என்கிற இரண்டுவகுப்புகளுக்குரிய பெருமைகளும் எம்பெருமானிடத்து உள்ளன. இரண்டையும் அநுபவிக்க நாம் இட்டுப்பிறந்திருக்கிறோம். ஆனாலும் அநுபவத்தில் நெஞ்சை நீர்ப்பண்டமாக்குவன எளிமைக்குணங்களேயன்றிப்

பரத்வகுணங்களல்ல. நம்மாழ்வார் *உயர்வறவுயர் நலமுடையவன்* என்று தொடங்கிப் பரத்வத்தை யநுபவித்தவர் சிறிதும் விகாரமடையாமல் பேசிப் போந்தார்; அவர் தாமே *எத்திறமுரலினோடிணைந்திருந் தேங்கிய வெளிவே* என்றும் *பிறந்தவாறும் வளர்ந்தவாறும்* என்றும் பேசி ஆறுமாஸம் மோஹித்து உணர்த்தியற்றுக் கிடந்தார். இதனையே ஆழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில், *தாத்ருக் ந தே சரிதம் ஆர்யஜநாஸ் ஸஹந்தே* என்றும் *ஆர்த்ரீகரோதி விதுஷாம் ஹ்ருதயம் ததேதத்* என்று மருளிச்செய்தார். ஆகவே எளிமைக் குணங்களையே பெரும்பாலும் விவரிக்க நம் ஆசார்யர்கள் குதுகலிக்கின்றார்கள்—ஆழ்வார் காட்டியருளின வழியென்று கொண்டு. இதனால் பரத்வத்திற்கு உள்ளீடான குணங்களில் இவர்கள் பகையும் பொறாமையுமுடையவர்களென்று அர்த்தமல்ல. அக்குணங்களையும் அபரிமிதமாக அருளிச்செய்தே போருகிறார்கள். எளிமைக் குணங்களை யநுபவிக்க இடம் வாய்ப்பாகக் கிடைக்குமானால் அவ்விடத்தையுபேக்ஷியாது நன்கு பற்றுகிறார்கள்.

ஸூக்ஷ்மமான அர்த்தவிசேஷங்களை யருளிச் செய்வதில் எம்பெருமானாரைக் காட்டிலும் பட்டர் மிக வல்லவரென்பது பகவத்விஷய திவ்யக்ரந்த ரஸிகர்களுக்கு அறிய வெளிது. மஹாமேதாவியான இவருடைய புத்திக்கு அநாயாஸமாக கோசரிக்கும் பொருள் மற்றையோருடைய புத்திக்கு ச்ரமப்பட்டும் க்ரஹிக்க முடியாதென்றால் இது அதிசயோக்தியன்று. சிலவிடங்களைக் கொண்டு இதையும் மூதலிப்போம்.

இந்த ஸஹஸ்ரநாமத்திலேயே *அர்த்தோ நர்த்தோ மஹாகோச:* என்றவிடத்தில் அநர்த்த: என்கிற திருநாமத்தை வியாக்கியானிக்கிற பிறர் 'தாம் விரும்பவேண்டிய பொருளில்லாதவர்' என்று உரைத்தனர். இது நம்போல்வார்க்கும் தோற்றக்கூடிய பொருளே. பட்டர் அருளிய பொருளோவென்னில்; அற்பபலன்களை விரும்பக்கூடிய பாக்கிய ஹீநர்களால் விரும்பப்படாதவர் என்பதாக. இதற்கடுத்தபடியாகவுள்ள மஹாகோச: என்கிற திருநாமத்திற்கு 'அந்நமய ப்ராணமயாதிகளான ஐந்து மஹாகோசங்களில் இருப்பவர்' என்கிற பொருள் பிறரால் உரைக்கப்பட்டது. 'அர்த்திகளான பக்தர்களுக்கு அளவிறந்து கொடுத்தாலுங்கூட ஒருநாளுங் குறைபடாத நவநிதிகளையும் ரத்நாகரங்களையும் தம்முடைய பொக்கிஷமாகவுடையவர்' என்பது பட்டருளிச் செய்த பொருள். இப்படியாக நாம் எடுத்தநுபவிக்கக்கூடிய அற்புதமான பொருள்கள் அளவுகடந்து விளங்குகின்றன இவ்வாசிரியருடைய பாஷ்யத்தில்.

... ... ... *

## 18. ஸ்ரீஸூக்த பாஷ்ய பரிசீலனம்

நஞ்சீயர், திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரப்படியுரையும் கண்ணிநுண்சிறுத்தாம்புக்கும் திருப்பாவைக்கும் வியாக்கியானமும் அருளிச்செய்தார். ஸ்ரீஸூக்தத்திற்கு ஸம்ஸ்க்ருத பாஷையில் ஒருபாஷ்யம் இட்டருளினதுண்டு. ஆனால் அது லுப்தமென்று தெரிய வருகிறது. பத்தெட்டு வருடங்களுக்கு முன்பு தேவநாகரிலிபியில் அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ள பாஷ்யம் இவருடையதன்று. அது இவருடையதாயிருக்கச் சிறிதும் ஒளசித்ய

பரத்வகுணங்களல்ல. நம்மாழ்வார் *உயர்வறவுயர் நலமுடையவன்* என்று தொடங்கிப் பரத்வத்தை யநுபவித்தவர் சிறிதும் விகாரமடையாமல் பேசிப் போந்தார்; அவர் தாமே *எத்திறமுரலினோடிணைந்திருந் தேங்கிய வெளிவே* என்றும் *பிறந்தவாறும் வளர்ந்தவாறும்* என்றும் பேசி ஆறுமாஸம் மோஹித்து உணர்த்தியற்றுக் கிடந்தார். இதனையே ஆழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில், *தாத்ருக் ந தே சரிதம் ஆர்யஜநாஸ் ஸஹந்தே* என்றும் * ஆர்த்ரீகரோதி விதுஷாம் ஹ்ருதயம் ததேதத்* என்றருளிச்செய்தார். ஆகவே எளிமைக் குணங்களையே பெரும்பாலும் விவரிக்க நம் ஆசார்யர்கள் குதுகலிக்கின்றார்கள்—இதுவே ஆழ்வார் காட்டியருளின வழியென்று கொண்டு. இதனால் பரத்வத்திற்கு உள்ளீடான குணங்களில் இவர்கள் பகையும் பொறாமையுமுடையவர்களென்று அர்த்தமல்ல. அக்குணங்களையும் அபரிமிதமாக அருளிச்செய்தே போருகிறார்கள். எளிமைக் குணங்களை யநுபவிக்க இடம் வாய்ப்பாகக் கிடைக்குமானால் அவ்விடத்தையுபேக்ஷியாது நன்கு பற்றுகிறார்கள்.

உருக்கமான அர்த்தவிசேஷங்களை யருளிச் செய்வதில் எம்பெருமானாரைக் காட்டிலும் பட்டர் மிக வல்லவரென்பது பகவத்விஷய திவ்யக்ரந்த ரஸிகர்களுக்கு அறிய வெளிது. மஹாமேதாவியான இவருடைய புத்திக்கு அநாயாஸமாக கோசரிக்கும் பொருள் மற்றையோருடைய புத்திக்கு ச்ரமப்பட்டும் க்ரஹிக்க முடியாதென்றால் இது அதிசயோக்தியன்று. சிலவிடங்களைக் கொண்டு இதையும் மூதலிப்போம்.

இந்த ஸஹஸ்ரநாமத்திலேயே *அர்த்தோ நர்த்தோ மஹாகோச : * என்றவிடத்தில் அநர்த்த : என்கிற திருநாமத்தை வியாக்கியானிக்கிற பிறர் ‘ தாம் விரும்பவேண்டிய பொருளில்லாதவர்’ என்று உரைத்தனர். இது நம்போல்வார்க்கும் தோற்றக்கூடிய பொருளே. பட்டர் அருளிய பொருளோவென்னில்; அற்பபலன்களை விரும்பக்கூடிய பாக்கிய ஹீநர்களால் விரும்பப்படாதவர்—என்பதாக. இதற்கடுத்தபடியாகவுள்ள மஹாகோச : என்கிற திருநாமத்திற்கு ‘ அந்நமய ப்ராணமயாதிகளான ஐந்து மஹாகோசங்களில் இருப்பவர்’ என்கிற பொருள் பிறரால் உரைக்கப்பட்டது. ‘ அர்த்திகளான பக்தர்களுக்கு அளவிறந்து கொடுத்தாலுங்கூட ஒருநாளுங் குறைபடாத நவநிதிகளையும் ரத்நாகரங்களையும் தம்முடைய பொக்கிசமாகவுடையவர்’ என்பது பட்டாருளிச் செய்த பொருள். இப்படியாக நாம் எடுத்தநுபவிக்கக்கூடிய அற்புதமான பொருள்கள் அளவுகடந்து விளங்குகின்றன இவ்வாசிரியருடைய பாஷ்யத்தில். ... ... ... *

## 18. ஸ்ரீஸூக்த பாஷ்ய பரிசீலனம்

நஞ்சீயர், திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரப்படியுரையும் கண்ணிநுண்சிறுத்தாம்புக்கும் திருப்பாவைக்கும் வியாக்கியானமும் அருளிச்செய்தார். ஸ்ரீஸூக்தத்திற்கு ஸம்ஸ்க்ருத பாஷையில் ஒருபாஷ்யம் இட்டருளினதுண்டு. ஆனால் அது லுப்தமென்று தெரிய வருகிறது. பத்தெட்டு வருடங்களுக்கு முன்பு தேவநாகரிலிபியில் அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ள பாஷ்யம் இவருடையதன்று. அது இவருடையதாயிருக்கச் சிறிதும் ஔசித்ய

மில்லை யென்பதை அடியேன் ஏற்கெனவே நிரூபித்திருக்கின்றேன். (அறுவருமாறு:—) இந்த பாஷ்யத்தில் இடையிடையில் அபசப்த ப்ரயோகக்கள் காணப்படுகின்றன. (பக்கம் 26-ல்) "லபேயம் இதி" என்றும், (பக்கம் 51-ல்) "ப்ரயுஞ்ஜத்பி:" என்றும் இங்ஙனே பலவகையான ப்ரயோகங்கள் நஞ்சீயருடைய அப்ரதிமவைதுஷ்யத்திற்கு ஒவ்வாமலிருக்கின்றன. இவற்றிற்கு ஒருபடி ஸமாதானஞ் சொல்லிவிடலாமென்று வைத்துக் கொண்டாலும் ஸர்வாத்மநா அஸமாதேயமாக ஒரு விஷயமுள்ளது. (அதாவது) நஞ்சீயர் பட்டருடைய திருவடிகளில் ஆச்ரயித்துத் தேவுமற்றறியா திருந்தவரென்பது விவாதமற்ற விஷயம். அங்ஙனம் ஆசார்யபூதரான பட்டருடைய ஸ்ரீஸூக்திகளை இவர் உதாஹரிப்பதானால் "ததுக்தம் ஆசார்ய பாதை:" என்றருளிச் செய்யலாகுமே யல்லது வேறுவிதமாக இருக்கமாட்டாது. இப்போது வெளிவந்துள்ள மேற்கூறிய பதிப்பில் (பக்கம் 48-ல்) "ஸ்ரீவத்ஸ சிஹ்ந மிச்ரைரபி ப்ரதிபாதிதம். ததாத்மஜைச்ச பட்ட பராசரபாதை:......இதி" என்றும், (பக்கம் 49-ல்) "ஸ்தாபிதஞ்சைதத் ஸ்ரீவத்ஸ சிஹ்ந மிச்ரை: பட்டபராசர பாதைச்ச" என்றும் (பக்கம் 51-ல்) "ததைவ பட்ட பராசர பாதை: நிர்வ்யூடம்" என்றும் இங்ஙனே பலவிடங்களிற் காண்கிறது. ஸாக்ஷாத் சிஷ்யர்கள் அருளிச்செய்யும் கிரந்தங்களில் ஸ்வாசார்யர்களைப்பற்றி இப்படியருளிச்செய்கிற முறை இதுகாறும் வேறு எந்த நூலிலுங் கண்டதில்லை. பட்டர் ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் ஆழ்வானைப்பற்றி ப்ரஸ்தாவிக்கிறபோது "தாதபாதைச்ச" என்கிறார். நயனாசார்யர் தேசிகனைப்பற்றி ப்ரஸ்தாவிக்கும்போது "ஆசார்ய பாதைச்ச" என்கிறார். நஞ்சீயர் பட்டர் திருவடிகளில் வைத்திருந்த ப்ராவண்யம் ஒப்புயர்வற்றது. அப்படியிருக்க, "ஆழ்வானுடைய திருக்குமாரர் சொல்லியிருக்கிறார்" என்றெழுதியிருப்பதென்று கொண்டே இது நஞ்சீயருடைய நிபந்தமன்று, அர்வாசீநப்ரணீதமே யென்று எளிதில் அறுதியிடத் தட்டில்லை.



## 19. பெரிய பிராட்டியார் பெருமை.

பங்குனி யுத்தரம் பெரிய பிராட்டியாருடைய திரு நக்ஷத்திரமாதலால் பிராட்டியாருடைய பெருமையும் இங்குச் சிறிது அநுபவிக்க ப்ராப்தமாகிறது. எம்பெருமானுக்குப் பிராட்டியால் ஏற்றமா? பிராட்டிக்கு எம்பெருமானால் ஏற்றமா? என்கிறவொரு விசாரம் நமது ஆசார்ய கோஷ்டியிலுண்டு. இந்த விசாரமே அவசியமற்றதென்றும் ஒருவரைத் தாழ்த்தி மற்றொருவரை ஏற்றமாகச் சொல்வது எதற்காக வென்றும் சிலர் மறுப்பர். பிராட்டியும் மற்ற சேதநர்களைப்போலே எம்பெருமானுக்கு அடிமைப்பட்டவளே யாதலால் இவளால் எம்பெருமானுக்கு ஏற்றமென்று சொல்வதற்கு என்ன ப்ரஸக்தி யென்பர் சிலர். பிராட்டியின் அம்சமாகிய ஆண்டாளைத் துதிக்கின்ற வேதாந்த தேசிகர் கோதாஸ்துதியில் * ரங்கேச்வரஸ்ய தவ ச ப்ரணயாநுபந்தாத் * (21) என்கிற ச்லோகத்தில் "வாசாலயந்தி வஸுமதே! ரஸிகாஸ் த்ரிலோகீம் ந்யூநாதிகத்வஸமதாவிஷயைர் விவாதை:" என்றருளிச் செய்திருப்பது ரஸிகர்களால் அகங்குழைந்து அநுபவிக்கத்தக்கது. இந்த ச்லோகத்தின் ரஸகனமான தாற்பரியத்தைச் சிறிது விவரிக்கிறேன்; விவாஹகாலங்களில் தம்பதிகளுக்கு மாலை மாற்றுதல் நடைபெறும் முறைமையின்படியே ஆண்டாளுடைய திருக்கல்யாணத்திலும் நடைபெறுமாயிற்று. அப்போது குழாங்கூடிக் கண்டு களிக்கப் பலர் திரள்வர்களே.

[illegible] கிரளில் ரஸிகராயிருப்பார் வாளாவிருக்ககில்லாமல் தம் தம் நெஞ்சில் தோற்றியவாறு சொல்லுவர்கள் ; இராமபிரானுக்கும் ஸீதா பிராட்டிக்கும் திருமணம் நடந்த காலத்தில் "நம்பியைக்காண நங்கைக்கு ஆயிரநயனம் வேண்டும்" என்று சிலர் கூறினதாகவும், "கொம்பினைக் காணுந்தோறும் குரிசிற்கு மன்னதேயாம்" என்று சிலர் கூறினதாகவும் கம்பர் பேசினானன்றோ. அப்படியே இங்கும் எம்பெருமானைத் தாழ்த்தி ஆண்டாளை உயர்த்திப் பேசுவாரும், ஆண்டாளைத் தாழ்த்தி எம்பெருமானை உயர்த்திப் பேசுவாரும், இருவரும் ஏற்றத்தாழ்வின்றியே ஸமமாகவே விளங்குகின்றனரென்று பேசுவாருமாய் இங்ஙனே [illegible]த்துப் பேச ரஸிகருண்டாயிற்றென்பது இந்த ச்லோகத்தின் கருத்து. 'இப்பெருமானுக்கு எங்களுடைய ஆண்டாள் தேவியாக வாய்க்காவிடில் இவனுடைய புருஷோத்தமத்வம் காசுக்கு உதவுமோ?' என்று பெண் வகுப்பினர் பேசுவர். 'உங்களுடைய ஆண்டாளுக்கு எங்கள் பெருமான் மணவாளனாக வாய்க்காவிடில் * கோங்கலரும் பொழில் மாலிருஞ்சோலையில் கொன்றைகள் மேல், தூங்கு பொன்மாலைகளோடுடனாய் நின்று தூங்குகின்றேன் * என்று இவள்தானே சொல்லிக் கொண்டபடி இவள் உபயோகமற்றவளாக ஆய்விடுவளன்றோ' என்று பேசுவர் மணமகன் வகுப்பினர். இருவகுப்பினுஞ் சேராத தடஸ்தர்கள் 'ஏற்றத்தாழ்வு பேசுவதில் நமக்கென்ன போக்யதை?' என்று கொண்டு இருவரையும் பற்றி ஸமமாகவே புகழ்ந்து பேசுவர்கள். ஆனால் ஸமமாகப் பேசுகிற வார்த்தை எடுபடாது. ஏற்றத்தாழ்வான வார்த்தையில் தான் கக்ஷிப்ரதிகக்ஷிகள் விரைவில் மலிந்து பெரிய இரைச்சலாக ஆய்விடும். அது இந்த ச்லோகத்தில் * த்ரிலோகீம் வாசாலயந்தி * என்பதனால் காட்டப்பட்டது. எவ்வளவு ஏற்றத் தாழ்வுகள் சொன்னாலும், தம்பதிகளுள் ஒரு வ்யக்தியினிடத்திலும் சிறிதும் விரோதமின்றியே விநோத வார்த்தைகளேயாகுமத்தனை என்பதை ரஸிகா: என்ற அழகிய சொல்லால் ஸூசிப்பித்தருளினர். இப்படி ஆண்டாள் விஷயத்திற் போலவே பெரிய பிராட்டியார் விஷயத்திலும் ந்யூநாதிகத்வஸமதா விஷயக விவாதங்கள் பொருந்தக் குறையில்லை. எம்பெருமானுக்கு சேஷித்வமும் பிராட்டிக்கு சேஷத்வமும், அப்படியே எம்பெருமானுக்கு ஸகல ஜகத்பதித்வ ப்ரயுக்தமான ஏற்றமும் பிராட்டிக்குப் பத்நீத்வ ப்ரயுக்தமான தாழ்வும் அபலபிக்க வொண்ணாதவை யாகையாலே பிராட்டிக்குத் தாழ்வு சொல்லுவதும் கூடும். இப்படி சாஸ்த்ரீயமான தாழ்வு இருக்கச் செய்தேயும் ஒரு அபிமாந விசேஷத்தினால் "ஜ்ஞாநீது ஆத்மைவ மே மதம்" என்று எம்பெருமானும் சொல்லிவைத்த கணக்கிலே பிராட்டியை உயர்த்தியும் எம்பெருமானைத் தாழ்த்தியும் சொல்லுவது கூடும். * தைவதம் தம்பதீ ந: * என்றபடி பெருமானும் பிராட்டியுமிருவரும் தாயும் தமப்பனும் போலே ஸமமாகக் கருதத் தக்கவர்களென்பதும் உள்ளது.

ஆனாலும் எம்பெருமானுக்கும் பிராட்டியினால்தான் ஏற்றமென்பது வேதம்முதற்கொண்டு ஸகலப்ரமாணங்களாலும் தேறுவதாகும். *ச்ரத்தயா தேவோ தேவத்வமச்நுதே * என்பது ப்ரஸித்தமான வேதவாக்கியம். இதனை நம் ஆசாரியர்கள் உதாஹரித்து எம்பெருமான் பிராட்டியினால் தெய்வத்தன்மைபெறுவதாக வியாக்கியானித்தருளுகிறார்கள். [பிராட்டிக்குள்ள பல திருநாமங்களில் ச்ரத்தா என்பது மொன்று.] இப்படி வேதம் சொன்ன விஷயமானது வேதோபப்ருஂஹணங்களில் தலையான ஸ்ரீராமாயணத்தினால் நன்கு ஸ்தாபிக்

-கப்படுகின்றது; இராவணனுக்கு மாரீசன் ஹிதமுரைக்குமிடத்தில், * அப்ரமேயம் ஹி தத் தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா * என்கிறான். இராவணா! நான் விச்வாமித்ர முனிவனுடைய யாகத்தில் அந்த இராமனுடைய வீரம் கண்டிருக்கிறேன்; அப்போது அவன் பிரமசாரியாயிருந்தான். அந்த நிலைமையிலேயே அவனுடைய பிடார் அஸஹ்யமாயிருந்தது. பிற்கு அவன் ஜநகராஜன் திருமகளைக் கைப்பிடித்தவனாயினான். அதனால் அவனுக்குண்டான அதிசயம் சொல்லிமுடியுமோ? பிராட்டியைக் கைப்பிடித்ததனாலே விலக்ஷணமானவொரு தேஜஸ்ஸே வடிவெடுத்தவனாக வன்றோ இராகவன் இராநின்றான்—என்றல்லவோ மாரீசனுரைத்தது.

இவ்வர்த்த விசேஷத்தை நம்ஆசாரியர்கள் தங்கள் திவ்யஸூக்திகளாலே மிகவும் உபப்ரும்ஹித்தருளினார்கள். பட்டர் ஸ்ரீகுணரத்நகோசத்தில் பிராட்டியின் வைபவமாக அருளிச்செய்தவற்றில் சில அர்த்தங்களை இங்கு அநுபவிப்போம். அதில் *வேதாந்தாஸ் தத்வசிந்தாம் முரபிதுரஸி யத்பாத சிஹ்நைஸ் தரந்தி *என்கிற ஸ்ரீஸூக்தி மிக அற்புதமானது. எது பரதத்துவமென்று விசாரிக்கப்புகுந்த வேதாந்தங்கள் ஸ்ரீமந்நாராயணனுடைய திருமார்பில் பிராட்டியின் திருவடிச்சுவடுகண்டு இவனேபரமபுருஷனென்று நிர்ணயித்துக் கவலை தீர்கின்றனவாம். இதனால் பிராட்டியின் ஏற்றம் நன்கு அறியலாகும். *திருவில்லாத் தேவரைத் தேறேன்மின் தேவு*என்ற திருமழிசைப்பிரான்திருவாக்கும் இங்கு அநுஸந்திக்கவுரியது. ஆனதுபற்றியே நம் ஆசாரியர்கள் எம்பெருமானை விசேஷிக்குமிடங்களில் ச்ரிய: பதியாய் என்று முந்துற முன்னம் அருளிச் செய்கிறார்கள்.

பட்டர் ஸ்ரீரங்கநாதனை இருநூற்று முப்பதுச்லோகங்களால் துதித்துவிட்டுப் பின்பு ஸ்ரீரங்கநாச்சியாரைத் துதிக்கவிழிந்து பத்தெட்டுச்லோகங்கள் பணித்து மீண்டும் ஸ்ரீரங்கநாதனிடஞ் சென்று அப்பெருமானைத் திருப்பள்ளியுணர்த்தி ஒரு விண்ணப்பம் செய்வோம் என்று ஒருச்லோகம் கூறுகின்றார்;—

“ ச்ரிய: ஸ்ரீ: ஸ்ரீரங்கேசய! தவ ச ஹ்ருத்யாம் பகவதீம்
ச்ரியம் த்வத்தோபி உச்சைர் வயமிஹ பணம: ச்ருணுதராம்,
த்ருசௌ தே பூயாஸ்தாம் ஸுகதரளதாரே ச்ரவணத:
புநர் ஹர்ஷோத்கர்ஷாத் ஸ்புடது புஜயோ: கஞ்சுகசதம்” என்று.

(இதன் கருத்து.) திருவுக்குந் திருவாகிய திருவரங்கநாதனே! தேவரீருக்கும் இனியளான நாச்சியாரை தேவரீருக்கு மேற்பட வுயர்த்திப் புகழப்போகிறேன். தேவரீர் பொறுமையின்றி ஆதரவோடு திருச்செவி சார்த்தியருள வேணும். அங்ஙனம் தேவரீர் கேட்டருள்கிறீரென்பதை இங்கு எல்லாரும் தெரிந்துகொள்ளவேணும்; நாச்சியார் விஷயமான துதி மொழிகளை அடியேன் விஜ்ஞாபிக்கும் போது தேவரீருடைய திருக்கண்கள் ஆனந்த மிகுதியினால் கருவிழி சுழன்று மிளிரவேணும்; அவ்வளவே போதாது; ஆனந்தத்தினால் திருமேனி பூரித்துக் கவசம் இருபிளவாகி யொழியவேணும். மறுபடியும் புதிய கவசம் கொணர்ந்து சாத்துவர்கள். அதுவும் பிளவுண்ணவேணும். இப்படியே

நூற்றுக்கணக்கான கவசங்கள் பிளவுபடுமாறு தேவரீர் ஆனந்த மிருதியைக் காட்டிக் கொண்டே திருச்செவிசாத்தவேணும்என்பதாம். இதனாலும் பிராட்டியின் வைபவம் மிக்க மேம்பாடுடைய தென்பது விளங்கும்.

மற்றொரு ச்லோகமும் காண்மின்:—"அபாங்கா பூயாம்ஸோ யதுபரி பரம் ப்ரஹ்ம ததபூத்" என்கிறார். பிராட்டியின் கடாக்ஷாதிசயங்கள் பட்ட விடமே பரப்ரஹ்மம் என்கிறது இதனால்.

எம்பெருமானுடைய பெருமை பிராட்டியின் ஸம்பந்தத்தினால் வந்தது என்பதற்கும் பிராட்டியின்பெருமை இயற்கையானது என்பதற்கும் ஒரு த்ருஷ்டாந்தம் காட்டுகிறார்;—புஷ்பத்திற்கு ஏற்றம் எதனாலே என்று உலகத்தில் கேள்வி பிறப்பதுண்டு; பரிமளத்தினால் என்று விடை யளிப்பதுண்டு. இதுபோல் 'பரிமளத்திற்கு எதனால் ஏற்றம்?' என்று உலகில் கேள்வி பிறப்பது கிடையாது. இயற்கையாகவே அதனுடைய ஏற்றம் ப்ரஸித்தம். இவ்வண்ணமாகவே, எம்பெருமானுக்கு யாரால் ஏற்றம் என்கிற கேள்வியும், பிராட்டியினால் என்கிற விடையும் உண்டு; பிராட்டிக்கு யாரால் ஏற்றம்? என்கிற கேள்வியே கிடையாது; அவளுடைய ஏற்றம் ஸ்வதஸ்ஸித்தம் என்றும் அருளிச் செய்கிறார்—**தவஸ்பர்சாதீசம்** என்கிற ச்லோகத்தினால்.

எம்பெருமானுடைய பெருமை பிராட்டியதீனம் என்று சொன்னால் அப்பெருமைக்கு ஒருகுறைபாடு ஏற்படாதோ? என்று சிலர் சங்கிப்பதை அநுவதித்து விடையளிக்கு மழகு ஆச்சரியமானது; மாணிக்கமானது ஒளியினால் மேன்மை பெறுவதாயினும் பராதீன வைபவசாலித்வமாகிற குறைபாடு அதற்குண்டாவதில்லை யன்றோ என்கிற த்ருஷ்டாந்தம் இங்குக் காட்டி யருளுகிறார். ஆக இவற்றால் ஏற்படுவதென்ன? பூவும்மணமும் மணியுமொளியும் போலே பெருமாளும் பிராட்டியும் விட்டுப்பிரியகில்லாதவர்கள் என்றதாகிறது. மணத்தைக்கொண்டு புஷ்பத்தை விரும்புவது போலவும் ஒளியைக்கொண்டு ரத்னத்தை விரும்புவது போலவும் பிராட்டியைக்கொண்டு எம்பெருமானை விரும்புகிறோமென்று காட்டும் முகத்தால் பிராட்டியின் பெருமை விளக்கப்பட்டதாயிற்று.

கம்பர் வாலிவதைப் படலத்தில் பிராட்டியின் பெருமையை விளக்கியிருக்கும் பரிசும் இங்கு ப்ரஸங்காத் குறிப்பிடலாகிறது. வாலி ஸ்ரீ ராம பாணத்தினால் அடிபட்டு வீழ்ந்து பெருமானை நோக்கிப் பலபல பேசுகையில் "அரக்கரோ ரழிவு செய்து கழிவரேல் அதற்கு வேறோர், குரக்கினத்தரசைக் கொல்ல மனுநெறி கூறிற்றுண்டோ, இரக்கமெங்குஉகுத்தா யென்பால் எப்பிழை கண்டாயப்பா, பரக்கழியிது நீ பூண்டால் புகழை யார் பரிக்கற்பாலார்?" என்று கேள்வி கேட்டான். இதற்குப் பெருமாள் பணிக்கிற விடைகள் ஒரு புறமிருக்க, வாலிதானே தானறிந்த விடையொன்று விளம்புகின்றான் காண்மின்:—

"கோவியல் தருமமுங்கள் குலத்துதித்தோர்கட் கெல்லாம்
ஓவியத் தெழுதவொண்ணா வுருவத்தா யுடைமை யன்றோ?
ஆவியைச் சனகன்பெற்ற வன்னத்தை அமிழ்தின்வந்த
தேவியைப் பிரிந்த பின்னைத் திகைத்தனைபோலுஞ் செய்கை."

என்ற செய்யுளில் பின்னடிகள் நோக்கத் தக்கன. பிராட்டி உடனிருந்தால் நீ இத்தகைய இரக்கமற்ற செயல் செய்திருக்கமாட்டாய்; அவள் பிரியநுற்றதனாலேயே நீ இங்ஙனே செய்யலாயிற்று என்றபடி. மஹாவித்வானான அரசாணிபாலை, வேங்கடாசாரிய அத்வரியும் இக்கருத்தைத் தழுவி லக்ஷ்மீஸஹஸ்ரத்தில் ஒரு ச்லோகம் கூறியுள்ளார்;—

**த்வய்யேவாயததே க்ருபா ரகுபதேர் தேவஸ்ய ஸத்யம் யதோ**
**வைதேஹி த்வதஸந்நிதள பகவதா வாலீ நிராகா ஹத:**
**ஸந்நியே காமி வதம் வஹூஸ், தவது ஸாந்நித்யே த்வதங்கவ்யதாம்**
**குர்வாணேப்யவித: பதந்கசரண: காகோ விவேகோஜ்ஜித:**

இதன் கருத்து:—பெரிய பிராட்டியாரே! பெருமாள் காருணிகரென்று பேர்பெற்றிருந்தாலும் அவருடைய கருணை உம்முடைய அதீனமேயாகும். இஃது எங்ஙனே தெரிகிறதென்னில்; அப்பெருமாள் உம்மோடு கூடியிருந்த காலத்திற் செய்த செயலையும் உம்மைப் பிரிந்திருந்த காலத்திற் செய்த செயலையும் நோக்குமிடத்து இது நன்கு தெரிகின்றது. காகாஸுரனிற் காட்டில் கொடிய பாதகியில்லை; பெருந்தீம்பனான அவனையும் பெருமாள் காத்தருளினது உம்முடைய ஸாமீப்ய ப்ரபாவத்தினாலன்றோ? நீர் மிதிலையில் வாழ்ந்த காலத்தில் அவர் தாடகையென்கிற வொரு பெண்ணைக் கொலைசெய்தார்; நீர் இலங்கைப்பதியிலிருந்த காலத்து அவர் வாலியை வதஞ் செய்தார். ஆகவே உம்முடைய ஸம்ச்லேஷம் அவர்க்குக் காருண்யத்தை ஊட்டுகின்றதென்றும், உம்முடைய விச்லேஷம் அவர்க்கு அதனை ஓட்டுகின்றதென்றும் சொல்லத் தட்டுண்டோ? என்றவாறு.

**"ஸஹதர்மசரீம் சௌரே: ஸம்மந்த்ரிதஜகத்திதாம், அநுக்ரஹமயீம் வந்தே நித்யமஜ்ஞாதநிக்ரஹாம்."** என்ற தேசிகஸூக்தியும் பிராட்டியின் பெருமையை வெகு அழகாகக் காட்டும். இன்னமும் விரிப்பிற் பெருகும்.

## 20. கத்யத்ரயத்தின் பெருமை.

ஸ்வாமியெம்பெருமானார் நவநிதிகள்போலவும் நவரத்னங்கள் போலவுமருளிச்செய்த ஒன்பது திவ்யக்ரந்தங்களுள் சரணாகதிகத்யம் ஸ்ரீரங்ககத்யம் ஸ்ரீவைகுண்டகத்யம் என்கிற மூன்று திவ்யக்ரந்தங்கள் கத்யத்ரயமென்று வழங்கப்பெறும். இவற்றுள் சரணாகதி கத்யம் திருவரங்கம் பெரியகோயிலில் பங்குனியுத்தரத் திருநாளில் ஸ்ரீரங்கநாதனும் ஸ்ரீரங்கநாச்சியாருமான சேர்த்தியிலே அநுஸந்திக்கப்பட்டதென்று ஸம்ப்ரதாயம். மூன்று கத்யங்களும் அப்போதே அநுஸந்திக்கப்பட்டன வென்பாருமுளர். இந்த கத்யங்களின் சொல்லின்பமும் பொருளின்பமும் அநுபவரஸிகர்களுக்கே அறியத்தக்கதாகும். அது நிற்க: இந்த சரணாகதிகத்யத்தில் முதலில் பெரியபிராட்டியாரை நோக்கிப் புருஷகாரப்ரபத்தி செய்யப்படுகிறது; **"பகவச்சரணாரவிந்த சரணாகதி: யதாவஸ்திதா அவிரதா அஸ்து மே"** என்று பிராட்டியைநோக்கி ஸ்வாமி ப்ரார்த்தித்தவுடனே, பிராட்டியின் திருவாக்கிலிருந்து **"அஸ்து தே; தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே"** என்கிற அநுக்ரஹவாக்யம் அவதரித்துள்ளது. இங்கு, * **அஸ்து தே** * என்றவளவோடு நில்லாமல் * **தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே** * என்று

அதிகமான வொருவாக்யம் காண்கிறதே, இது எதற்காக? என்று விவேகிகள் விமர்சிக்க
நேரும். ச்ருதப்ரகாசிகாசார்யரான ஸ்ரீஸுதர்சநபட்டர் சரணாகதிகத்யத்திற்கு மாத்திரம்
ஸம்க்ஷிப்தமாக வொரு பாஷ்யமருளிச் செய்துள்ளார்; அதில் இவ்விடத்தில் "ஸம்பந்தி
நிஸ்தாரணமபி ஸர்வசப்தாபிப்ரேதம்" என்று அருளிச்செய்யப்பட்டுளது. சரணாகதி செய்கிற
ஒருவர்க்குமாத்திரமே சரணாகதியினால் பலனா? அல்லது அவரோடு ஸம்பந்தம் பெற்றவர்
களுக்கும் பலனுண்டா? என்றொரு விசாரம். கர்த்தாவான வொருவனே பலனையநுபவிக்க
முடியுமாதலால் ஒருவர்க்கேதான் பலன்; ஸம்பந்திகளுக்குப்பலன் அஸம்பாவிதம்—என்று
சொல்லுகின்ற சிலர் மேலெடுத்துக்காட்டிய * ஸம்பந்தி நிஸ்தாரணமபி ஸர்வசப்தாபிப்ரேதம் *
என்கிற ஸ்ரீஸூக்தியைக்காட்டக் காணப்பெற்றபின்பு 'ஸம்பந்திகளுக்கும் பலனுண்டு என்
றாலும் ஸாக்ஷாத்ஸம்பந்த முடையவர்களுக்குச் சொன்னால் சொல்லலாமே தவிர, பரம்
பராஸம்பந்த முடையவர்களுக்குச் சொல்லவே முடியாதென்று கூறத் தலைப்பட்டார்கள்.
இக்கூற்று பொருத்தமுடையதன்று. ச்ருதப்ரகாசிகாசார்யர் சரணாகதிகத்ய பாஷ்யத்தில்
அருளிச்செய்தது மாத்திரமேயன்றி ஸ்ரீபாஷ்யத்தில் * அகிலபுவநஜந்மேத்யாதி மங்களச்
லோகத்தில் * விநத விவிதபூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே * என்றவிடத்து விவரணத்திலும் விபுல
விசதமாக அருளிச் செய்துள்ளார். அதுவும் இங்கு விவரிக்கப்படுகிறது. விநத விவிதபூத
வ்ராத ரக்ஷைகதீக்ஷே என்பதற்கு—வணங்கின பலவகைப்பட்ட ப்ராணி ஸமூஹங்களை
ரக்ஷிப்பதையே முக்கியமான விரதமாகக் கொண்டவன் என்று சப்தார்த்தம். இங்கு
[பூ த வ் ரா த] என்றவிடத்திலுள்ள நிதியை ச்ருதப்ரகாசிகாசார்யர் எடுத்துக்காட்டுகிறார்;
பூதவ்ராத மென்பதற்கு ப்ராணிஸமூஹமென்று பொருளானாலும் இதில் சிறிது உட்புகுந்து
ஆராய வேண்டும். ப்ராஹ்மண ஸமூஹம் என்று சொன்னால், அந்தத்திரளிலுள்ளவர்கள்
யாவரும் அந்தணர்களேயென்றும் அந்தணரல்லாதார் அத்திரளில் யாருமிலரென்றும்
தெரியவரும். பல அந்தணர்களின் திரட்சியையே ப்ராஹ்மணஸமூஹமென்கிறோம். ராஜ
பரிஷத் என்றும் ஒருவ்யவஹார முள்ளது. ப்ராஹ்மணஸமூஹமென்ற வ்யவஹாரம் போன்ற
தல்ல இந்தவ்யவஹாரம். ஏனென்னில், பல அரசர்களின் திரட்சியை ராஜபரிஷத் தென்
கிறோமல்லோம். மந்திரிகளும் ப்ரஜைகளுமாகிய பிறரும் அரசனோடு கூடியிருக்கு மிருப்
பையே ராஜபரிஷத் தென்கிறோம். ப்ராஹ்மணஸமூஹ: என்ற விடத்திலும் ஷஷ்டீதத்
புருஷ ஸமாஸமே கொள்கிறோம்; ராஜபரிஷத் என்ற விடத்திலும் அந்த ஷஷ்டீதத்புருஷ
ஸமாஸமே கொள்ளுகிறோம். ஸமாஸத்தில்வாசியில்லையாயினும் பொருளில் நெடுவாசி யுள்
ளது. பூதவ்ராத மென்கிற இவ்விடத்தில் ச்ருதப்ரகாசிகா ஸ்ரீஸூக்தி காண்மின்;—

"भूतसंबन्धी व्रातो भूतव्रातः। संश्रितसंबन्धिनोऽपि तत एव कारणात् भगवतो रक्ष्या इत्यभि-
प्रायः। . . . . * पशुर्मनुष्यः पक्षी वा ये च वैष्णवसंश्रयाः। तेनैव ते प्रयास्यन्ति तद्विष्णोः परमं पदम् *

என்று. விநத விவித பூதங்களை மாத்திரம் ரக்ஷிக்கை யன்றிக்கே அந்த ப்ராணிகளோடு
ஸம்பந்தப்பட்டவர்களையுங் கூட முற்சொன்ன விநதர்களின் விநதியே காரணமாக ரக்ஷிக்
கிறானெம்பெருமான் என்றதாயிற்று. தத்வடீகையில் வேதாந்த தேசிகன் இவ்வர்த்தத்தை
வெகு அழகாக உப்பாதித்துப் பொருந்த வைக்கிறார்;

" भूतसंबन्धी व्रातः अत्र तानि तदीयानिच । षष्ठ्या संबन्धसामान्योक्तेः । अन्यथा व्रातशब्दनैरपेक्ष्यात् । नह्यत्र सत्रवत् संहतानामेव प्रवृत्तिः फलावाप्तिर्वा । "

என்பவை அவ்விடத்து தேசிக ஸ்ரீஸூக்திகள். விரத விவித பூதங்களோடு ஸாக்ஷாத் ஸம்பந்தமோ பரம்பராஸம்பந்தமோ ஏதேனுமொருபடி தொடர்புடையவர்களையும் எம்பெருமான் ரக்ஷித்தருளுகிறானென்பது ஸித்தாந்தம். ஸ்ரீபாஷ்யகாரர்க்கு இங்ஙனே விவக்ஷையில்லை யாகில் இங்கே வ்ராத சப்த ப்ரயோகம் பண்ணியிருக்கமாட்டார். இப்படி அர்த்தம் கொண்டால் தான் வ்ராத சப்தம் ஸப்ரயோஜந மாகும். இல்லை யானால் விவித என்னும் சப்தத்தோடு புநருக்தமாகும்—என்றுயிற்று தேசிகன் நிருபித்தருளியிருப்பது. எம்பெருமானருடைய குடல் துடக்குள்ள நம்போன்றவர்களும் அவருடைய ஸம்பந்தமே பற்றுசாக உத்தீர்ணராவோ மென்பது திண்ணிதாயிற்று. இதனையே தேசிகன் ந்யாஸதிலகத்தில் இரண்டு ச்லோகங்களினால் அதிரமணீயமாக அருளிச் செய்கிறார். *அந்தோநந்தக்ரஹணவசக: என்பது முதல் ச்லோகம். ப்ராப்யத்தைப் பெறுவதற்கு ஸ்வத: சக்தியற்ற வொருவன் பிறருடைய துணையினால் தாராளமாகப் பேறு பெறுவான் என்பதற்கு இந்த ச்லோகத்தில் மூன்று த்ருஷ்டாந்தங்கள் காட்டியுள்ளார். கண்ணில்லாத குருடன் கண்தெரிந்த வொருவனுடைய ஸஹாயம் பெற்று வழி நடந்து செல்வது போலவும், க்காலில்லாத முடவன் ஓடக்காரனால் ஓடம் வாயிலாகக் கரை சேர்க்கப்படுவது போலவும், ஞானமும் நன்னடத்தையுமில்லாத சிஷ்யன் ஞான மனுஷ்டான மிவை நன்றாகவே யுடைய குருவினால் ஸம்ஸாரக் கடலைக் கடந்துப் பெறுகிறுனென்று பூர்வார்த்தத்தில் காட்டினார். மேல் மூன்றுவது பாதத்தில் "புங்க்தே போகாந் அவிதித ந்ருப: ஸேவகஸ்ய அர்ப்பகாதி:" என்றொரு ஆச்சரியமான த்ருஷ்டாந்தம் காட்டியருளுகிறார். ஒரு மஹாராஜனிடத்திலே ஒரு அமாத்யன் நெடுநாள் ஸேவை பண்ணி அநவதிகமான பொருளைத் திரட்டி நிதியாகச் சேமித்து வைத்துவிடுகிறான்; அதனை அந்த அமாத்யனுடைய வம்சபரம்பரையில் தோன்றினவர்களெல்லாரும் [புத்ர பௌத்ர நப்த்ரு பாம்பரயா] நீண்டகாலம் அநுபவித்துவருகிறார்கள். அவர்கள் அந்த த்ரவ்யத்தை முதன் முதலாகக் கொடுத்த மஹாராஜனையும் பார்த்தவர்களல்லர்; பணிவிடைகள் செய்து அதனைப் பெற்ற ஸ்வகுல கூடஸ்தனான அமாத்யனையும் பார்த்தவர்களல்லர்; அவ்வமாத்யனுடைய பரம்பரையில் தோன்றினவர்களென்கிற ஒரு காரணங்கொண்டே அப்பொருளை நிராபாதமாக அநுபவித்து வருகிறார்கள். இது ஸர்வஜநீநமாக உலகில் காணும் விஷயம். இதனையே முக்கிய த்ருஷ்டாந்தமாகக் காட்டுகிறார் தேசிகன். பகவானிடத்தில் சரணாகதி செய்த மஹாபுருஷனோடு பாம்பராஸம்பந்த முள்ளவர்களுக்கும் பேறு தப்பாதென்பதை த்ருடப்படுத்துவதற்காகவே அருமையான இந்த மூன்றுவது த்ருஷ்டாந்தம் நிருபிக்கப்பட்டது. மஹாராஜ ஸ்தானத்தில் ஸ்ரீரங்கநாதனை வைத்து, அமாத்யஸ்தானத்தில் ஸ்ரீராமாநுஜரை வைத்து தத்வம்ச பரம்பரையில் தோன்றின ப்ரஜையின் ஸ்தானத்தில் தம்மைவைத்துப் பேசுகிறார். ஸ்ரீராமாநுஜ ஸம்பந்தமொன்றே தமக்குப் பேற்றுக்குடல் என்று நிஷ்கர்ஷிக்கிறார்.

அமாத்யகர் பொருள் சேமித்து வைத்தது வாஸ்தவமாக இருந்தாலொழிய தத்ஸம்பந்திகள் வட்டியையநுபவிக்க முடியாதன்றோ. அதுபோல ஸ்ரீராமாநுஜர் ஸம்பா

[illegible] திருமா[illegible] இருந்தாலொழிய ஸ்ரீதேசிகனும் [illegible] [illegible] முடியாதாதலால் ஸ்ரீராமாநுஜர் சேமித்து வைத்திருப்ப[illegible] [illegible]மே யென்று நிரூபிக்க வேண்டுவது அவசியமாயிற்று. அதற்காக *உக்த்யா த[illegible] [illegible] லக்ஷ்யயா தே பர்த்யாய்ய லக்ஷ்மணமுநேர் பவதா விதீர்ணம், ச்ருத்வா வரம் தத[illegible]பந்த மதாவலிப்தே நித்யம் ப்ரஸீத பகவந் மயி ரங்கநாத!* என்கிற அடுத்த ச்லோகமருளிச் செய்தார். இதில் *ச்ருத்வா வரம் ததநுபந்தமதாவலிப்தே* என்ற மூன்றாவது பாதம் உயி[ர்]ரானது. ஸ்ரீராமாநுஜர்க்கு ஸ்ரீரங்கநாதன் ஒருவரம் கொடுத்திருப்பதாக இதில் ஸ்பஷ்டமாகவுள்ளது. அந்த வரம் எப்படிப்பட்டதென்று நாம் எளிதாகத் தெரிந்து கொள்வதற்காகவே இங்கு * ததநுபந்தமதாவலிப்தே * என்று தமக்கொரு விசேஷணமிட்டுக் கொள்ளுகிறார். இந்த விசேஷணம் இங்கு எதற்காகவென்று ஆராயவேணும். ஸ்ரீரங்கநாதன் ஸ்ரீராமாநுஜரை நோக்கி "உமக்கும் உமது ஸம்பந்தம் பெற்றவர்களுக்கும் உஜ்ஜீவனம் தந்தோம்" என்று வரமளித்திருந்தாலொழிய இந்த விசேஷணம் இங்குப் பொருந்தாதன்றோ. ஒரு வரப்ரஸாதமும் இல்லையானாலுங்கூட * விந்தவிலிதபூதவ்ராதரக்ஷைகதீக்ஷே * என்ற விடத்து நிரூபிக்கப்பட்ட தத்வார்த்தத்தின்படிக்கும், * புங்க்தே போகாந் அவிதிதந்ருபஸ் ஸேவகஸ்ய அர்ப்பகாதி :* என்றிட்ட த்ருஷ்டாந்தஸ்வாரஸ்யத்தின்படிக்கும் எம்பெருமானாருடைய ஸம்பந்த ஸம்பந்திகளுக்கும் பேறு ப்ராப்தமாயிருக்க, விசேஷித்து ஒரு வரப்ரஸாதமும் ச்ருதமானால் கிம்புந:? மணவாளமாமுனிகளும் யதிராஜவிம்சதியில் * காலத்ரயேபி * (18) என்கிற ச்லோகத்தில் * க்ஷேமஸ் ஸ ஏவ ஹி யதீந்த்ர! பவச்சிதாநாம் * என்று தலைக்கட்டியருளினது குறிக்கொள்ளத் தக்கது.

ஆகவே, உய்யும்வழி யுணர்கில்லாத அஸ்மதாதிகளும் உய்வதற்குறுப்பாக அவதரித்த சரணாகதிகத்தியத்தின் பெருமை ஒப்புமுயர்வுமற்றதே. ... ... *

## 7. சித்திரை மாதம்.

இம்மாதத்தில் ஆழ்வார்கள் பதின்மருள் ஒருவரும் அவதரிக்கவில்லையாயினும் பிறகு ஆசார்யர்களால் ஆழ்வார் கோஷ்டியில் சேர்த்துக் கொள்ளப்பட்ட மதுரகவிகளும், ஜகதாசார்யரான எம்பெருமானாரும், அவர்க்குப் பாதுகாஸ்தாநீயரான முதலியாண்டானும், திருமலையனந்தாழ்வானும் (இம்மாதத்தில்) திருவவதரித்தவர்கள். இவர்களுடைய பெருமைகளை அடைவே அநுபவிப்போம்.

### 21. மதுரகவிகள்.

இவர் ஆழ்வார்திருநகரிக்கருகிலுள்ள திருக்கோளூரில் சித்திரையில் சித்திரை நாளில் திருவவதரித்தவர். வகுள பூஷண பாஸ்கரோதயத்திற்கு அருணோதயம் போன்றது இவரது திருவவதாரமென்பர் பெரியோர். நம்மாழ்வாரிற் காட்டிலும் திருநக்ஷத்திரத்தில் இவர் மூதவர் என்பது இதனால் விளங்கும். இவர் வேதசாஸ்திரங்களை இளமையிலே பயின்று செவிக்கினிய செஞ்சொற் கவிகளைப் பாட வல்லவராய் அதனால் மதுரகவி யென்று திருநாமம் பெற்று மெய்

தித்து வைத்திருப்பது வாஸ்தவமாக இருந்தாலொழிய ஸ்ரீதேசிகனும் பின்புள்ளாரும் அதன் பலனை அநுபவிக்க முடியாதாதலால் ஸ்ரீராமாநுஜர் சேமித்து வைத்திருப்பது உண்மையே யென்று நிரூபிக்க வேண்டுவது அவசியமாயிற்று. அதற்காக *உக்த்யா தநஞ்ஜய விபீஷண லக்ஷ்யயா தே ப்ரத்யாய்ய லக்ஷ்மணமுநேர் பவதா விதீர்ணம், ச்ருத்வா வரம் தததுபந்த மதாவலிப்தே நித்யம் ப்ரஸீத பகவந் மயி ரங்கநாத!* என்கிற அடுத்த ச்லோகமருளிச் செய்தார். இதில் *ச்ருத்வா வரம் தததுபந்தமதாவலிப்தே* என்ற மூன்றாவது பாதம் உயிரானது. ஸ்ரீராமாநுஜர்க்கு ஸ்ரீரங்கநாதன் ஒருவரம் கொடுத்திருப்பதாக இதில் ஸ்பஷ்டமாகவுள்ளது. அந்த வரம் எப்படிப்பட்டதென்று நாம் எளிதாகத் தெரிந்து கொள்வதற்காகவே இங்கு * தததுபந்தமதாவலிப்தே * என்று தமக்கொரு விசேஷணமிட்டுக் கொள்ளுகிறார். இந்த விசேஷணம் இங்கு எதற்காகவென்று ஆராயவேணும். ஸ்ரீரங்கநாதன் ஸ்ரீராமாநுஜரை நோக்கி “உமக்கும் உமது ஸம்பந்தம் பெற்றவர்களுக்கும் உஜ்ஜீவனம் தந்தோம்” என்று வரமளித்திருந்தாலொழிய இந்த விசேஷணம் இங்குப் பொருந்தாதன்றோ. ஒரு வாப்ரஸாதமும் இல்லையானாலுங்கூட * விநதவிவிதபூதவ்ராதரக்ஷைகதீக்ஷே * என்றவிடத்து நிரூபிக்கப்பட்ட தத்வார்த்தத்தின்படிக்கும், * புங்க்தே போகாந் அவிதிதந்ருபஸ் ஸேவகஸ்ய அர்ப்பகாதி:* என்றிட்ட த்ருஷ்டாந்தஸ்வாரஸ்யத்தின்படிக்கும் எம்பெருமானாருடைய ஸம்பந்த ஸம்பந்திகளுக்கும் பேறு ப்ராப்தமாயிருக்க, விசேஷித்து ஒரு வரப்ரஸாதமும் ச்ருதமானால் கிம்புந:? மணவாளமாமுனிகளும் யதிராஜவிம்சதியில் * காலத்ரயேபி * (18) என்கிற ச்லோகத்தில் * க்ஷேமஸ் ஸ ஏவ ஹி யதீந்த்ர! பவச்ச்ரிதாநாம் * என்று தலைக்கட்டியருளினது குறிக்கொள்ளத் தக்கது.

ஆகவே, உய்யும்வழி யுணர்கில்லாத அஸ்மதாதிகளும் உய்வதற்குறுப்பாக அவதரித்த சரணாகதிகத்தியத்தின் பெருமை ஒப்புமுயர்வுமற்றதே. ... ... *

## 7. சித்திரை மாதம்.

இம்மாதத்தில் ஆழ்வார்கள் பதின்மருள் ஒருவரும் அவதரிக்கவில்லையாயினும் பிறகு ஆசாரியர்களால் ஆழ்வார் கோஷ்டியில் சேர்த்துக் கொள்ளப்பட்ட மதுரகவிகளும் ஜகதாசார்யரான எம்பெருமானாரும், அவர்க்குப் பாதுகாஸ்தாயீயரான முதலியாண்டானும், திருமலையனந்தாழ்வானும் (இம்மாதத்தில்) திருவவதரித்தவர்கள். இவர்களுடைய பெருமைகளை அடைவே அநுபவிப்போம்.

### 21. மதுரகவிகள்.

இவர் ஆழ்வார்திருநகரிக்கருகிலுள்ள திருக்கோளூரில் சித்திரையில் சித்திரை நாளில் திருவவதரித்தவர். வகுள பூஷண பாஸ்கரோதயத்திற்கு அருணோதயம் போன்றது இவரது திருவவதாரமென்பர் பெரியோர். நம்மாழ்வாரிற் காட்டிலும் திருநக்ஷத்திரத்தில் இவர் மூதவர் என்பது இதனால் விளங்கும். இவர் வேதசாஸ்திரங்களை இளமையிலே பயின்று செவிக்கினிய செஞ்சொற் கவிகளைப் பாட வல்லவராய் அதனால் மதுரகவி யென்று திருநாமம் பெற்று மெய்

புணர்வினால் நிறைந்து மஹா விரக்தராய் விஷ்ணுபக்தி விஞ்சி யோக நிஷ்டையிலும் தேர்ந்து தீர்த்த யாத்திரா திவ்ய தேச யாத்திரைகளிலே திருவுள்ளமுடையராய்ப் புறப்பட்டு ஸஞ்சரிக்கலுற்று வடநாட்டுத் திருப்பதிகளைச் சேவித்துக்கொண்டு வருகையில், திருவயோத்தியிலிருந்து ஒரு நாளிரவில் திருக்கோளூ ரெம்பெருமானைத் திசை நோக்கித் தொழுபவராய்த் தெற்குத் திக்கில் கண்செலுத்திய பொழுது அப்பக்கத்திலே வானுற வளர்ந்து விளங்குகின்றதொரு திவ்யமான பேரொளியைக் கண்ணுற்று அது இன்னதென்றறியாமல் திகைத்து நின்றார்; அச்சுடர் முச்சுடரொளியினும் மிக்கு விளங்கியதனால் வெகு வியப்புற்று, அச்சோதியையே குறியாகக் கொண்டு விரைவாக நெடுவழி கடந்து நடந்து வந்து ஆழ்வார்திருநகரியையடைந்து, அதில் அவதரித்தருளியுள்ள சடகோப முனிவரது திருமேனி விளக்கத்தைச் சேவித்து, இதுவே அத்தனை நெடுந்தூரம் பிரகாசித்ததென்று அறிந்து வியந்து, அவ்வாழ்வாரது நிலைமை முன்பு தாம் கேள்வியுற்றிருந்தபடியே அப்ராக்ருதமாயிருக்கக் கண்டு அவர்க்குக் கட்புலனும் வாய்ப்புலனும் உள்ளனவா வென்பதைச் சில உபாயங்களினால் பரிசோதிப்பவரானார். அப்பொழுது காரிமாறப்பிரான் கண் திறந்து கடாக்ஷித்து இவர் கேட்ட கேள்விக்கு ஏற்றவிடை சொல்லியருள, அது கேட்டு மதுரகவிகள் ஆழ்வாரது ஞான வைபவத்திற்கு அதிசயித்து ஈடுபட்டு அவரையே ஆசாரியராகக் கொண்டு சரணம் புகுந்தனர்.

அவ்வாழ்வார், பக்தியின் பரீவாஹரூபமாக அருளிச் செய்த சதுர்வேத ஸாரமாகிய நான்கு திவ்ய ப்ரபந்தங்களை இம்மதுரகவிகள் தாம் பட்டோலைகொண்டு கைத்தாளமெடுத்துப் பண்ணிசையோடு அவற்றை எப்பொழுதும் பாராயணஞ்செய்து கொண்டு திருக்குருகூர்நம்பிக்கு ப்ரதாநசிஷ்யராய், பரதாழ்வானுக்கே பணிவிடைபுரிந்தொழுகின சத்ருக்நாழ்வானைப்போல் பகவத் பக்தியினும் பாகவதப்ரதிபத்தியையே பரமாநுஷ்டாநமாகத் தலைக்கொண்டு அவ்வாழ்வார்விஷயமாக 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்ற திவ்ய ப்ரபந்தத்தைப் பாடி முமுக்ஷுக்களுக்கு உபகரித்தருளினர்.

பகவத் பக்தியிற் சிறந்தவர்களையே ஆழ்வார்களென்று சிறப்பித்துக் கூறுதலும், அவர்கள் அருளிய ப்ரபந்தங்களையே திவ்ய ப்ரபந்தங்கள் என்று கூறுவதும் ஸம்ப்ரதாயமாயிருக்கவும் ஸ்ரீமந்நாதமுனிகள் தொடக்கமான நம்பூருவாசாரியர்கள் இம்மதுர கவிகளை ஆழ்வார்களது கோஷ்டியில் சேர்த்து இவரருளிய கண்ணிநுண் சிறுத்தாம்பையும் அருளிச்செயல்களினிடையே சேர்த்தருளினர் என்பது மணவாள மாமுனிகளின் உபதேசரத்தின மாலையில்

" வாய்த்த திருமந்திரத்தின் மத்திமமாம் பதம்போல்
சீர்த்த மதுரகவி செய்கலையை—ஆர்த்தபுகழ்
ஆரியர்கள் தாங்கள் அருளிச்செயல் நடுவே
சேர்வித்தார் தாற்பரியந் தேர்ந்து."

என்ற பாசுரத்தினால் அறியத்தக்கது. இப்பாசுரத்தின் உரையில் பிள்ளைலோகஞ் சீயர்—"இதுதான் *பயிலுஞ் சுடரொளி* நெடுமாற் கடிமை தொடக்கமானவற்றின் அர்த்தத்தை ப்ரதிபாதிக்கையாலே இதின் அர்த்த கௌரவத்தை விசாரித்து, நன்றாயிருப்பதொரு ஹாரத்

தைச் சமைத்து அது ஒளிபெறும்படி ச்லாக்யமாயிருப்பதொரு நாயகக்கல்லை அதன் நடுவே பதித்தாற்போலே அருளிச் செயல்கள் தான் நிறம் பெறும்படி அவற்றின் நடுவே இதைச் சேர்த்தார்கள். சேர்த்த சேர்க்கையின் சாதுர்யத்தாலேயிறே முத்துமாலை தொடக்கமான ஆபரணாதிகள் நிறம்பெறுவது. அதுபோலேயாய்த்து இது.''—என்றருளியுள்ள ஸூக்திகளும் குறிக்கொள்ளத்தக்கன.

கம்பர் தாம் ஆழ்வார் விஷயமாகச் சடகோபரந்தாதி பாடுவதற்கு, இக்கண்ணிநுண் சிறுத்தாம்பை வழிகாட்டியாகக் கொண்டமையை அவர் தாமே வெளியிட்டுரைத்த

“ மன்றேபுகழுந் திருவழுந்தூர் வள்ளல் மாறனைமுன்
சென்றே மதுரகவிப்பெருமாள் தென் தமிழ்த்தொடையில்
ஒன்றே பதிகமுரைத் தவன்பொன்னடியுற்றானின்றான்
என்றே பதிகம்பதிகமதாக இசைத்தனனே”

என்னும் பாயிரமும் இங்கு நினைக்கத்தக்கது.

ஆழ்வார்களுடைய நிஷ்டையிற் காட்டிலும் மதுரகவிகளின் நிஷ்டை மிகச் சீரியதாகப் போற்றப்படுகின்றது. ஸ்ரீவசந பூஷணத்தில் சரம பர்வ நிஷ்டாப்ரகரணத்தில்—“உண்டபோதொரு வார்த்தையும் உண்ணாதபோதொரு வார்த்தையும் சொல்லுவார் பத்துப்பேருண்டிறே! அவர்கள் பாசுரங் கொண்டன்று இவ்வர்த்த மறுதியிடக்கடவது, அவர்களைச் சிரித்திருப்பாரொருவருண்டிறே! அவர் பாசுரங்கொண்டு இவ்வர்த்த மறுதியிடக்கடவோம்” என்றருளிச் செய்துள்ள திவ்ய ஸூக்திகளை நோக்கினால் தத்வார்த்த நிஷ்கர்ஷ விஷயத்தில் மதுரகவிகளின் ஸ்ரீஸூக்தியே சீரிய சிங்காசனத்தில் அமர்ந்திருக்க உரிமையுடையதாகு மென்று நிச்சயிக்கப்படும்.

இவர் நம்மாழ்வாருடைய அருளிச் செயல்களை ஆழ்ந்து நோக்கி பகவத் பக்தியிற் காட்டிலும் பாகவத பக்தியே மிகச் சிறந்ததென்கிற தத்துவப்பொருளை உறுதியாகக் கைக்கொண்டார். ஆழ்வார் முதற்பிரபந்தமாகிய திருவிருத்தத்தில் தமக்கு நிரூபகமாக “ திருமால் திருப்பேர் வல்லாரடிக்கண்ணிசூடிய மாறன்” என்றருளிச்செய்து, சரமப்ரபந்தமாகிய திருவாய்மொழியின் முடிவில் “ வந்தவரெதிர் கொள்ள மாமணி மண்டபத்து, அந்தமில் பேரின்பத்து அடியரோடிருந்தமை” என்று தாம் திரு நாட்டிலும் பாகவத கோஷ்டியில் அந்வயிக்கப் பெற்றதையே பேறாக அருளிச்செய்து தலைக்கட்டினார். இந்தச் சுவடறிந்த மதுரகவிகள் பாகவதநிஷ்டைக்குமேற்பட்ட புருஷார்த்தமில்லை யென்று துணிந்தார்.

ஸ்ரீராமாயண புருஷர் நால்வரில் ஒருவரான சத்ருக்நாழ்வானை இவர்க்கு ஒப்புச் சொல்வர் பெரியோர். வேதத்தின் உபப்ரும்ஹணமாக அவதரித்த ஸ்ரீ ராமாயணத்தில் ராம லக்ஷ்மண பரத சத்ருக்நர் என்கிற நால்வரும் நான்கு அர்த்தங்களை அநுஷ்டித்துக்காட்டினர். ‘பெரியோர் சொல்வதைச் சிறியோர் செய்யக் கடவர்’ என்கிற ஸாமாந்ய தரும முறையைப் பித்ருவாக்ய பரிபாலநாதி முகத்தாலே ஸ்ரீராமபிரான் அநுஷ்டித்துக் காட்டினார். ‘சேஷபூதன் சேஷி விஷயத்தில் கைங்கரியம் பண்ணி ஸ்வரூபலாபம் பெறக்கடவன்’ என்கிற

விசேஷ தருமத்தை இளையபெருமாள் அனுட்டித்தார். பரதாழ்வானும் இந்த சேஷ சேஷி
முறைமையையே பரிபாலித்தவராயினும் இவர்க்கு விசேஷமுண்டு; நிர்ப்பந்தப்படுத்தி அடிமை
செய்தார் இளையபெருமாள்; இவர் அங்ஙனன்றியே 'சேஷி உகந்த அடிமையே சேஷ
பூதனுக்கு ஆதரணீயம்' என்னுமிடத்தை அனுட்டித்துக் காட்டினர். பெருமாளைப் பிரிந்து
தரித்திருக்கமாட்டாமையாகிற தன் செல்லாமையைப் பாராது, பெருமானுடைய திருவுள்ளத்
தையே பார்த்துச் சித்திரகூடத்தி னின்றும் மகிழ்ச்சியுடனே மீண்டாரன்றே இவர். அப்
படிப்பட்ட பரதாழ்வானை யல்லது வேறொன்றுமறியாதே யிருக்கையாலே பகவச் சேஷத்வ
காஷ்டையான பாகவத சேஷத்வத்திலூன்றினர் சத்ருக்காழ்வான்.

சத்ருக்நர்க்கு வால்மீகி முனிவர் விசேஷணமிடும்போது * நித்ய சத்ருக்ந :* என்றார்.
பாஹ்ய சத்ருக்களை மாத்திரமேயன்றி ஆந்தரசத்ருக்களான இந்திரியங்களையும் வென்ற
வர் என்று அதற்குப் பொருளுரைத்த பெரியவாச்சான்பிள்ளை 'அவ்விந்த்ரிய ஜயத்தின்
எல்லை எவ்வளவென்னில்?' பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம் என்ற ராமஸௌந்தர்யத்
திலும் துவக்குண்ணு தொழிகை. அதாகிறது—"பெருமாளைப் பற்றும்போதும் தன் உகப்
பாலேயாதல் அவருடைய வைலக்ஷண்யத்தாலே யாதலன்றிக்கே தனக்கு உத்தேச்யனான
பரதாழ்வான் உகந்த விஷயமென்று பற்றுகை" என்றருளிச் செய்தார். மதுரகவிகளின்
நிஷ்டையும் இப்படிப்பட்டதே யென்பது "தேவுமற்றறியேன்" என்றதனுலும், "திரிதந்தா
கிலும்" என்னும் பாசுரத்தினுலும் அறியலாம்.

"பகவத் பக்தியிற்காட்டிலும் பாகவதபக்தி சிறந்தது" என்று சொல்லுவதன் தத்து
வம் சிறிது விவரிக்கப்படுகிறது; ஒருவன் ஒரு வஸ்துவினிடத்தில் அன்பு வைத்தால் அவ்
வன்பு அளவற்றதுமாயிருந்தால் அஃது அவ்வஸ்துவோடே நின்றுவிடாமல் அதனோடு
ஸம்பந்த ஸம்பந்தம் பெற்ற வஸ்துக்களிலும் பெருகிச் செல்லுமென்பதை அனைவரும்
தம் தம் அநுபவத்தாலறிவர். அப்படியே பாகவத பக்தியென்பது பகவத் பக்தியின் எல்லை
நிலமாகவுண்டாமது. பகவத் பக்தியின் உறைப்பையே பாகவத பக்தி வெளிப்படுத்
தும். ஸ்வாமியின் பாதுகைகளிலே நாம் ஆதரவுவைத்து அவற்றைக் கண்களி லொற்றிக்
கொள்வதும் தலைமீது அணிந்துகொள்வதும் அலம்பித் தீர்த்தம் பருகுவதும் செய்கிறோம்;
இதனுல் நமக்கு ஸ்வாமியிடத்துள்ள பக்தி அபாரமானது என்பதேயன்றோ வெளியாகின்
றது. அதுபோலவே, 'எம்பெருமானும் வேண்டா, அவன் உறையும் திருப்பதியும்வேண்டா,
ஆழ்வாரும் அவருடைய அருளிச்செயல்களுமே உத்தேச்யம்' என்று பேசினுலும் பகவத்
பக்தியின் முதிர்ச்சியே விளங்கிற்றுதும்.

# 22. எம்பெருமானர்.

* ஆழ்வார்கள் தாங்களவதரித்த நாள்களினும் வாழ்வான நாள் நமக்கு—எழ்பாரு
மூய்ய எதிராசருதித்தருளுஞ் சித்திரையில் செய்ய திருவாதிரையாம். இத்திருநன்னாளின்
சிறப்பை மணவாளமாமுனிகள் ஒரு சீரியசெய்யுளினுல் வெளியிட்டருளியுள்ளார்; அது
வருமாறு—

Released by Maaran's Dog , Toronto , Canada

"சங்கரபாக்கரயாதவ பாட்ட ப்ரபாகரர் தங்கள் மதம்
சாய்வுறவாதியர் மாய்குவரென்று சதுமறை வாழ்ந்திடுநாள்
வெங்கலி யிங்கினி வீறு நமக்கிலையென்று மிகத்தளர்நாள்
மேதினி நஞ்சுமை யாறுமெனத் துயர்விட்டு விளங்கியநாள்
மங்கையராளி பராங்குச முன்னவர் வாழ்வு முளைத்திடுநாள்
மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடுநாள்
செங்கயல் வாவிகள் சூழ்வயல் நாளுஞ் சிறந்தபெரும்பூதூர்ச்
சீமா னிளையாழ்வார் வந்தருளியநாள் திருவாதிரை நாளே" என்பதாம்.

இஃது ஆர்த்திப் பிரபந்தத்துள் முப்பத்திரண்டாவது பாசுரமாகும். எம்பெருமானார் திருவவதரிப்பதற்கு முன்னே பலபல மாயமதத்தவர்கள் இவ்வுலகில் மலிந்து வேதங்களுக்கு ஏலாத பொருள்களை ஏறிட்டுரைத்துத் தர்வார்த்தங்களுக்கு க்ஷேபத்தை விளைத்திருந்தார்கள். அதனால் வேதங்களும் 'நமது கதி இப்படியாயிற்றே!' என்று சாலவும் வருந்திக் கிடந்தன. எம்பெருமானார் திருவவதரித்தவன்றே அவற்றின் வருத்தம் தொலைந்து அவை வாழ்ச்சிபெறத் தொடங்கிவிட்டன. 

அன்றியும், இந்நிலத்தில் கலிபுருஷன் நெடுநாளாகச் செங்கோல் செலுத்திக்கொண்டு தன்னுடைய பராக்கிரமமே எங்கும் ஓங்கி வருமாறு அரசாட்சி புரிந்து வந்தான்; அன்னவனும் எம்பெருமானார் திருவவதரித்தவன்றே "கலியுங் கெடுங்கண்டு கொண்மின்" என்ற மூதுவர்மொழி பலிக்குங்காலம் வாய்த்ததுபோலுமென்று துணிந்து இனி நாம் மாள்வதன்றி வாழ்வதற்கில்லையென்று தளர்ச்சி யடையத் தொடங்கிவிட்டான்.

அன்றியும், பூமிப்பிராட்டியானவள் 'ஸர்வம் ஸஹா' என்று பெயர் பெற்றிருந்தாலும் நல்லார்கள் பலபல கோடிக்கணக்காகத் தன்மீது வாழப்பெற்றாலும் அவர்களைப் பஞ்சுச் சுருள்போல் சிறிதும் ஆயாஸமின்றித் தாங்கி நிற்பள். தீயவர் ஒருவரிருவர் இருப்பினும் இரும்பு மூட்டை தாங்குவதனால்போல் மிக மெலிந்து நிற்பள். உடையவர் திருவவதாரத்திற்கு முன்னே நல்லார்கள் மிகமெலிந்து தீயார்களே மிக மலிந்திருக்கப் பெற்றதனால் பூமிப்பிராட்டி பொறுக்கொணாச் சுமையினால் மிகவும் துயருற்றுக் கிடந்தாள்; அன்னவள் எம்பெருமானார் திருவவதரித்தவன்றே, இனி இந்நிலவுலகில் தீயார் ஒருவருமின்றிக்கே அனைவரும் நல்லாராகவே வாழ்ச்சி பெறுவர்களென்று திக்கெனத் துணிந்து இனி நமக்குப் பொறுக்க வொண்ணாத பாரம் சிறிதுமிராதென்று தேறித் துயர்விடத் தொடங்கினள்.

அன்றியும், பல ஆழ்வார்களும் ஆசாரியர்களும் ஏற்கெனவே திருவவதரித்து அருமருந்தன்ன ஸ்ரீஸூக்திகளை உதவியருளி யிருந்தாலும் அவற்றுக்கு ஸர்வதோ முகமான ப்ரசாரம் ஏற்படாமலும் அழகிய வியாக்யானங்கள் அமையாமலு மிருந்ததனால் 'நம்முடைய அரிய பெரிய காரியங்கள் உலகுக்குப் பெரிதும் பயன்பட வில்லையே!' என்று அவர்களெல்லாம் களிப்பின்றியே குன்றியிருந்தனர்; எம்பெருமானார் திருவவதரித்தவன்றே 'இனி ஸ்ரீ பாஷ்ய பகவத் விஷயாதி திவ்யக்ரந்தங்கள் ஓங்கப் பெறுமாதலால் நமக்கொரு குறையில்லை; நாம் செய்திருந்த காரியங்களெல்லாம் சதசாகமாகப் பணைக்கும்படியான

பாக்யம் வாய்க்க நற்சமயம் விளைந்திட்டது என்று துணிந்து அன்னவர்கள் அளவிலாத ஆனந்த மெய்தத் தொடங்கினர்.

அன்றியும், எம்பெருமான்தான் பரமபதத்தில் பரவாஸுதேவனாக வீற்றிருந்து ஏழுலகும் தனிக்கோல் செலுத்தி யிருக்கு மிருப்பிலும், திருப்பாற் கடலில் அடியார்களின் கூக்குரல் செவிப்படுமாறு வெள்ளை வெள்ளத்தின் மேலொரு பாம்பை மெத்தையாக விரித்து அதன் மேலே கள்ள நித்திரை கொண்டு உறங்குவான் போல் யோகு செய்திருக்குமிருப்பிலும், ஹிரண்யாக்ஷ ஹிரண்யகசிபு ராவண கம்ஸ சிசுபாலாதிகளை யெல்லாம் தொலைத்திட்டு உலகை வாழ்விக்க ராமக்ருஷ்ணாதி விபவாவதாரங்கள் செய்தவற்றிலும், கருதரியவுயிர்க்குயிராய்க் கரந்து எங்கும் பரந்துறையுமிருப்பிலும் திருப்திபெறாதே, கோயில் திருமலை பெருமாள்கோயில் திருநாராயணபுரம் முதலான திருப்பதிகளிலே பின்னானார் வணங்குஞ் சோதியாய் நித்யஸந்நிதிபண்ணியிருந்தும், அந்தத் திருப்பதிகளைத் திருத்திப் பணி கொள்வாரில்லாமையாலே அர்ச்சாவதாரமும் அப்ரயோஜநமாக ஆய்விட்டதே! என்று வருந்த வேண்டி யிருந்தது எம்பெருமானார் திருவவதரிப்பதற்கு முன்னே. இப்பெரியார் இவ்வுலகினிற் போந்த வன்றே "ஸர்வதேச தசாகாலேஷ்வ அவ்யாஹத பராக்ரமா, ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்" என்று நீடுழியூழி நாடெங்கும் போற்றும்படியாக ஸகல திவ்ய தேசங்களிலும் அற்புதமான சீர்திருத்தங்களும் கைங்கர்ய அபிவிருத்திகளும் இனி ஒழிவில்லுமென்று துணிந்து அர்ச்சாவதார எம்பெருமான்கள் குறைதீர்ந்து மகிழத் தொடங்கினர். ஆக இங்ஙனம் வேத வேதாந்தங்கள் களிப்புறவும், கலிபுருஷன் தேய்வுறவும், மண்மாது மகிழ்வுறவும், பூருவர்கள் யாவரும் பொலிவுறவும், எம்பெருமான்கள் இன்புறவும் அமைந்த நன்னாள் இத்திருவாதிரை யொன்றேயாகும்.

எம்பெருமானார் திறத்தில் வேதாந்த தேசிகனுடைய ஈடுபாட்டைப்பற்றிச் சிறிது பேசுவோம். தேசிகன் எம்பெருமானாரைத் துதித்த அமுதமொழிகள் விடுதி விடுதியாகப் பல பல இருந்தாலும் யதிராஜஸப்ததி யென்கிற ஸ்தோத்ரம் வெகு அமைதியுடன் அமைந்ததாகும். உடையவர்ஸம்பந்த முடையவர்களுக்குத் தான் நேரே எம்பெருமான்வரையில் இடையறாத தொடர்பு உண்டு என்பதைத் தெரிவித்தருள்வதற்காக * கமப்யாத்யம் குரும் வந்தே * என்று தொடங்கி, பெருமாள், பிராட்டி, ஸேனை முதலியார், நம்மாழ்வார், நாதமுனிகள், உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி, ஆளவந்தார், பெரிய நம்பி இவர்களை ஒவ்வொரு ச்லோகத்தினால் ஏத்தி யிறைஞ்சி வழியடைவில்தானே எம்பெருமானார் துதியில் இழிந்திருக்கிறார்.

அதுதன்னில் முதன்முதலாக எம்பெருமானாரை வணங்கும் ச்லோகம் "ப்ரணமாம் லக்ஷ்மணமுநி: ப்ரதிக்ருஹ்ணாது மாமகம்" என்பது. இதில் உடையவர்க்கு தேசிகன் தாம் நமஸ்காரத்தை தானங்கொடுப்பதாகக் கூறினவிது மிக்க சுவையுடைத்து. * காரேய் கருணை யிராமாநுசன் * தம்முடைய பரமௌதார்யத்தினால் நமக்குச் செய்தருளியிருக்கும் மஹோபகாரங்களுக்கு நாம் ஒரு கைம்மாறு செய்யவேண்டும்; அவர் நமக்குச் செய்தருளின தானத்திற்கு ப்ரதிதானம் நாம் செய்ய வேண்டும்; அது என்ன? நம் தலையைக்கொடுப்பதுதான்—

என்று காட்டியருளுகிறுர். இத்தால், * தலையல்லால் கைம்மாறிலாத பெரு நன்றிகளைச் செய்தருளின மஹாநுபாவர் எம்பெருமானுர் என்பது பெறுவிக்கப்பட்டது. இது வொரு சிறந்த உக்தி சமத்காரம்.

இதற்கு அடுத்த ச்லோகம் * உபவீதிந ஊர்த்வ புண்ட்ரவந்தம்...சிகயா சேகரிணம் பதிம் யதீநாம் * என்பது; முந்துற முன்னம் உடையவரை இங்ஙனே அநுபவித்துப் பேசினது பரமரஸம். புறமதங்களிலுள்ள ஸந்நியாசிகளைப் போலன்றியே எம்பெருமானு ருடைய திருமேனித் தோற்றமே நெஞ்சைக் கவர்வது என்றிடுபடுகின்றுர். யஜ்ஞோப வீதத்தையும் சிகாபந்தத்தையும் துறந்தும், கோரான புண்ட்ரமின்றியும், ஒற்றைத்தண்ட மேந்தியும் "காணிலு முருப்பொலார்" என்னும்படி யிராநின்ற யதிகளின்படி யன்றியே பரம விலக்ஷணமான திவ்யமங்கள விக்ரஹ ஸந்நிவேசங்களை யுடையவர் என்றது ,விக்கு மழகு சொலப்புகில் வாயமுதம் பரக்கும். "காஷாய சோபி கமநீய சிகாநிவேசம் தண்ட த்ரயோஜ்ஜ்வலகரம் விமலோபவீதம், உத்யத் திநேசநிப முல்லஸ தூர்த்வபுண்ட்ரம் ரூபம் தவாஸ்து யதிராஜ! த்ருசோர் மமாக்ரே." என்ற ஆழ்வானுடைய திவ்ய ஸூக்தி தேசிக னுடைய ஹ்ருதயத்திற் பதிந்திருந்து இங்ஙனே வடிவெடுத்து வெளிப்பட்ட தென்னலாம்.

அதற்குமேல்ச்லோகத்தில், இராமாநுச நூற்றந்தாதியில் "அடையார் கமலத் தலர்மகள் கேழ்வன் கையாழி யென்னும் படையோடு நாந்தகமும் படர்தண்டும், ஒண்சார்ங்க வில்லும் புடையார் புரிசங்கமு மிந்தப் பூதலங் காப்பதற்கென் றிடையே, யிராமாநுச முனியாயின விந்நிலத்தே" என்றருளிச் செய்யப்பட்டுள்ள பாசுரத்தைத் தழுவி, பஞ்சாயு தாழ்வார்களும் ஒன்று சேர்ந்து எம்பெருமானுராகத் திருவவதரித்தபடியோ! என்று பெரி யோர்கள் உல்லேகித்துக்கொண் டிருந்த விஷயத்தை யெடுத்துரைத்தருளினுர். அதற்கடுத்த ச்லோகத்தில் ராமாநுஜன் என்கிற திருநாமத்திற்கு விலக்ஷணமான வொரு விசேஷார்த் தத்தை நிர்வஹித்தருளா நின்று கொண்டு தம்முடைய பாண்டித்ய ப்ரகர்ஷம் நன்கு விளங்குமாறு ஸூக்தி விந்யாஸம் செய்தருளி யிருக்கிறுர். இது இன்சுவையே வடிவெடுத்த ச்லோகமாதலால் ரஸிகர்களின் உள்ளம் உகக்குமாறு சண்டு ஸங்க்ரஹேண விவரிக்கப் படுகிறது.

[சமிதோதய சங்கராதி கர்வ: ஸ்வபலாத் உத்த்ருத யாதவப்ரகாச:, அவரோபித வாந் ச்ருதேரபார்த்தாந் நநு ராமாவரஜஸ் ஸ ஏஷ பூய:] என்பது அந்தச்லோகம். இதில் அற்புதமான சிலேடை அமைந்திருக்கின்றது. எம்பெருமானுர்க்கு ராமாநுஜன் என்ற திரு நாமம் மாதுலரான திருமலை நம்பியால் இடப்பட்ட தென்பர் பெரியோர். அது இளைய பெருமாளுக்கு ப்ரஸித்தமாக வழங்கிவரும் திருநாமம். லக்ஷ்மணன் கைங்கர்ய ஸாம் ராஜ்யமே நிருபகமாக இருந்ததுபோலே இவரும் கோயில் திருமலை பெருமாள் கோயில் திருநாராயணபுரம் முதலான திவ்யதேசங்களில் நித்ய கைங்கர்ய துரந்தரராக எழுந்தருளி யிருக்கப்போகிறு ரென்பதை உட் கண்ணு லுணர்ந்து நம்பிகள் இவர்க்கு இந்தத் திரு நாமமிட்டருளின ரென்று ஸம்ப்ரதாய வ்ருத்தர்கள் ஸாதிப்பது. ராமாநுஜ நாம பர்யாய மாகவே லக்ஷ்மணமுநி யென்கிற திருநாமமும் வழங்கிவருகின்றது.

கண்ணபிரான் பலராமனுக்குத் தம்பியாக அவதரித்ததனால் ராமாநுஜ னென்று கண்ணனையும் சொல்வதுண்டு. "ஹே ராமாநுஜ! ஹே ஜகத்த்ரயகுரோ ஹே புண்டரீகாக்ஷ!" என்று முகுந்தமாலையிலுமுள்ளது. உடையவரை இளைய பெருமாளுடைய அபராவதாரமென்று சொல்வது போலவே கண்ணபிரானுடைய அபராவதாரமென்றும் சொல்லத் தகுதியுண்டு. கண்ணன் அஷ்டம கர்ப்பமாக அவதரித்தது போல உடையவரும் குரு பரம்பரையில் எட்டாவது ஆசார்யராக அவதரித்துள்ளார். உலகுக்கெல்லாம் மாதா பிதாக்களாகிய பெருமாளையும் பிராட்டியையும் ஸ்ரீக்ருஷ்ண மாதா பிதாக்களான வஸுதேவ தேவகிகளின் ஸ்தானத்தில் வைத்துவிட்டு, ஸேனை முதலியார் முதலாகக் கணக்கிட்டால் ஆசார்ய பரம்பரையில் எட்டாவது ஸ்தாநம் உடையவருடையதேயாம். [ஸேனை முதலியார், நம்மாழ்வார், ஸ்ரீமந்நாதமுனிகள், உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி, ஆளவந்தார், பெரிய நம்பி, எம்பெருமானார் என அடைவு காண்க.] கண்ணன் "சாது சனத்தை நலியுங்கஞ்சனைச் சாதிப்பதற்கு ஆதியஞ் சோதியுருவை அங்கு வைத்திங்குப் பிறந்த" என்றபடியே கம்ஸனை வதைப்பதற்காக அவதரித்தாப் போலே உடையவரும் "இராமானுசனித்தலத்துதித்து—இறந்தது வெங்கலி" என்று அமுதனார் அருளிச் செய்தபடியே கலிபுருஷனுடைய வதத்திற்காகவே அவதரித்தார். அந்த கம்ஸனுடைய வதமானது க்ருஷ்ணாவதாரத்திற்கு நெடுநாள் முன்னமே ஆகாசவாணியினால் உலகிற் பரவினாற்போல் உடையவரால் விளையக்கூடிய கலி புருஷவதமும் இவருடைய திருவவதாரத்திற்கு நெடுநாள் முன்னமே ஆகாசவாக்குப் போன்றதான "கலியுங்கெடுங் கண்டுகொண்மின்" என்ற நம்மாழ்வாரருளிச் செயலினால் உலகிற் பரவியது. கண்ணபிரான் கம்ஸ வதத்திற்கு அங்கமாகப் பூதநாசகடயமளார்ஜுநாதிகளான பலபல தீப்பப் பூடுகளடங்க வுழக்கினாற்போலே உடையவரும் கலிபுருஷத்வம்ஸத்திற்கு அங்கமாக "சாருவாகமத நீறு செய்து சமணச் செடிக்கனல் கொளுத்தியே சாக்கியக் கடலை வற்றுவித்து மிகு சாங்கியக் கிரி முறித்திட, மாறுசெய்திடு கணாத வாதியர்கள் வாய் தகர்த்தற மிகுத்து மேல்வந்த பாசுபதர் சிந்தியோடும் வகை வாதுசெய்த வெதிராசனார், கூறுமா குருமதத்தொடோங்கிய குமாரிலன் மதமவற்றின்மேல் கொடிய தர்க்க சரம் விட்டபின் குறுகி மாய வாதியரை வென்றிட, மீறி வாதில் வருபாற்கரன் மத விலக்கடிக் கொடியெறிந்து போய் மிக்க யாதவ மதத்தை மாய்த்த பெரு வீரர் நாளு மிக வாழியே" என்றும், "தற்கச் சமணரும் சாக்கியப் பேய்களும் தாழ் சடையோன் சொற்கற்ற சோம்பரும் சூனிய வாதரும், நான் மறையும் நிற்கக் குறும்பு செய் நீசரும் மாண்டனர் நீணிலத்தே பொற் கற்பகம் எம்மிராமாநுச முனி போந்த பின்னே" என்றும் சொல்லுகிறபடியே பலபல தீய வாதிகளை நிரஸித்தருளினார். கண்ணபிரான் யாதவ குலத்திற் பிறந்து ஆயர் குலத்தில் ஒளித்து வளர்ந்தாப் போலே உடையவரும் ஸ்ரீ வைஷ்ணவ குலத்திலே பிறந்து அத்வைதி ஸந்யாஸி கோஷ்டியிலே ஒளிந்து வளர்ந்தார். இங்ஙனே அநேக வகைகளால் கண்ணபிரானுக்கும் எம்பெருமானார்க்கும் ஒற்றுமைநயம் நிர்வஹிக்கக் கூடியதா யிருக்கின்றது.

பிரக்ருதத்தில், மேலே உதாஹரித்த *சமிதோதய* இத்யாதி ச்லோகத்தில் தேசிகன் உடையவர்க்கும் கண்ணனுக்கும் ச்லேஷ சமத்காரம் பொலிய ஒரு ஒற்றுமை நயங்கூறி

பேருகிறார். [சமிதோதய சங்கராதி கர்வ:] இது கண்ணனுக்கும் உடையவர்க்கும் பொதுவான விசேஷணம். பாணாஸுர யுத்தம் முதலான பிரகரணங்களில் "கார்த்திகையானும் கரிமுகத்தானும் கனலும் முக்கண் மூர்த்தியும் மோடியும் வெப்பும் முதுகிட்டு" என்கிறபடியே சங்கரனாகிய சிவபிரான் முதலான தெய்வங்களின் செருக்கை யடக்கியவன் கண்ணபிரான். உடையவரோ வென்னில், சங்கராசாரியர் முதலான புறமதத்தவர்களின் துர்வாதச் செருக்கை யடக்கினவர்.

[ஸ்வபலாத் உத்த்ருதயாதவப்ரகாச:] "கோபாலோ யாதவம் வம்சம் மக்நமப்யுத் தரிஷ்யதி" என்கிறபடியே யயாதி சாபத்தாலே மங்கிக்கிடந்த யாதவர்களின் பிரகாசத்தைத் தனது வலிமையினால் விளைவித்தவன் கண்ணபிரான். உடையவரோ வென்னில்; முதலில் தமக்கு உபாத்யாயராயிருந்த யாதவப் பிரகாசரையும் தமக்கு அடிமைப்படுத்திக்கொண்டு அவரை வாழ்வித் தருளினவர்.

[அபார்த்தாந் ச்ருதே: அவரோபிதவாந்] இதில் முதற்பதம் 'அ—பார்த்தாந்' என்றும், 'அப—அர்த்தாந்' என்றும் பிரியும். ச்ருதி யென்று வேதத்திற்கும் பெயர், கீர்த்திக்கும் பெயர். பார்த்தன் என்று அர்ஜுநனைச்சொல்லி அர்ஜுந விரோதிகளான துர்யோதநாதிகளை அபார்த்தர்களென்கிறது. அவர்களைக் கண்ணபிரான் [ச்ருதே: அவரோபிதவாந்] கீர்த்தியிலிருந்து கீழே யிறக்கிவிட்டான். பாண்டவ பக்ஷபாதியாயிருந்து அவர்களைத் தொலைத்தானென்றபடி. எம்பெருமானாரோ வென்னில், [ச்ருதே: அபார்த்தாந் அவரோபிதவாந்] இதர மதஸ்தர்கள் வேதங்களுக்குச் செய்த அபார்த்தங்களை நிரஸித்து ருஜுவான அர்த்தங்களை ஸ்தாபித்தருளினா ரென்றபடி. ஆக இப்படிகளாலே கண்ணபிரானுடைய காரியங்களும் எம்பெருமானாருடைய காரியங்களும் ஒற்றுமைகொண்டிருக்கையாலே, பலராமாநுஜனான அந்தக் கண்ணபிரானே மீண்டும் ஸ்ரீராமாநுஜராக திருவவதாரம் செய்தருளினான் என்னலாம் என்று ச்லேஷமர்யாதையிலே பரமரஸமாகப் பேசி யநுபவித்தார். இனி, அபார்த்தங்களை நிரஸித்து ருஜுவான அர்த்தங்களை ஸ்தாபித்தமை விவரிக்கப்படுகிறது.

### எம்பெருமானார் தர்சனம்.

நம்முடைய ஸம்ப்ரதாயமானது எம்பெருமானார் தர்சனமென்றும் ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்த மென்றும் வழங்கப்பட்டு வருகின்றது. 'ஸ்ரீராமாநுஜரால் புதிதாக ஏற்படுத்தப்பட்ட மதம்' என்று இதைக்கொண்டு சிலர் சொல்லுவர்கள். உண்மையில் அங்ஙனமன்று; ஸ்ரீபாஷ்யம் முதலிய க்ரந்தங்களை இயற்றி ஸ்ரீராமாநுஜரால் பரிபாலனம் செய்யப்பட்ட ஸித்தாந்தம் என்பதே இங்கு விவக்ஷிதம். இவ்வர்த்தத்தை மணவாளமாமுனிகள் உபதேசரத்தினமாலையில்

"எம்பெருமானார் தரிசனமென்றே யிதற்கு, நம்பெருமாள் பேரிட்டு நாட்டிவைத்தார்—அம்புவியோர்
இந்தத் தரிசனத்தை யெம்பெருமானார் வளர்த்த, அந்தச் செயலறிகைக் கா."

என்ற பாசுரத்தினால் வெளியிட்டருளினர். 'ஸ்ரீராமாநுஜமதம் நவீநம்' என்கிறவாதம் தேசிகனுடைய காலத்திலேயே தோன்றியதாகத் தெரிகின்றது. யதிராஜஸப்ததியில் "யதிக்ஷ்மாப்ருத்த்ருஷ்டம் மதமிஹ நவீநம் ததபி கிம்?" என்கிறச்லோகத்தில் அந்த வாதத்தை அநுவ

த்து, பூர்வார்த்தத்தால் அதை அங்கீகரித்து ஸமாதானமும், உத்தரார்த்தத்தால் வஸ்துஸ்திதி ஸமாதானமும் அருளிச் செய்யப்பட்டிருக்கிறது.

காளிதாஸர் "**புராணமித்யேவ ந ஸாது ஸர்வம் ந சாபி காவ்யம் நவமித்யவத்யம், ஸந்த: பரீக்ஷ்யாந்யதரத் பஜந்தே மூட: பரப்ரத்யயநேயபுத்தி:**" என்று தமது நாடகமொன்றில் கூறியுள்ளார். ப்ராசீனமென்பது பற்றியே ஒன்றுக்கு ஏற்றமும் நவீனமென்பது பற்றியே ஒன்றுக்குத் தாழ்வும் சொல்லப்போகாது; குணபுஷ்கலமாக இராவிடில் ப்ராசீநமாயிருந்தாலும் ஹேயமாகும்; குணபுஷ்கலமாகவுள்ளதாகில் நவீநமாயினும் உபாதேயமேயாகும். ஆகவே, குணமுடைமை பரிக்ராஹ்யத்வத்திற்கு ஹேதுவாகவும், குணமின்மை பரித்யாஜ்யத்வத்திற்கு ஹேதுவாகவும் தோன்றுமேயல்லது, ப்ராசீநத்வ நவீநத்வங்களைக்கொண்டு பரிக்ராஹ்யத்வ பரித்யாஜ்யத்வங்களை வ்யவஸ்தை பண்ணுவது புத்திமான்களின் பணியன்று என்பது மேற்குறித்த காளிதாஸச்லோகத்தின் தாத்பர்யம். இந்த ரீதியைத் திருவுள்ளம் பற்றியே ஸ்வாமி தேசிகன் மூன்றாற ஒரு ஸமாதானமருளிச் செய்தார்.

மீமாம்ஸாபாதுகையிலும் "**கிஞ்சித் கேநாபி த்ருஷ்டம்**" என்கிற எட்டாவது ச்லோகத்தில் "**ப்ரத்யேதவ்யம் ததர்த்யம் படுதரமதிபி: ப்ராக்தநம் நூதநம் வா**" என்ற நான்காவது பாதத்தினுல் இந்தத் திருவுள்ளத்தைக் காட்டியருளினர்.

யாதவாப்யுதய மஹாகாவ்யத்திலும் "**ததாத்வே நூதநம் ஸர்வம் ஆயத்யாஞ்ச புராதநம், ந தோஷாயைததுபயம் ந குணுய ச கல்பதே**" என்றச்லோகத்தினுல் இத்திருவுள்ளமே பொலியும். இது ஸாமாந்ய ந்யாயசிக்ஷணமாதலால் இந்த ந்யாயத்தைத்தழுவி ஸ்ரீராமாநுஜமதம் நவீனமாகத்தான் இருக்கட்டுமே, இருந்தாலென்ன?' என்று அப்யுபகம்யவாத ப்ரணாளியிலே அருளிச்செய்து, உடனே "**நிசாம்யந்தாம் யத்வா நிஜமதிதிரஸ்கார விகமாத் கிராதங்கா: டங்கத்ரமிட குஹதேவப்ரப்ருதய:**" [யதிராஜஸப்ததி-57.] என்று வஸ்துஸ்திதி ஸமாதானத்தையும் அருளிச்செய்தார். இந்த ஸ்ரீராமாநுஜமதத்தை ப்ரவர்த்தநம் செய்தவர்கள் ஸ்ரீராமாநுஜப்ரவர்த்தகர்களிற் காட்டிலும் மிக முற்பட்டவர்கள் என்று இதனுல் காட்டப்பட்டது. [illegible] ரஹஸ்யத்ரயஸாரத்திலும்—

"ஸர்வலோகஹிதமான அத்யாத்மசாஸ்த்ர ஸம்ப்ரதாயத்திற்கு ப்ரதமப்ரவர்த்தகன் ஸர்வேச்வரன்: மற்றுள்ளாரெல்லாரும் அவன்றன்னருளாலே யாதல் சேதநாந்தரமுகத்தாலேயாதல் மயர்வற மதிநலமருளப் பெற்று ப்ரவர்த்திப்பிக்கிறவர்கள். இந்த யுகாரம்பத்திலே ப்ரஹ்மநந்த்யாதிகளுக்குப் பின்பு நம்மாழ்வார் ப்ரவர்த்தகரானுர்"

என்று ஸ்வாமி அருளிச் செய்தவை இங்கு ஸ்மரிக்கத்தக்கன. எம்பெருமானுர் தாமும் ஸ்ரீபாஷ்யத்தின் உபக்ரமத்திலே, * **பகவத்போதாயநக்ருதாம் விஸ்தீர்ணும் இத்யாதி**—

[போதாயநமஹர்ஷியினுல் செய்யப்பட்ட விரிவான ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திக்ரந்தத்தைப் பூருவர்கள் சுருக்கியருளினர்கள், அவர்களது கொள்கையைப் பின்பற்றி ப்ரஹ்மஸூத்ர வ்யாக்யானம் செய்யப்புகுவோம்] என்று ஸ்பஷ்டமாக அருளிச் செய்திருக்கையாலும் இது அநாதிமதமேயன்றி நவீநமதமன்று என்பது தெற்றென விளங்கும்.

ஸ்ரீராமாநுஜபாஷ்யத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த மேற்றிசையாரும் ஸ்ரீராமாநுஜருடைய கொள்கையே மிகவும் ஏற்புடையது என்பதை நிரூபித்துள்ளாரென்று கேள்

தித்து, பூர்வார்த்தத்தால் அதை அங்கீகரித்து ஸமாதானமும், உத்தரார்த்தத்தால் வஸ்துஸ்திதி ஸமாதானமும் அருளிச் செய்யப்பட்டிருக்கிறது.

காளிதாஸர் "புராணமித்யேவ ந ஸாது ஸர்வம் ந சாபி காவ்யம் நவமித்யவத்யம், ஸந்த: பரீக்ஷ்யாந்யதரத் பஜந்தே மூட: பரப்ரத்யயநேயபுத்தி:" என்று தமது நாடகமொன்றில் கூறியுள்ளார். ப்ராசீனமென்பது பற்றியே ஒன்றுக்கு ஏற்றமும் நவீனமென்பது பற்றியே ஒன்றுக்குத் தாழ்வும் சொல்லப்போகாது; குணபுஷ்கலமாக இராவிடில் ப்ராசீநமாயிருந்தாலும் ஹேயமாகும்; குணபுஷ்கலமாகவுள்ளதாகில் நவீநமாயினும் உபாதேயமேயாகும். ஆகவே, குணமுடைமை பரிக்ராஹ்யத்வத்திற்கு ஹேதுவாகவும், குணமின்மை பரித்யாஜ்யத்வத்திற்கு ஹேதுவாகவும் தோன்றுமேயல்லது, ப்ராசீநத்வ நவீநத்வங்களைக்கொண்டு பரிக்ராஹ்யத்வ பரித்யாஜ்யத்வங்களை வ்யவஸ்தை பண்ணுவது புத்திமான்களின் பணியன்று என்பது மேற்குறித்த காளிதாஸச்லோகத்தின் தாத்பரியம். இந்த ரீதியைத் திருவுள்ளம் பற்றியே ஸ்வாமி தேசிகன் மூன்று ஒரு ஸமாதானமருளிச் செய்தார்.

ஸ்ரீமாம்ஸாபாதுகையிலும் "கிஞ்சித் கேநாபி த்ருஷ்டம்" என்கிற எட்டாவது ச்லோகத்தில் "ப்ரத்யேதவ்யம் ததர்த்த்யம் படுதரமதிபி: ப்ராக்தநம் நூதநம் வா" என்ற நான்காவது பாதத்தினால் இந்தத் திருவுள்ளத்தைக் காட்டியருளினர்.

யாதவாப்யுதய மஹாகாவ்யத்திலும் "ததாத்வே நூதநம் ஸர்வம்ஆயத்யாஞ்ச புராதநம், ந தோஷாயைததுபயம் ந குணாய ச கல்பதே" என்றச்லோகத்தினால் இத்திருவுள்ளமே பொலியும். இது ஸாமாந்ய ந்யாயசிக்ஷணமாதலால் இந்த ந்யாயத்தைத்தழுவி ஸ்ரீராமாநுஜமதம் நவீனமாகத்தான் இருக்கட்டுமே, இருந்தாலென்ன?' என்று அப்யுபகம்யவாத ப்ரணாளியிலே அருளிச்செய்து, உடனே "நிசாம்யந்தாம் யத்வா நிஜமதிதிரஸ்கார விகமாத் நிராதங்கா: டங்கத்ரமிட குஹதேவப்ரப்ருதய:" [யதிராஜஸப்ததி-57.] என்று வஸ்துஸ்திதி ஸமாதானத்தையும் அருளிச்செய்தார். இந்த ஸ்ரீராமாநுஜமதத்தை ப்ரவர்த்தநம் செய்தவர்கள் இதாமதப்ரவர்த்தகர்களிற் காட்டிலும் மிக முற்பட்டவர்கள் என்று இதனால் காட்டப்பட்டது. ஸம்ப்ரதாய பரிசுத்தி என்கிற ரஹஸ்யத்தின் உபக்ரமத்திலும்—

"ஸர்வலோகஹிதமான அத்யாத்மசாஸ்த்ர ஸம்ப்ரதாயத்திற்கு ப்ரதமப்ரவர்த்தகன் ஸர்வேச்வரன்; மற்றுள்ளாரெல்லாரும் அவன்தன்னாலே யாதல் சேதநாந்தரமுகத்தாலேயாதல் மயர்வற மதிநலமருளப் பெற்று ப்ரவர்த்திப்பிக்கிறவர்கள். இந்த யுகாரம்பத்திலே ப்ரஹ்மநந்த்யாதிகளுக்குப் பின்பு நம்மாழ்வார் ப்ரவர்த்தகரானார்"

என்று ஸ்வாமி அருளிச் செய்தவை இங்கு ஸ்மரிக்கத்தக்கன. எம்பெருமானார் தாமும் ஸ்ரீபாஷ்யத்தின் உபக்ரமத்திலே, * பகவத்போதாயநக்ருதாம் விஸ்தீர்ணாம் இத்யாதி =

[போதாயநமஹர்ஷியினால் செய்யப்பட்ட விரிவான ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திக்ரந்தத்தைப் பூருவர்கள் சுருக்கியருளினார்கள், அவர்களது கொள்கையைப் பின்பற்றி ப்ரஹ்மஸூத்ர வியாக்கியானம் செய்யப்புகுவோம்] என்று ஸ்பஷ்டமாக அருளிச் செய்திருக்கையாலும் இது அநாதிமதமேயன்றி நவீநமதமன்று என்பது தெற்றென விளங்கும்.

ஸ்ரீராமாநுஜபாஷ்யத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த மேற்றிசையாரும் ஸ்ரீராமாநுஜருடைய கொள்கையே மிகவும் ஏற்புடையது என்பதை நிரூபித்துள்ளாரென்று கேள்

விப்படுகிறோம். அத்வைதம் த்வைதம் என்கிற மற்ற இரண்டு தரிசனங்களிற் காட்டிலும் நமது விசிஷ்டாத்வைததர்சனத்தின் வைலக்ஷண்யத்தை அறிந்து கொண்டால் இதுவே புராதனமாக இருக்கக்கூடியதென்றும் இதுவே உலக அநுபவத்திற்கு இணங்கியதென்றும் யாவருமிசையத்தக்கதாகும்.

உபநிஷத்துக்களில் சிலவாக்கியங்கள்—ஒரு தத்துவமே உள்ளதாகவும் பல தத்துவங்கள் கிடையாதென்பதாகவும் பேசுகின்றன. *நேஹ நாநாஸ்தி கிஞ்சந * என்றிது முதலான வாக்கியங்களினால் பலதத்துவங்கள் கிடையாதென்பது ஸ்பஷ்டமாகச் சொல்லப்படுகிறது. *ஏகமேவ அத்விதீயம்* *ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம * ஐததாத்ம்யமிதம் ஸர்வம்* என்றிவைமுதலான வாக்கியங்களினால் ஒரேதத்துவமுள்ளதாகக் காட்டப்படுகிறது.

இப்படிப்பட்ட வாக்கியங்களுள்ள உபநிஷத்துக்களிலேயே பலதத்துவங்களுண்டென்பதைக் காட்டுகின்ற வாக்கியங்களும் ஓதப்பட்டிருக்கின்றன. *க்ஷரம் ப்ரதாநம் அம்ருதாக்ஷரம் ஹர: * த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா * என்றிவை முதலான வாக்கியங்களால்—சித்து அசித்து ஈச்வரன் என்கிற மூன்று தத்துவங்கள் தனித்தனியே உள்ளனவாக ஸ்பஷ்டமாய்த் தெரிவிக்கப்படுகிறது.

இவை ஒன்றோடொன்று முரண்படுகிற வார்த்தைகளாக இருக்கின்றன. ஒன்றுதான் தத்துவம் என்று சொல்லிவிட்டால் பல தத்துவங்களுள்ளனவாகச் சொல்வது கூடாது. பல தத்துவங்களுண்டென்றால் ஒன்றே தத்துவமென்பது பொருந்தாது. யதார்த்தவாதிகளான உபநிஷத்துக்கள் அஸங்கதமாகச் சொல்லமாட்டாதவைகையால் இவற்றை முரண்பாடு சிறிதுமின்றியே ஸங்கதமாகப் பொருந்தவிடுகிற வழி என்ன? என்பது ஆராயப்பட வேண்டும். ஒரு தத்துவமே உள்ளதென்று ஓதுகின்ற உபநிஷத்வாக்யங்கள் அத்வைதச்ருதி (அல்லது) அபேதச்ருதி என்று வழங்கப்படும். பல தத்துவங்களுண்டென்று ஓதுகின்ற உபநிஷத்வாக்யங்கள் த்வைதச்ருதி (அல்லது) பேதச்ருதி என்று வழங்கப்படும்.

ஸ்ரீசங்கராசார்யஸ்வாமிகள் மேற்குறித்த அத்வைதச்ருதிகளை முக்கியமாகக்கொண்டு ஒன்றேதான் தத்துவமென்று நிர்வஹித்தார்கள். த்வைதச்ருதிகளான பேதச்ருதிகளை ஔபசாரிகமாக நிர்வஹிக்கலாமென்றும் கருதினார்கள். சேதனப்பொருள்களும் அசேதனப்பொருள்களும் உள்ளனவாகத் தோற்றுவது மாயையின் தோற்றமேயாதலால் அப்படிப்பட்ட தோற்றத்தை நோக்காகக்கொண்டு பேதச்ருதிகளை நிர்வஹித்துவிடலாமென்பது இவர்களின் கருத்து. ஆகவே, த்வைதச்ருதிகளைத் தள்ளி அத்வைதச்ருதிகளையே முக்கியமாகக் கொண்டபடியால் இவர்கள் அத்வைதிகள் என்று வழங்கப்படுகிறார்கள்.

ஸ்ரீமத் ஆநந்ததீர்த்தஸ்வாமிகள் த்வைதச்ருதிகளான பேதச்ருதிகளை முக்கியமாகக் கொண்டு அத்வைதச்ருதிகளை ஔபசாரிகமாக நிர்வஹிக்கலாமென்று கருதுகின்றார்களாதலால் அவர்கள் [மத்வாசார்யஸம்ப்ரதாயஸ்தர்கள்] த்வைதிகள் என்று வழங்கப்படுகின்றார்கள்.

ஆக மேற்கூறிய இரண்டு ஸம்ப்ரதாயங்களிலும் ஒருவகையான ச்ருதிவாக்யங்கள் ஒதுக்கப்பட்டு ஒருவகையான ச்ருதிவாக்யங்களே முக்கியமாகக் கொள்ளப்படுகின்றன

விப்படுகிறோம். அத்வைதம் த்வைதம் என்கிற மற்ற இரண்டு தரிசனங்களிற் காட்டிலும் நமது விசிஷ்டாத்வைததர்சனத்தின் வைலக்ஷண்யத்தை அறிந்து கொண்டால் இதுவே புராதனமாக இருக்கக்கூடியதென்றும் இதுவே உலக அநுபவத்திற்கு இணங்கியதென்றும் யாவருமிசையத்தக்கதாகும்.

உபநிஷத்துக்களில் சிலவாக்கியங்கள்—ஒரு தத்துவமே உள்ளதாகவும் பல தத்துவங்கள் கிடையாதென்பதாகவும் பேசுகின்றன. *நேஹ நாநாஸ்தி கிஞ்சந * என்றிது முதலான வாக்கியங்களினால் பலதத்துவங்கள் கிடையாதென்பது ஸ்பஷ்டமாகச் சொல்லப்படுகிறது. *ஏகமேவ அத்விதீயம்* *ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம * ஐததாத்ம்யமிதம் ஸர்வம்* என்றிவைமுதலான வாக்கியங்களினால் ஒரேதத்துவமுள்ளதாகக் காட்டப்படுகிறது.

இப்படிப்பட்ட வாக்கியங்களுள்ள உபநிஷத்துக்களிலேயே பலதத்துவங்களுண்டென்பதைக் காட்டுகின்ற வாக்கியங்களும் ஓதப்பட்டிருக்கின்றன. *க்ஷரம் ப்ரதாநம் அம்ருதாக்ஷரம் ஹர : * த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா * என்றிவை முதலான வாக்கியங்களால்—சித்து அசித்து ஈச்வரன் என்கிற மூன்று தத்துவங்கள் தனித்தனியே உள்ளனவாக ஸ்பஷ்டமாய்த் தெரிவிக்கப்படுகிறது.

இவை ஒன்றோடொன்று முரண்படுகிற வார்த்தைகளாக இருக்கின்றன. ஒன்றுதான் தத்துவம் என்று சொல்லிவிட்டால் பல தத்துவங்களுள்ளனவாகச் சொல்வது கூடாது. பல தத்துவங்களுண்டென்றால் ஒன்றே தத்துவமென்பது பொருந்தாது. யதார்த்தவாதிகளான உபநிஷத்துக்கள் அஸங்கதமாகச் சொல்லமாட்டாதாகையால் இவற்றை முரண்பாடு சிறிதுமின்றியே ஸங்கதமாகப் பொருந்தவிடுகிற வழி என்ன? என்பது ஆராயப்படவேண்டும். ஒரு தத்துவமே உள்ளதென்று ஓதுகின்ற உபநிஷத்வாக்யங்கள் அத்வைதச்ருதி (அல்லது) அபேதச்ருதி என்று வழங்கப்படும். பல தத்துவங்களுண்டென்று ஓதுகின்ற உபநிஷத்வாக்யங்கள் த்வைதச்ருதி (அல்லது) பேதச்ருதி என்று வழங்கப்படும்.

ஸ்ரீசங்கராசார்யஸ்வாமிகள் மேற்குறித்த அத்வைதச்ருதிகளை முக்கியமாகக்கொண்டு ஒன்றேதான் தத்துவமென்று நிர்வஹித்தார்கள். த்வைதச்ருதிகளான பேதச்ருதிகளை ஔபசாரிகமாக நிர்வஹிக்கலாமென்றும் கருதினார்கள். சேதனப்பொருள்களும் அசேதனப்பொருள்களும் உள்ளனவாகத் தோற்றுவது மாயையின் தோற்றமேயாதலால் அப்படிப்பட்ட தோற்றத்தை நோக்காகக்கொண்டு பேதச்ருதிகளை நிர்வஹித்துவிடலாமென்பது இவர்களின் கருத்து. ஆகவே, த்வைதச்ருதிகளைத் தள்ளி அத்வைதச்ருதிகளையே முக்கியமாகக் கொண்டபடியால் இவர்கள் அத்வைதிகள் என்று வழங்கப்படுகிறார்கள்.

ஸ்ரீமத் ஆநந்ததீர்த்தஸ்வாமிகள் த்வைதச்ருதிகளான பேதச்ருதிகளை முக்கியமாகக் கொண்டு அத்வைதச்ருதிகளை ஔபசாரிகமாக நிர்வஹிக்கலாமென்று கருதுகின்றார்களாதலால் அவர்கள் [மத்வாசார்யஸம்ப்ரதாயஸ்தர்கள்] த்வைதிகள் என்று வழங்கப்படுகின்றார்கள்.

ஆக மேற்கூறிய இரண்டு ஸம்ப்ரதாயங்களிலும் ஒருவகையான ச்ருதிவாக்யங்கள் ஒதுக்கப்பட்டு ஒருவகையான ச்ருதிவாக்யங்களே முக்கியமாகக் கொள்ளப்படுகின்றன

என்பது தேறுகின்றது. சித்து அசித்து ஈச்வரன் என மூன்று தத்துவங்கள் ஸத்யமாகவுள்ளன என்கிற அர்த்தம் ஸ்ரீசங்கராசார்யஸ்வாமிகளுக்கும் அவர்களைச் சார்ந்தவர்கட்கும் உடன்பாடன்று. ஓரே தத்துவம் என்கிற அர்த்தம் ஸ்ரீமத்வாசார்யஸ்வாமிகளுக்கும் அவர்களைச் சார்ந்தவர்கட்கும் உடன்பாடன்று.

உபநிஷத் வாக்யங்களெல்லாவற்றையுமே ஸமரஸப்படுத்தி ஒன்றையும் ஒதுக்காமல் மிகவும் பொருத்தமாக நிர்வஹித்தருளினர் ஸ்ரீவைஷ்ணவாசார்யர்கள். எங்ஙனே யெனில்; உலகத்தில் ஒருவஸ்துவைப் பலவென்றும் ஒன்றேயென்றும் சொல்லுவதற்குப் பொருத்தமுண்டு. உதாஹரணமாக ஒரு கடியாரத்தை எடுத்துக்கொள்வோம்; அஃது ஒன்றா? பலவா? என்று கேட்டால் ஒன்று என்றே சொல்வோம். ஆனால் அதை நாம் ஊன்றிப்பார்க்குங்கால் அதில் பலபல வஸ்துக்கள் அவயவங்களாகச் சேர்ந்திருப்பது புலப்படாமற் போகாது. பல அவயவங்களோடு கூடிய அவயவியான வஸ்து ஒன்றே என்று ஏற்படுமே யல்லது வேறுவிதமாக ஏற்படாது. இங்ஙனமே பல பலவஸ்துக்களையும் நாம் உதாஹரணமாகக் கொண்டு பார்க்கலாம். படுக்கை, தலையணை, வண்டி, வீடு முதலான ஒவ்வொரு வஸ்துவும் ஒருவிதத்தில் ஓரேவஸ்துவாகவும் மற்றொருவிதத்தில் பல வஸ்துக்களாகவும் கொள்ளப்படுவது அநுபவஸித்தம்.

நம்மையே எடுத்துக்கொள்வோம்; ராமாநுஜன் என்பவன் ஒருவன் என்று சொல்லுகிறோம். பல உறுப்புகளோடு கூடின ஆத்மாவாகிய அந்த வ்யக்தி ஒருவன் என்றதாகுமேயன்றி, அவனிடத்தில் பல வஸ்துக்கள் இல்லை யென்றதாக ஸித்திக்க மாட்டாதன்றோ? ராமாநுஜன் சிவப்பாயிருக்கிறானென்று சொல்லும்போது அவனுடைய தேஹம் அர்த்தமாகிறது. ராமாநுஜன் மேதாவி என்று சொல்லும்போது ஆத்மா அர்த்தமாகிறது. ஏன்? சிவப்புநிறம் தேஹத்திற்கு ஏற்குமேயல்லது ஆத்மாவுக்கு ஏலாது. மேதாவித்வம் ஆத்மாவுக்கு ஏற்குமேயல்லது தேஹத்திற்கு ஏலாது. ஆகவே ஓரே பதம் சில ஸமயங்களில் ஆத்மாவைக் குறிப்பதாயும் சிலஸமயங்களில் உடம்பைக்குறிப்பதாயும் தேறுகின்றதென்பது மறைக்கமுடியாது.



இனி, முதற்காட்டிய பேதச்ருதிகளையும் அபேதச்ருதிகளையும் எடுத்துக்கொள்வோம். சித்து அசித்து ஈச்வரன் என மூன்று தத்துவங்களுள்ளனவாகச் சொல்லுகிற வாக்கியங்கள் வாஸ்தவமாக அப்படிப்பட்ட மூன்று பொருள்கள் இருப்பதைச் சொல்லுகின்றனவாதலால் பொருந்தும். ஒன்றே என்று சொல்லுகிற வாக்கியங்கள் சேதநாசேதநப் பொருள்களைச் சரீரமாகக் கொண்ட பரம்பொருள் ஒன்றே என்கிற உண்மையைக் காட்டுகின்றனவாதலால் இவையும் பொருந்தும். இப்படி ஸமந்வயப்படுத்திக் காட்டுவதே நம் ஸித்தாந்தத்தின் முழுமுதற்கொள்கை. இதை நம்மாழ்வார் திருவாய்மொழியில் முதற்பதிகத்தில் "உடன்மிசை உயிரென" என்ற அருமருந்தன்ன ஸ்ரீஸூக்தியினால் காட்டியருளினர். அதை நிதியாகக் கொண்டே ஆளவந்தார் எம்பெருமானார் முதலிய ஆசார்ய சிகாமணிகள் உபபாதநம் செய்தருளினார்கள்.

என்பது தேறுகின்றது. சித்து அசித்து ஈச்வரன் என மூன்று தத்துவங்கள் ஸத்யமாக வுள்ளன என்கிற அர்த்தம் ஸ்ரீசங்கராசார்யஸ்வாமிகளுக்கும் அவர்களைச் சார்ந்தவர்கட்கும் உடன்பாடன்று. ஒரே தத்துவம் என்கிற அர்த்தம் ஸ்ரீமத்வாசார்யஸ்வாமிகளுக்கும் அவர்களைச் சார்ந்தவர்கட்கும் உடன்பாடன்று.

உபநிஷத் வாக்கியங்க ளெல்லாவற்றையுமே ஸமரஸப்படுத்தி ஒன்றையும் ஒதுக்காமல் மிகவும் பொருத்தமாகவே நிர்வஹித்தருளினர் ஸ்ரீவைஷ்ணவாசார்யர்கள். எங்ஙனே யென்னில்; உலகத்தில் ஒருவஸ்துவைப் பலவென்றும் ஒன்றேயென்றும் சொல்லுவதற்குப் பொருத்தமுண்டு. உதாஹரணமாக ஒரு கடியாரத்தை எடுத்துக்கொள்வோம்; அஃது ஒன்றா? பலவா? என்று கேட்டால் ஒன்று என்றே சொல்வோம். ஆனால் அதை நாம் ஊன்றிப்பார்க்குங்கால் அதில் பலபல வஸ்துக்கள் அவயவங்களாகச் சேர்ந்திருப்பது புலப்படாமற் போகாது. பல அவயவங்களோடு கூடிய அவயவியான வஸ்து ஒன்றே என்று ஏற்படுமே யல்லது வேறுவிதமாக ஏற்படாது. இங்ஙனமே பல பலவஸ்துக்களையும் நாம் உதாஹரணமாகக் கொண்டு பார்க்கலாம். படுக்கை, தலையணை, வண்டி, வீடு முதலான ஒவ்வொரு வஸ்துவும் ஒருவிதத்தில் ஒரேவஸ்துவாகவும் மற்றொருவிதத்தில் பல வஸ்துக்களாகவும் கொள்ளப்படுவது அநுபவஸித்தம்.

நம்மையே எடுத்துக்கொள்வோம்; ராமாநுஜன் என்பவன் ஒருவன் என்று சொல்லுகிறோம். பல உறுப்புகளோடு கூடின ஆத்மாவாகிய அந்த வ்யக்தி ஒருவன் என்றதாகுமேயன்றி, அவனிடத்தில் பல வஸ்துக்கள் இல்லை யென்றதாக விவக்ஷிக்க மாட்டாதன்றோ? ராமாநுஜன் சிவப்பாயிருக்கிறானென்று சொல்லும்போது அவனுடைய தேஹம் அர்த்தமாகிறது. ராமாநுஜன் மேதாவி என்று சொல்லும்போது ஆத்மா அர்த்தமாகிறது. ஏன்? சிவப்புநிறம் தேஹத்திற்கு ஏற்குமேயல்லது ஆத்மாவுக்கு ஏலாது. மேதாவித்வம் ஆத்மாவுக்கு ஏற்குமேயல்லது தேஹத்திற்கு ஏலாது. ஆகவே ஒரே பதம் சில ஸமயங்களில் ஆத்மாவைக் குறிப்பதாயும் சிலஸமயங்களில் உறுப்பைக்குறிப்பதாயும் தேறுகின்றதென்பது மறைக்கமுடியாது.

இனி, முதற்காட்டிய பேதச்ருதிகளையும் அபேதச்ருதிகளையும் எடுத்துக்கொள்வோம். சித்து அசித்து ஈச்வரன் என மூன்று தத்துவங்களுள்ளனவாகச் சொல்லுகிற வாக்கியங்கள் வாஸ்தவமாக அப்படிப்பட்ட மூன்று பொருள்கள் இருப்பதைச் சொல்லுகின்றன வாதலால் பொருந்தும். ஒன்றே என்று சொல்லுகிற வாக்கியங்கள் சேதநாசேதனப் பொருள்களைச் சரீரமாகக் கொண்ட பரம்பொருள் ஒன்றே என்கிற உண்மையைக் காட்டுகின்றன வாதலால் இவையும் பொருந்தும். இப்படி ஸமந்வயப்படுத்திக் காட்டுவதே நம் ஸித்தாந்தத்தின் முழுமுதற்கொள்கை. இதை நம்மாழ்வார் திருவாய்மொழியில் முதற்பதிகத்தில் "உடன்மிசை உயிரென" என்ற அருமருந்தன்ன ஸ்ரீஸூக்தியினால் காட்டியருளினார். அதை நிதியாகக் கொண்டே ஆளவந்தார் எம்பெருமானார் முதலிய ஆசார்ய சிகாமணிகள் உபபாதநம் செய்தருளினார்கள்.

## எம்பெருமானாரும் கீதாபாஷ்யமும்.

ஸ்வாமியருளிச்செய்த கீதாபாஷ்யம் ஸ்ரீபாஷ்யம் முதலான திவ்யக்ரந்தங்களில் ஆங்காங்கு அருளிச்செய்யப்பட்டுள்ள அர்த்த விசேஷங்களெல்லாம் பெரும்பாலும் ஆழ்வார்களின் திவ்யஸூக்திகளைப் பின்பற்றியே யுள்ளன வென்பது உட்புகுந்து அறியத்தக்க விஷயம். "பாஷ்யகாரர் இது கொண்டு ஸூத்ரவாக்யங்களோருங்கவிடுவர்" என்று ஆசார்யஹ்ருதயத்திலும் அருளிச் செய்யப்பட்டுள்ளது. அதை இங்குச் சிறிது விசதீகரிக்க விரும்புகிறேன். முதலில் கீதாபாஷ்யத்தை யெடுத்துக்கொள்ளுகிறேன்; கீதையில் (7—16) * சதுர்விதா பஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோர்ஜுந, ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப * என்கிற ச்லோகம் ப்ரஸித்தமானது. இதற்குச் சங்கராசார்யர் தமது பாஷ்யத்தில் அர்த்தம் செய்திருப்பது எங்ஙனேயென்னில்; திருடர்களாலும் புலி முதலிய துஷ்ட ஜந்துக்களாலும் பிணிகளாலும் ஆர்த்தியையடைந்தவன் ஆர்த்தன்; பகவானுடைய தத்துவத்தை உணரவிரும்பினவன் ஜிஜ்ஞாஸு; செல்வம் பெற விரும்புமவன் அர்த்தார்த்தி; விஷ்ணுவின் தத்துவத்தை யறிந்தவன் ஜ்ஞாநி—என்பதாக. ஸ்வாமி யெம்பெருமானார் இவ்வழியைச் சிறிதும் பின்பற்றாமல், இழந்துபோன செல்வத்தை மீண்டும் பெற விரும்புமவன் ஆர்த்தனென்றும், புதிதாகச் செல்வமடையக் கோருமவன் அர்த்தார்த்தி யென்றும், ப்ரக்ருதிக்குப் புறம்பான ஆத்மாவை யடையக்கோருபவன் ஜிஜ்ஞாஸு வென்றும், ஆத்மஸ்வரூபம் எம்பெருமானுக்கே சேஷப்பட்டிருக்குந் தன்மையதென்கிற அறிவுடையவனாய் அவ்வாத்மவஸ்துவோடு நில்லாமல் எம்பெருமானைப் பெற ஆசைப்பட்டு அவனையே பரம ப்ராப்யனாக நினைத்திருப்பவன் ஜ்ஞாநி யென்றும் அர்த்த விவரணம் செய்திருப்பதானது ஆழ்வார்களின் வழியைப் பின்பற்றியதே யாகும். திருவாய்மொழியில் * ஒரு நாயகமா யென்கிற பதிகத்தில் ப்ரஷ்டைச்வர்யகாமன், அபூர்வைச்வர்யகாமன், கைவல்யார்த்தி ஆகிற இவர்களை யிகழ்ந்தும் திருநாரணன் தாள்காலம் பெறச் சிந்தித்து உய்வாரைப் புகழ்ந்தும் அருளிச் செய்ததும், இப்படியே திருப்பல்லாண்டிலும் இந்நால்வகையதிகாரிகளையு மெடுத்துரைத்திருப்பதுமே ஸ்வாமிக்கு வழிகாட்டியாக அமைந்து நின்றன.

இங்கு மிக முக்கியமான விஷயம் ஒன்றே குறிக்கொள்ளத்தக்கது. மூலத்திலுள்ள ஜ்ஞாநீ என்கிற பதத்திற்கு சங்கராசார்யர் எழுதிவைத்த பொருள் "ஜ்ஞாநீ—விஷ்ணோ: தத்த்வவித்" என்று. நம் ஸ்வாமி இப்பொருளை ஒன்றாக எண்ணாது "பகவத் சேஷதைகரஸ ஆத்மஸ்வரூபவித்—ஜ்ஞாநீ" என்றருளிச் செய்திருப்பது ஆழ்வார் ஸ்ரீஸூக்தியாகிற அமுதவெள்ளத்தில் ஆழ்ந்தது காரணமாகவே யாகும். இஃது இங்குச் சிறிது விவரிக்கப்படுகிறது. ஸ்ரீவசநபூஷணத்தில் (73) * அஹமர்த்தத்துக்கு ஜ்ஞாநாநந்தங்கள் தடஸ்த்தமென்னும்படி தாஸ்யமிறே அந்தரங்க நிரூபகம் * என்ற சூர்ணையின் வியாக்கியானத்தில் "திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீபாதத்திலே ஆழ்வான் ஆறுமாஸம் ஸேவித்து நின்று மஹாநிதியாகப் பெற்ற அர்த்தமிறே இது" என்று மணவாளமாமுனிகள் அருளிச் செய்துள்ளார். எம்பெருமானார் கோஷ்டியிலே உபய வேதாந்த க்ரந்த காலக்ஷேபம் நடவாநிற்க, "ஆத்மாவுக்கு ஜ்ஞாநாநந்தங்களும் சேஷத்வமும் நிரூபகமாகச் சொல்லப்படா நின்றன; இவற்றி

னுள் அந்தரங்க நிரூபகம் எது?" என்று திருவோலக்கத்திலே ப்ரஸ்தாவம் நிகழ்ந்ததாம். ஸ்வாமி ஸர்வஜ்ஞரா யெழுந்தருளியிருக்கச் செய்தேயும் இதனை ஆசார்ய முகேந வெளியிடவேணுமென்று திருவுள்ளம்பற்றி ஆழ்வானை நோக்கி 'வாரீர் ஆழ்வான்! திருக்கோட்டியூர்க்குச் சென்று நம்பியை ஸேவித்து இதனை யறிந்து வாரும்' என்று நியமிக்க, ஆழ்வானும் நம்பி ஸன்னிதிக்கெழுந்தருளி தண்டன் ஸமர்ப்பித்துச் செய்தியை விண்ணப்பஞ் செய்து ஆறுமாதம் ஸேவித்திருந்தும் அவர் இரங்கக் காணாமையாலே புறப்படப் புக, நம்பி அவரையழைத்து "மயர்வற மதிநலமருளப் பெற்ற ஆழ்வார் அடியேனுள்ளானென்று அருளிச் செய்தபடி கண்டாயே" என்று மொழிந்தருள, ஆழ்வானும் **தந்யோஸ்மி** யென்று எழுந்தருளினாராம். இதன் கருத்து யாதெனில்; திருக்கோட்டியூர்நம்பி யெடுத்துக் காட்டிய * அடியேனுள்ளா னென்ற பாசுரம் திருவாய்மொழி எட்டாம்பத்தில் * கண்கள் சிவந்தென்கிற பதிகத்தில் இரண்டாம்பாட்டின் முதல் வாக்கியம். * கண்கள் சிவந்து என்கிற முன் பாட்டும் * அடியேனுள்ளா னென்கிற இப்பாட்டும் எம்பெருமானுடைய ஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்குமவை. இவற்றுள் இரண்டாம் பாட்டிலுள்ள முதல் விசேஷணமாகிய அடியேனுள்ளா னென்பதனால் எம்பெருமான் ஜீவாத்மாவை அநுப்ரவேசித்திருக்குமவன் என்று சொல்லப்படுகிறது. ஆத்மாவினுள்ளான் என்றாவது, என்னுள்ளான் என்றாவது சொல்லியிருக்கலாம்; அப்படிச் சொல்லாமல் அடியேனுள்ளானென்று சொல்லியிருக்கிறார். அடியேனென்பதை ஆத்மவஸ்துவுக்கு வாசகமான பதமென்றே ஆழ்வார் கொண்டிருக்கிறார். நாலாயிர திவ்யப்ரபந்தத்திலுள் அடியேனென்கிற சொல் நானூறிடங்களில் வந்திருக்கும். அவ்விடங்களிலெல்லாம் தேஹ விசிஷ்டனான ஆத்மாவே அடியேனென்கிற சொல்லுக்குப் பொருளாகும். "அடியேன் செய்யும் விண்ணப்பமே" என்றவிடத்தை யெடுத்துக்கொள்வோம்: வெறும் ஆத்மா விண்ணப்பம் செய்ய முடியாதன்றோ; தேஹ விசிஷ்டனான ஆத்மாவே விண்ணப்பஞ் செய்ய முடியுமாதலால் இங்கு வெறும் ஆத்மாவை அர்த்தமாகக் கொள்வதற்கில்லை. எந்த இடத்திலுமிப்படியே. * அடியேனுள்ளானுடலுள்ளான் * என்கிற பாசுரத்தில் மாத்திரம் அடியேன் என்பதற்கு வெறும் ஆத்மாவே அர்த்தமாக வேண்டிய நிர்ப்பந்த முள்ளது. அசேதநப்பொருளுக்கு வாசகமான சொல் [உடலென்பது] தனிப்பட இருப்பதனால். இந்த மருமம் குருகுலவாஸ பாக்கிய மில்லாதார்க்கு அறியவரிது. திருக்கோட்டியூர் நம்பி ஆளவந்தார் ஸ்ரீபாதத்தில் கேட்ட மஹார்த்தமிது. இது ஆழ்வான் வழியாக ஸ்வாமிக்கு விதிபோல் கிடைத்தபடியால் இந்த மஹார்த்தம் திருவுள்ளத்திலேயே வைத்திருந்து கீதையில் ஜ்ஞாநீ யென்கிற உயிரான சொல்லுக்குப் பொருள் விவரிக்குமிடத்து அற்புதமாக வெளியிடப்பட்டதாயிற்று. ஆத்மாவுக்குள்ள ஜ்ஞாத்ருத்வமானது விஷ்ணு தத்வத்தை யறிவதற்காக வென்று சங்கராசார்யர் கொண்டார்; **தான் பகவச் சேஷதைகரஸன்** என்று தன் ஸ்வரூபத்தை யறிவதற்காக வென்று ஸ்வாமி கொண்டார்; உலகில் ஸாதனத்திற் காட்டில் ஸாத்யம் சிறந்த தென்பது ஸித்தமாகையாலே, சேஷத்வஜ்ஞாநமாகிற ஸாத்யத்திற்கு ஜ்ஞாத்ருத்வம் ஸாதனமென்று கொள்ளப்பட்டு சேஷத்வமே ஜீவாத்மாவுக்கு அந்தரங்க நிரூபகமென்று விளக்கப்பட்டதாயிற்று.

பகவத் கீதைக்கு நமது பாஷ்யகாரரான எம்பெருமானார் அருளிச் செய்திருக்கின்ற பாஷ்யத்தை ஆழ்ந்து நோக்கினால் அதனுடைய அருமை பெருமைகள் பேச்சுக்கு நிலமல்ல.

னுள் அந்தரங்க நிரூபகம் எது?'' என்று திருவோலக்கத்திலே ப்ரஸ்தாவம் நிகழ்ந்ததாம். ஸ்வாமி ஸர்வஜ்ஞராய் எழுந்தருளியிருக்கச் செய்தேயும் இதனை ஆசார்ய முகேந வெளியிடவேணுமென்று திருவுள்ளம்பற்றி ஆழ்வானை நோக்கி 'வாரீர் ஆழ்வான்! திருக்கோட்டியூர்க்குச் சென்று நம்பியை ஸேவித்து இதனை யறிந்து வாரும்' என்று நியமிக்க, ஆழ்வானும் நம்பி ஸந்நிதிக்கெழுந்தருளி தண்டன் ஸமர்ப்பித்துச் செய்தியை விண்ணப்பஞ்செய்து ஆறுமாதம் ஸேவித்திருந்தும் அவர் இரங்கக் காணாமையாலே புறப்படப் புக, நம்பி அவரையழைத்து ''மயர்வற மதிநலமருளப் பெற்ற ஆழ்வார் அடியேனுள்ளானென்று அருளிச் செய்தபடி கண்டாயே'' என்று மொழிந்தருள, ஆழ்வானும் த்ருப்யோஸ்மி யென்று எழுந்தருளினாராம். இதன் கருத்து யாதெனில்; திருக்கோட்டியூர்நம்பி யெடுத்துக் காட்டிய * அடியேனுள்ளான் என்கிற பாசுரம் திருவாய்மொழி எட்டாம்பத்தில் * கண்கள் சிவந்து என்கிற பதிகத்தில் இரண்டாம்பாட்டின் முதல் வாக்கியம். * கண்கள் சிவந்து என்கிற முன் பாட்டும் * அடியேனுள்ளான் என்கிற இப்பாட்டும் எம்பெருமானுடைய ஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்குமவை. இவற்றுள் இரண்டாம் பாட்டிலுள்ள முதல் விசேஷணமாகிய அடியேனுள்ளான் என்பதனால் எம்பெருமான் ஜீவாத்மாவை அநுப்ரவேசித்திருக்குமவன் என்று சொல்லப்படுகிறது. ஆத்மாவிலுள்ளான் என்றாவது, என்னுள்ளான் என்றாவது சொல்லியிருக்கலாம்; அப்படிச் சொல்லாமல் அடியேனுள்ளானென்று சொல்லியிருக்கிறார். அடியேனென்பதை ஆத்மாவுக்கு வாசகமான பதமென்றே ஆழ்வார் கொண்டிருக்கிறார். நாலாயிர திவ்யப்ரபந்தத்திலுள் அடியேனென்கிற சொல் நானூறிடங்களில் வந்திருக்கும். அவ்விடங்களிலெல்லாம் தேஹ விசிஷ்டனான ஆத்மாவே அடியேனென்கிற சொல்லுக்குப் பொருளாகும். ''அடியேன் செய்யும் விண்ணப்பமே'' என்றவிடத்தை யெடுத்துக்கொள்வோம்: வெறும் ஆத்மா விண்ணப்பஞ் செய்ய முடியாதன்றோ; தேஹ விசிஷ்டனான ஆத்மாவே விண்ணப்பஞ் செய்ய முடியுமாதலால் இங்கு வெறும் ஆத்மாவை அர்த்தமாகக் கொள்வதற்கில்லை. எந்த இடத்திலுமிப்படியே. * அடியேனுள்ளானுடலுள்ளான் * என்கிற பாசுரத்தில் மாத்திரம் அடியேன் என்பதற்கு வெறும் ஆத்மாவே அர்த்தமாக வேண்டிய நிர்ப்பந்தமுள்ளது. அசேதநப்பொருளுக்கு வாசகமான சொல் [உடலென்பது] தனிப்பட இருப்பதனால். இந்த மருமம் குருகுலவாஸ பாக்கியமில்லாதார்க்கு அறியவரிது. திருக்கோட்டியூர் நம்பி ஆளவந்தார் ஸ்ரீபாதத்தில் கேட்ட மஹார்த்தமிது. இது ஆழ்வான் வழியாக ஸ்வாமிக்கு நிதிபோல் கிடைத்தபடியால் இந்த மஹார்த்தம் திருவுள்ளத்திலேயே ஊறியிருந்து கீதையில் ஜ்ஞாநீ என்கிற உயிரான சொல்லுக்குப் பொருள் விரித்தருளுமிடத்து அற்புதமாக வெளியிடப்பட்டதாயிற்று. ஆத்மாவுக்குள்ள ஜ்ஞாத்ருத்வமானது விஷ்ணு தத்வத்தை யறிவதற்காக வென்று சங்கராசார்யர் கொண்டார்; தான் பகவச் சேஷதைகரஸன் என்று தன் ஸ்வரூபத்தை யறிவதற்காக வென்று ஸ்வாமி கொண்டார்; உலகில் ஸாதனத்திற் காட்டில் ஸாத்யம் சிறந்ததென்பது ஸித்தமாகையாலே, சேஷத்வஜ்ஞாநமாகிற ஸாத்யத்திற்கு ஜ்ஞாத்ருத்வம் ஸாதநமென்று கொள்ளப்பட்டு சேஷத்வமே ஜீவாத்மாவுக்கு அந்தரங்க நிரூபகமென்று விளக்கப்பட்டதாயிற்று.

பகவத் கீதைக்கு நமது பாஷ்யகாரரான எம்பெருமானார் அருளிச் செய்திருக்கின்ற பாஷ்யத்தை ஆழ்ந்து நோக்கினால் அதனுடைய அருமை பெருமைகள் பேச்சுக்கு நிலமல்ல.

ஸம்க்ஷேபமாக அருளிச் செய்திருந்தாலும் வியாக்கியான சைலியானது அழகிலுமாற்ற வினிதே. இப்போது ஒரு ச்லோகத்தின் பாஷ்ய பங்க்திகள் சிலவற்றை யெடுத்துக் கொண்டு அவற்றிலுள்ள ரஸ விசேஷங்களை அநுபவிக்கவும் அநுபவிப்பிக்கவும் விரும்பியெழுகின்றேன்.

எட்டாவது அத்யாயத்தில் பதினான்காவது ச்லோகம்—

[அநந்ய சேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச:, தஸ்யாஹம் ஸுலப: பார்த்த நித்யயுக்தஸ்ய யோகிந:.] என்பது.

"ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்" என்று பகவான்தான் தனக்கு உயிர் நிலையாகக் கொண்டாடும் ஞானியானவன் தன்னை உபாஸிக்க வேண்டியபடியையும் பேறு பெறும் பரிசையும் இனியருளிச் செய்கிறான் (கண்ணபிரான்)— என்று அவதாரிகையிட்டு சுலோகத்தை வெகு அழகாக வியாக்கியானித்தருளி யுள்ளார். இந்த சுலோகத்தின் கருத்து என்னவென்றால், அர்ஜுநா!, எவன் இடைவிடாமல் எப்போதும் வேறொன்றிலும் நெஞ்சைச் செலுத்தாதவனாய் என்னையே ஸ்மரிக்கிறானோ, எனக்கு நித்ய ஸம்ச்லேஷத்தை விரும்பியிருக்கின்ற அந்த பக்தனுக்கு நான் ஸுலபன்—என்பதேயாம். இதில் [அவனுக்கு நான் ஸுலபன்] என்கிற பகுதிக்கு பாஷ்யம் செய்தருளி யிருக்கின்ற அழகு தான் இங்கு ஸத்ஸம்ப்ரதாய ரஸிகர்களால் அநுபவிக்கத்தக்கது.

என்னோடு எப்போதும் கூடி யி ரு க் க வேணுமென்கிற விருப்பமுடையவனுக்கு அடையத் தகுந்தவனுமாகிறேன் நான். (அதாவது) அவனுடைய பிரிவைப் பொறுக்க மாட்டாதவனாய் [அவனைப் பிரிந்து தரித்திருக்க மாட்டாதவனாய்] நானே அவனை வரிக்கிறேன். என்னையடைவதற்கான உபாஸனத்தின் பரிபக்குவ நிலைமையையும், அதற்குற்ற இடையூறுகள் நீங்குதலையும், என்னிடத்தில் அதிகமான ப்ரீதி முதலியவைகளையும் நானே கொடுக்கிறேன். * நாயமாத்மாச்ருதியில் இவ்வர்த்தம் ப்ரஸித்தமாயிருப்பதோடு இந்த கீதையிலேயே மேலே பத்தாவது அத்யாயத்தில் 10, 11 ச்லோகங்களாலும் சொல்லப்படுகிறது—என்பதாம். (இது கீதாபாஷ்ய மொழி பெயர்ப்பு.)

ஆரியர்காள்! ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்தம் இங்கே பொதிந்திருக்குமழகை என் சொல்லுவோம்!. ஸ்வகத ஸ்வீகாரமென்றும் பரகதஸ்வீகாரமென்றும் இரண்டு சொல்லுவதுண்டு; சேதநன் தான் எம்பெருமானைப் பற்றுவதானது ஸ்வகத ஸ்வீகார மென்றும், எம்பெருமான் தானே சேதநனை வரிப்பதானது பரகதஸ்வீகாரமென்றும் சொல்லப்படும். ஸத்ஸம்பிரதாயச் சுவடறியாதார் இதை ஆக்ஷேபிப்பதுமுண்டு. ஸ்ரீவசனபூஷணத்தில்—"இவன் அவனைப் பெற நினைக்கும்போது ப்ரபத்தியும் உபாயமன்று; அவன் இவனைப்பெற நினைக்கும்போது பாதகமும் விலக்கன்று" என்று அருளிச்செய்த விடத்தில் வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள்—

"உடைமையை உடையவன் சென்று கைக்கொள்ளுமாபோலே ஸ்வாமியான அவன் தானே வந்து அங்கீகரிக்கக் கண்டிருக்கக்கடவ பரதந்த்ரனான இச்சேதநனானவன் தான் பலியாய்த் தன்ஸ்வீகாரத்தாலே ஸ்வதந்த்ரனான அவனைப் பெற நினைக்குமளவில் அவன் நினைவு கூடாதாகில், இப்படி விலக்ஷணையாயிருக்கிற ப்ரபத்தியும் தல்லாப ஸாதநமாகா

*தென்றாய்.....ஸ்வாமியாய் ஸ்வதந்த்ரனை அவன் ஸ்வம்மாய் பரதந்த்ரனுயிருக்கிற இவனை ஸ்வேச்சையாலே பெற நினைக்குமளவில் பாதகமும் ப்ரதிபந்தகமாக மாட்டாதென்கை. இவை யிரண்டாலுமிஃ ஸ்வகத ஸ்வீகாராநுபாயத்வமும் பரகதஸ்வீகாரோபாயத்வமும் காட்டப்பட்டது."*

*என்றருளிச் செய்திருக்கும்* ஸ்ரீஸூக்திகள் மேலே காட்டிய கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்திகளையே *அடியாகக்கொண்டவையென்று* நன்கு புலப்படுகின்றது. தாம் முன்பு ஒரு *வேஷத்தாலே* கீதா பாஷ்யத்தில் ஸம்ஸ்க்ருதத்தாலே அருளிச் செய்ததை பின்பு மற்றொரு *வேஷத்தாலே* ஸ்ரீவசநபூஷண *வியாக்யானத்தில்* த்ராவிடத்தாலே *அருளிச் செய்தாரென்று அறுதியிடத் தட்டில்லை.*

*கீதாபாஷ்ய* ஸ்ரீஸூக்தியை ஒவ்வொன்றாக எடுத்து விமர்சிப்போம். [* தத்வியோகம் அஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே *] ஞானியான சேதநனைப் பிரிந்திருப்பதை எம்பெரு*மான் தான்பொறுத்திருக்கமாட்டாதவனுய் தானே அந்த சேதநனை வரிப்பதாகக் கூறுகின்ற விதுதான் பரகதஸ்வீகார மென்பது.*

[மத்ப்ராப்த்யநுகுணோபாஸநவிபாகம் 'அஹமேவ' ததாமீதி அர்த்த:.] இந்த வாக்கியமானது *ஸ்வகத ஸ்வீகாரப் பற்றுதலை நன்றாகக்* கழிக்கிறது. இத்தலையில் *விளைவதெல்லாம் எம்பெருமானுடைய க்ருஷியாலுண்டாக விளைகின்றதேயன்றி* இவன் *தலையாலே விளைவித்துக் கொள்ளுமது ஒன்றுமில்லை என்கிற ஸத்ஸம்ப்ரதாய* ஸாரார்த்தம் *தெளிவிக்கப்பட்டது.* இந்த *இடத்தில்* * *நாயமாத்மா* *ச்ருதியையும் எடுத்துக்காட்டியருளின பாஷ்யகாரர், பரகத ஸ்வீகாரத்திற்கு அதுவே ப்ரமாண மென்று நிரூபிக்கிற முகத்தாலே பிறருடைய அசட்டு வாதங்களையும் அகற்றினராயிற்று.*

*இவ்விடத்தில் தாத்பர்யசந்த்ரிகையில்* தேசிகன் "உக்தஸ்ய அதிவாத மாத்ரத்வசங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதாமாஹ—* யமேவேதி" *என்றருளிச் செய்திருப்பதும் ஆழ்ந்து நோக்கத்தக்கது. இதனால் பரகதஸ்வீகாரவித்வேஷிகளின் வாதம் வேதாந்தவிருத்த மென்பது மூதலிக்கப்பட்டது.*

.... ... ... *

## எம்பெருமானாரும் ஸ்ரீபாஷ்யமும்

*ஸ்வாமி* ஸ்ரீ*பாஷ்யமருளிச் செய்யும்போது* ஆழ்வார்*களின்* திவ்யஸூக்திகளை இடைவீடின்றித் திருவுள்ளத்தில் *சிந்தனைசெய்துகொண்டேயிருந்தா ரென்பது உபயவேதாந்தங்களிலும் ஆழ்ந்த அறிவுபெற்ற மஹான்களுக்கே அறியவெளிது.* ஸ்ரீ*பாஷ்யத்திலிருந்து சிலவிடங்கள் எண்ணெடுத்துக் காட்டப்படுகின்றன. முதல்அத்யாயம் முதல்பாதத்தில்* (ஸூ. 21.) * அந்தஸ் தத்தர்மோபதேசாத் * *என்கிற ஸூத்ரத்திற்கு பாஷ்யமருளிச்செய்து தலைக்கட்டி, பிறகு ப்ராஸங்கிகமாக வொரு விஷயமெடுத்துக் கொண்டு அருளிச்செய்கிறார்* ;—எம்பெருமான் *விபவாவதாரங்கள் செய்தருள்வதானது* * பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம் * *இத்யாதி கீதாஸூக்தியின்படி ஸாதுபரித்ராணத்திற்காகவும் துஷ்க்ருத்விநாசத்திற்காகவுமானாலும் ஸாதுபரித்ராண மொன்றே உத்தேச்யம்; துஷ்க்ருத்விநாசநம் ஸங்கல்பமாத்திரத்தினாலும் ஆகக்கூடியதாகலால் அது ஆநுஷங்கிகமேயொழிய ப்ரதாநமன்று—என்றருளிச்*

தென்றபடி......ஸ்வாமியாய் ஸ்வதந்த்ரனான அவன் ஸ்வம்மாய் பரதந்த்ரனாயிருக்கிற இவனை ஸ்வேச்சையாலே பெற நினைக்குமளவில் பாதகமும் ப்ரதிபந்தகமாக மாட்டாதென்கை. இவை யிரண்டாலும் ஸ்வகத ஸ்வீகாராநுபாயத்வமும் பரகதஸ்வீகாரோபாயத்வமும் காட்டப்பட்டது.''

என்றருளிச் செய்திருக்கும் ஸ்ரீஸூக்திகள் மேலே காட்டிய கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்திகளையே அடியாகக்கொண்டவையென்று நன்கு புலப்படுகின்றது. தாம் முன்பு ஒரு வேஷத்தாலே கீதா பாஷ்யத்தில் ஸம்ஸ்க்ருதத்தாலே அருளிச் செய்ததை பின்பு மற்றொரு வேஷத்தாலே ஸ்ரீவசநபூஷண வியாக்யானத்தில் த்ராவிடத்தாலே அருளிச் செய்தாரென்று அறுதியிடத் தட்டில்லை.

கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தியை ஒவ்வொன்றாக எடுத்து விமர்சிப்போம். [* தத்வியோகம் அஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே *] ஞானியான சேதநனைப் பிரிந்திருப்பதை எம்பெருமான் தான்பொறுத்திருக்கமாட்டாதவனாய் தானே அந்த சேதநனை வரிப்பதாகக் கூறுகின்ற விதுதான் பரகதஸ்வீகார மென்பது.

[மத்ப்ராப்த்யநுகுணோபாஸநவிபாகம் 'அஹமேவ' ததாமீதி அர்த்த:.] இந்த வாக்கியமானது ஸ்வகத ஸ்வீகாரப் பற்றாசை நன்றாகக் கழிக்கிறது. இத்தலையில் விளைவதெல்லாம் எம்பெருமானுடைய க்ருஷிபலமாக விளைகின்றதேயன்றி இவன் தலையாலே விளைவித்துக் கொள்ளுமது ஒன்றுமில்லை என்கிற ஸத்ஸம்பிரதாய ஸாரார்த்தம் தெளிவிக்கப்பட்டது. இந்த இடத்தில் * நாயமாத்மா ச்ருதியையும் எடுத்துக்காட்டியருளின பாஷ்யகாரர், பரகத ஸ்வீகாரத்திற்கு அதுவே பிரமாண மென்று நிரூபிக்கிற முகத்தாலே பிறருடைய அசட்டு வாதங்களையும் அகற்றினாராயிற்று.

இவ்விடத்தில் தாத்பர்யசந்த்ரிகையில் தேசிகன் "உக்தஸ்ய அதிவாத மாத்ரத்வசங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதாமாஹ—* யமேவேதி'' என்றருளிச் செய்திருப்பதும் ஆழ்ந்து நோக்கத்தக்கது. இதனால் பரகதஸ்வீகாரவித்வேஷிகளின்வாதம் வேதாந்தவிருத்த மென்பது மூதலிக்கப்பட்டது.

.... ... ... *

## எம்பெருமானாரும் ஸ்ரீபாஷ்யமும்

ஸ்வாமி ஸ்ரீபாஷ்யமருளிச் செய்யும்போது ஆழ்வார்களின் திவ்யஸூக்திகளை இடைவீடின்றித் திருவுள்ளத்தில் சிந்தனைசெய்துகொண்டேயிருந்தாரென்பது உபயவேதாந்தங்களிலும் ஆழ்ந்த அறிவுபெற்ற மஹான்களுக்கே அறியவெளிது. ஸ்ரீபாஷ்யத்திலிருந்து சில விடங்கள் ஈண்டெடுத்துக் காட்டப்படுகின்றன. முதல்அத்யாயம் முதல்பாதத்தில் (ஸூ. 21.) * அந்தஸ் தத்தர்மோபதேசாத் * என்கிற ஸூத்ரத்திற்கு பாஷ்யமருளிச்செய்து தலைக்கட்டி, பிறகு ப்ராஸங்கிகமாக வொரு விஷயமெடுத்துக் கொண்டு அருளிச்செய்கிறார் ;—எம்பெருமான் விபவாவதாரங்கள் செய்தருள்வதானது * பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம் * இத்யாதி கீதாஸூக்தியின்படி ஸாதுபரித்ராணத்திற்காகவும் துஷ்க்ருத்விநாசத்திற்காகவுமானாலும் ஸாதுபரித்ராண மொன்றே உத்தேச்யம்; துஷ்க்ருத்விநாசநம் ஸங்கல்பமாத்திரத்தினாலும் ஆகக்கூடியதாதலால் அது ஆநுஷங்கிகமேயொழிய ப்ரதாநமன்று—என்றருளிச்

செய்துள்ளார். துஷ்க்ருத் விநாசநம் ஸங்கல்பஸாத்யமாகிறாப் போலே ஸாதுபரித்ராணமும் ஸங்கல்பஸாத்யமாகக் கூடாதோவென்று கேள்வி பிறக்கும். இது ஸங்கல்பஸாத்யமன்றென்றும் நேரில் அவதரித்தேசெய்யக்கூடியதென்றும் திருவாய்மொழியில் • நம்மாழ்வார் அருளிச்செய்துள்ளார். [மூன்றாம்பத்து—முதற்பதிகம்—பாட்டு 9.] * மழுங்காத வைநுதிய சக்கரநல் வலத்தையாய், தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே, மழுங்காத ஞானமே படையாக மலருலகில், தொழும்பாயார்க்கு அளித்தாலுன் சுடர்ச்சோதி மறையாதே * என்கிற பாசுரம் இன்சுவையே வடிவெடுத்தது. எம்பெருமான் ஸ்ரீகஜேந்திராழ்வானுடைய கூக்குரலைக்கேட்டு அரைகுலையத் தலைகுலைய மடுவின்கரையிலே ஓடி வந்து விழுந்தானென்கிற இதிஹாஸம் ப்ரஸித்தமானது. எதற்காக ஓடிவரவேண்டும்; * கருதுமிடம் பொருதுவரவல்ல திருவாழியாழ்வானைத் திருநாட்டிலிருந்தே ஏவினால் அவன் ஒரு நொடியில் காரியஞ்செய்து முடிக்கமாட்டானோ? அவனுக்குத்தான் ச்ரமம் கொடுக்க வேணுமோ? ஸகலஜகத்ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாரங்களுக்கும் காரணமாகவுள்ள ஸங்கல்பம் எங்குப்போய்விட்டது? அதனால் யானையினிடரை அவலீலையாகத் தீர்த்திருக்கலாமே. இவ்விரண்டுபடியுமின்றிக்கே அறப் பதறியோடிவந்தது எதற்காக? என்று நம்மாழ்வார் கேள்வி கேட்கிறவர் தாமே ஸமாதானத்தையும் *தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே* என்ற அடியினால் ஸ்பஷ்டமாக அருளிச்செய்தார். மடுவின்கரையிலேவந்து நின்ற எம்பெருமானை நோக்கி கஜேந்திராழ்வான் * நாஹம் களேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம் மதுஸூதந, கரஸ்தகமலாந்யேவ பாதயோரர்ப்பிதும் தவ * என்றான்; (அதாவது, என்றேனுமொருநாள் அழிந்தேபோகக் கூடியதான இவ்வுடலைப் பாதுகாத்துக் கொள்வதற்காக நான் கரைந்தேனல்லேன்; எம்பெருமானே! உன்னைநேரில் ஸேவித்து உன்றன்பொன்னடிகளில் இத்தாமரைமலர்களைப் பணிமாறுவதற்காகவே கரைந்தேன்—என்றான்.) இப்படிப்பட்ட ஆவல்கொண்ட பக்தசிகாமணிகளின் ஆசையை ஸங்கல்பத்தினால் தலைக்கட்டுதல் எங்ஙனே ஸாத்யமாகும்? ஒருநாளுமாகாது. நேரில் அவதரித்தேதானாக வேண்டும்—என்பது ஆழ்வாரால் நிலைநாட்டப்பட்ட விஷயம். இதனைத் திருவுள்ளம் பற்றியே ஸ்வாமி * அந்தராதிகரண ஸ்ரீபாஷ்யத்தில்—

" साधुपरित्राणमेवोद्देश्यम् । आनुषङ्गिकस्तु दुष्कृतां विनाशः, संकल्पमात्रेणापि तदुपपत्तेः."

[ஸாதுபரித்ராணமேவ உத்தேச்யம்; ஆநுஷங்கிகஸ்து துஷ்க்ருதாம் விநாச:; ஸங்கல்ப மாத்ரேணாபி தது பபத்தே:] என்றருளிச்செய்தது.

இன்னமுமொன்று காண்மின்; மூன்றாமத்யாயத்தில் இரண்டாவது பாதத்தில் (ஸூ. 34.) * உபபத்தேச்ச * என்பது. இதற்கு இதரபாஷ்யகாரர்கள் ஒருவரும் செய்யாத—செய்யமுடியாத—அவர்களுடைய சிந்தைக்கும் கோசரமல்லாத அர்த்தத்தை ஸ்வாமி அருளிச்செய்துள்ளார்; ஸ்ரீபாஷ்யஸூக்தி வருமாறு:—

"प्राप्यस्य परमपुरुषस्य स्वप्राप्तौ स्वस्यैवोपायत्वोपपत्तेः * नायमात्मा प्रवचनेन लभ्यः . . . तनूं स्वामिति अनन्योपायत्वश्रवणात् " என்றும், " * अमृतस्यैष सेतुरिति अमृतस्य अस्य स्वयमेव प्रापक इति सेतुत्वव्यपदेशोपपत्तेश्च "

என்றும் அருளிச் செய்யப்பட்டுள்ளது. எம்பெருமானைப் பெறுவதற்கு வேறு உபாயமில்லை யென்றும் ப்ராப்யனும் ப்ராபகனும் அவனே யென்றும் ஸ்வாமி அறுதியிட்டருளிச் செய்வதானது * ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய் * கழல்களவையே சரணாகக்கொண்ட குருகூர்ச் சடகோபன் * நெறிகாட்டி நீக்குதியோ * என்பன போன்ற பல பாசுரங்களின் ஸாரார்த்தத்தையே தொகுத்தபடியாம். அருளிச்செயலில் வாஸனை பண்ணிப் போருவார்க்குக்கூட நிலமல்லாத அர்த்தமன்றோவிது.

மற்றுமொன்றும் கேண்மின். சேதநலாபம் ஈச்வரனுக்குப் பேறு? ஈச்வரலாபம் சேதநனுக்குப் பேறு? என்பது ஒரு விசாரம். உபநிஷத்துக்களில் * ப்ரஹ்மவிதாப்நோதி பரம் * என்பது முதலான பல வாக்கியங்களினால் ஈச்வரனை ப்ராப்யனாகவும் சேதநனை ப்ராப்தாவாகவும் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கையாலே ஈச்வரலாபமே சேதனனுக்குப் பேறு என்று திண்ணமாகத் தெரியநிற்க; சேதனலாபம் ஈச்வரனுக்குப் பேறு என்கிற வார்த்தையே யுக்தமாக இல்லையே யென்று பிறர் நினைப்பதும் சொல்லுவதுமுண்டு. ஸ்ரீவசநபூஷணத்தில் * ப்ராப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்கு உகப்பானும் அவனே * என்பது உயிரானதொரு சூர்ணிகை. சேதநனைப் பெறுவது ஈச்வரனுக்குப் பேறு என்றால் இவ்வர்த்தம் ஹ்ருதயத்தில் அவகாஹிப்பது சிரமமேயாகும். ஸ்ரீபாஷ்யத்தைப் பலகால் பாராயணமும் ப்ரவசநமுஞ் செய்யுமதிகாரிகளுக்கும் அருளிச் செயலவகாஹநமில்லாதவளவில் இவ்வர்த்தம் மதியிலேறுவது மஹாச்ரமமே. இதை எளிதாகவுணர்த்துகிறோமிங்கு. சேதநன் முக்தனாகிப் பரமபதத்தில் சென்றபின் அங்கு என்ன கோஷிக்கிறானென்பதை நம் உபநிஷத்து தெளிவிக்கின்றது. * அஹமந்நமஹ மந்நமஹ மந்நம் * என்பது முக்தனுடைய முதல்வார்த்தை. 'பகவானுக்கு நான் அன்னமாகிறேன்' என்று ஒருதடவைக்கு மூன்று தடவையாக இதில் சொல்லுகிறது. இதனால் ஈச்வரனானவன் சேதநனைப் பெற்று அது பசிக்கடையாறுமென்று பெரும்பசி கொண்டிருந்தானென்றும் அப்பசியானது முக்தாத்மாவால் தீருகிறதென்றும் ஸ்பஷ்டமாகிறது. இல்லையாகில் * அஹமந்நம் * என்று ஓத வேண்டியதில்லையன்றோ. அடுத்தபடியாக * அஹமந்நாத: அஹமந்நாத: அஹமந்நாத: * என்றும் ஓதுவதாக வருகிறது. எம்பெருமானுக்கு இவன் அன்னமாகி அவனது பசியைத் தீர்த்தபிறகு இவனும் தன்பசி தீருவதாக ஓதிற்று.

'* அஹமந்நம் அந்நமதந்தமத்மி * என்கிற மேல்வாக்யத்தினாலும் இது விவரிக்கப்படுகிறது. இதன் தாத்பர்யமென்னவென்றால், முக்தனுடைய தன்னை யநுபவித்து எம்பெருமான் விடாய் தீர்ந்து மகிழ்ந்து நிற்கையில் அந்த மகிழ்ச்சியைக் கண்டு தான் மகிழ்கிறான். இவன் அசேதநனல்லாமல் சேதநனாய் ஞானானந்தங்களை வடிவாகவுடையனாயிருக்கையாலே தன்னுடைய ஆனந்தமும் பயன்பெற்றதாக வேணுமே; அசித்திற்காட்டில் தனக்கு ஒருவாசி ஏற்படவேணுமே. தன்னைப் பெற்று எம்பெருமான் ஆனந்திப்பதைக்கண்டு 'நம்மால் எம்பெருமானுக்கு இப்படியொரு ஆனந்தமுண்டாயிற்றே!' என்றநுஸந்தித்து அதனால் தான் ஆனந்திக்க ப்ராப்தமாகிறது. இப்பரமார்த்தத்தை ஆழ்வார் திருவாய்மொழியில் பலவிடங்களிலும் வெளியிட்டருளுகிறார். (9—6—10 பாசுரம் காண்மின்:—) * வாரிக்கொண்டு உன்னை விழுங்குவன் காணிலென்று, ஆர்வுற்ற வென்னையொழிய என்னில் முன்னம் பாரித்துத், தானென்னை முற்றப்பருகினான்.* என்பது மிக

முக்கியமானவொரு பாசுரம். * என்னில் முன்னம் பாரித்து * என்பதே இதில் உயிரான வார்த்தை. இதனைத் திருவுள்ளத்தில்கொண்டே ஸ்வாமி எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யத்தின் முடிவில் * அநாவ்ருத்தி ஸூத்ரபாஷ்யத்தில் * ஈச பரமபுருஷஸ் ஸத்யஸங்கல்ப: அத்யர்த்த ப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா கதாசித் ஆவர்த்தயிஷ்யதி * என்றருளிச் செய்து 'சேதநலாபமே ஈச்வரனுக்குப் பேறு' என்கிற ஸத்ஸம்ப்ரதாய ரஹஸ்யப் பொருளை ஸ்தாபித்தருளினார். இதில் * பரம புருஷ: ஜ்ஞாநிநம் லப்த்வா * என்கிற ஸ்ரீஸூக்தி வியாலபமானது எம்பெருமானார் திருவுள்ளத்தில் திருவாய்மொழிப்பாசுரங்கள் அநவரதம் அலைமெறிகிறபடியை நன்கு காட்டுகிறது. கீதையில் * ஸ மஹாத்மா ஸுதுர்லப: * என்று பகவான்தானே சோதிவாய்திறந்து பணித்ததையும் உடனே உதாஹரிக்கிறார். * எல்லாங் கண்ணனென்றிருக்கிற மஹாத்மா மிகவும் துர்லபன் என்று பகவான் தன் திருவாக்காலே சொன்னால் அப்படிப்பட்ட ஒரு மாஜ்ஞானியை லபிக்கைக்கு அவன் எவ்வளவோ பாடுபடுகிறவன் என்பது விளங்கவில்லையா வென்கிறார். இப்படிப்பட்ட அருளிச்செயலாழ் பொருள்கள் ஸ்ரீபாஷ்யகீதாபாஷ்யாதிகளில் ஆங்காங்கு பலித்து விளங்குகின்றமையால் * தமிழ்மறைகளாயிரமீன்ற முதல்தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமாநுசன் * என்றும் * மாறனுரைசெய்த தமிழ்மறைவளர்த்தோன் வாழியே * என்றும் உண்மையுணர்ந்த பெரியார் உலகமுகக்கப் போற்றிவைத்தனர்.

## 23. முதலியாண்டான்.

ஸ்வாமிஎம்பெருமானார்க்கு ஸஹோதரிகள் இருவர்—நாச்சியாரம்மை யென்றும், தாமரையாளம்மை யென்றும். அவர்களுள் மூத்தவளுடைய திருக்குமாரர் முதலியாண்டான். பச்சை வாரணப்பெருமாள் கோயிலில் சித்திரை மாதப் புனர்வசு நன்னாளில் தோன்றியவர். பண்டு த்ரேதாயுகத்தில் ராமாவதாரத்தில் ஸ்ரீமந் நாராயணன் ஸ்ரீராமனாகவும் ஆதிசேஷன் லக்ஷ்மணனாகவும் அவதரித்திருந்து, பெருமாள் இளையபெருமாளிடம் ஒழிவில் காலமெல்லாம் வழுவிலாத அடிமைகளைக் கொண்டு போந்தமை ப்ரஸித்தம். அந்த அவதாரத்தில் ஒரு பரமார்த்தம் பெருமாளுடைய திருவுள்ளத்தில் பட்டது; வகுத்த விஷயத்தில் அடிமை செய்வது ரஸமேயல்லது அடிமை கொள்வது ரஸமன்று என்றுபட்டது. அதனால், அந்த ஆதிசேஷனை சேஷியாக் வைத்துத் தான் சேஷபூதனாகவிருந்து அடிமை செய்து களிக்கக் காதல்கொண்டு த்வாபரயுகத்தில் அந்த ஆதிசேஷனை நம்பிமூத்தபிரானென்கிற பலராமனை முன்தோன்றலாய்த் திருவவதரிப்பித்துத் தான் "பலதேவற்கோர் கீழ்க்கன்றாய்" என்று ஆண்டாளருளிச் செய்தபடி அவன் தம்பியான க்ருஷ்ணனாகத் தோன்றி, பலராமனுக்கு சேஷித்வத்தையும் தனக்கு சேஷத்வத்தையும் காட்டி நின்ற விடத்திலும், செய்து போந்த அதிமாநுஷ சேஷ்டிதங்களாலே தனக்கு சேஷித்வமே உலகறிய நின்றபடியால் அக்குறை தீர மீண்டும் ஒரு அவதாரம் செய்யத்திருவுள்ளங் கொண்டு இக்கலியுகத்தில், தம்பியான இளைய பெருமாள் இளையாழ்வாரென்கிற ஸ்வாமியாகவும் தான், தாசரதியென்கிற நிஜநாமத்துடனே முதலியாண்டானாகவும் திருவவதரிக்கலாயிற்று.

* பாதுகே யதிராஜஸ்ய கதயந்தி யதாக்யயா, தஸ்ய தாசரதே: பாதௌ சிரஸா தாரயாம்யஹம் * என்பது இவ்வாசிரியருடைய தனியனாலால் ஸ்ரீராமாநுஜ பாதுகா என்றே

இவர் வழங்கப்பெற்று வந்தார். எம்பார்க்கு **ராமாநுஜபதச்சாயை** யென்கிற ப்ரஸித்தி போலே இவர்க்கு **ராமாநுஜபாதுகை** யென்கிற ப்ரஸித்தி நிகழ்ந்தது.

ஸ்வாமி ஆச்ரமஸ்வீகாரம் செய்துகொண்டு தென்னத்தியூரர் கழலிணைக்கீழ் வாழ்ந்திருக்குங்காலத்தில் கூரத்தாழ்வானோடு கூட இவரும் ஸ்வாமியை ஆச்ரயித்து வேதாந்த ரஹஸ்யார்த்தங்களை அதிகரித்து நல்விரகராயிருந்தார். திருத்தகப்பனாரான வாதூல குல திலக-அநந்தநாராயண தீக்ஷிதரிடத்திலேயே ஸாமாந்ய சாஸ்த்ரங்களையும் இவ்வர்த்தங்களையும் அதிகரித்திருந்தபடியாலே ஸ்வாமியின் அபிமானத்திற்கு ஆழ்வானைப்போலவே இவரும் இலக்காயிருந்தார். ஸ்வாமி இவ்விருவரையுமே **தண்டும் பவித்ரமுமாகத்** திருவுள்ளம்பற்றி யிருந்தது.

* லௌகிகே ஸமயாசாரே க்ருதகல்போ விசாரத: * என்று ஸ்ரீராமபிரானைப்பற்றி ஸ்ரீராமாயணத்திற் கூறியது போல, ஸ்வாமியின் சிஷ்யவர்க்கங்களுள் இவர் லௌகிக ஸாமர்த்தியமும் சிறப்புறப் பொருந்தி யிருந்ததனால் ஸ்ரீரங்கநாத திவ்யாலய கைங்கர்ய நிர்வஹண துரந்தரத்வம் இவர்க்கு ப்ராப்தமாயிற்று. சேனைமுதலியார் போல விருந்து அரங்கன் கைங்கரியத்தை ஆண்டுவந்தபடியினாலேயே இவர்க்கு **முதலியாண்டானென்று** திருநாமமாயிற்றென்பர் பெரியோர். கோயிலொழுகில் இவரைப்பற்றின ப்ரஸ்தாவத்தில்—"முதலியாண்டானும் குறட்டிலேயிருந்து கோயில் கார்யத்தையும், உள்ளே கருவுகலவாசலிலே யிருந்து திருமேனி யுபசாரத்தையும், ஸந்நிதியிலேயிருந்து திருப்பவள வுபசாரங்களையும் உடையவர் நியமனப்படி ஆராய்ந்துகொண்டு அனைத்தழகும் கண்டருளப் பண்ணிக்கொண்டிருந்தார்" என்றுள்ளது.

திருவாய்மொழியீட்டில் (2—9—2.) * ஞானக் கை தா * என்றவிடத்தில் "எம்பார்க்கு ஆண்டானருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது; அதாவது-ஒரு கிணற்றிலே விழுந்தவனுக்கு இரண்டுபேர் கை கொடுத்தால் எடுக்குமவர்களுக்கு எளிதாய் ஏறுமவனுக்கு எளிதாயிருக்குமிறே; அப்படியே யாகிறது என்று"—என்கிற ஐதிஹ்ய ஸ்ரீஸூக்தி யுள்ளது. இதன் விவரணம் வருமாறு;—முதலியாண்டான் ஒருகால் திருநாராயணபுரத்திலெழுந்தருளி யிருக்கையில் அவருடைய சிஷ்யரான வொரு ஸ்ரீவைஷ்ணவர் கோயிலிலே வந்து எம்பார் ஸந்நிதியிலே கைங்கர்யம் பண்ணிக் கொண்டிருந்தார். அப்போதொரு நாள் சில ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு எம்பார் திருவிலச்சினை ஸாதிக்க விருக்கையில் இந்த ஸ்ரீவைஷ்ணவரும் தமக்கும் [சக்ராங்கனம்] ஸாதிக்கும்படி வேண்டினார். அப்போது எம்பார் 'உமக்கு விசேஷஸம்பந்த முண்டோ?' என்று அவரைக் கேட்க; தேவரீருடைய ஸம்பந்தமே ஸம்பந்தம் என்று அவர் விண்ணப்பஞ்செய்ய, அவ்வளவிலே எம்பார் இவர் முதலியாண்டானுடைய ஸ்ரீபாதத்தவரென்று அறியாதே இவர்க்கும் பஞ்ச ஸம்ஸ்காரங்களைப் பண்ணி இவரைக்கொண்டு கைங்கரியங்களும் கொண்டெழுந்தருளியிரா நிற்கையில் ஆண்டானும் திரும்பிக் கோயிலிலே யெழுந்தருள, அப்போது அந்த ஸ்ரீவைஷ்ணவர் ஆண்டானை வந்து ஸேவிக்க, ஆண்டானும் முன்புபோலே இவரைக்கொண்டு வேண்டும் கைங்கரியங்களைக் கொள்ள, அப்போது எம்பாருமறிந்து ஆண்டான் பக்கலிலே யெழுந்-

இவர் வழங்கப்பெற்று வந்தார். எம்பார்க்கு **ராமாநுஜபதச்சாயை** யென்கிற ப்ரஸித்தி போலே இவர்க்கு **ராமாநுஜபாதுகை** யென்கிற ப்ரஸித்தி நிகழ்ந்தது.

ஸ்வாமி ஆச்ரமஸ்வீகாரம் செய்துகொண்டு தென்னத்தியூரர் கழலிணைக்கீழே வாழ்ந்தருளுங்காலத்தில் கூரத்தாழ்வானோடு கூட இவரும் ஸ்வாமியை ஆச்ரயித்து வேதாந்த ரஹஸ்யார்த்தங்களை அதிகரித்து நல்விரகராயிருந்தார். திருத்தகப்பனாரான வாதூல குல திலக அனந்தநாராயண தீக்ஷிதரிடத்திலேயே ஸாமாந்ய சாஸ்த்ரங்களையும் திவ்யப்ரபந்தங்களையும் அதிகரித்திருந்தபடியாலே ஸ்வாமியின் அபிமானத்திற்கு ஆழ்வானைப்போலவே இவரும் இலக்காயிருந்தார். ஸ்வாமி இவ்விருவரையுமே **தண்டும் பவித்ரமுமாகத்** திருவுள்ளம்பற்றி யிருந்தது.

* **லௌகிகே ஸமயாசாரே க்ருதகல்போ விசாரத:** * என்று ஸ்ரீராமபிரானைப்பற்றி ஸ்ரீராமாயணத்திற் கூறியது போல, ஸ்வாமியின் சிஷ்யவர்க்கங்களுள் இவர் லௌகிக ஸாமர்த்தியமும் சிறப்புறப் பொருந்தி யிருந்ததனால் ஸ்ரீரங்கநாத திவ்யாலய கைங்கர்ய நிர்வஹண தூரந்தரத்வம் இவர்க்கு ப்ராப்தமாயிற்று. ஸேனைமுதலியார் போலே இருந்து அரங்கன் கைங்கரியத்தை ஆண்டுவந்தபடியினாலேயே இவர்க்கு **முதலியாண்டா**னென்று திருநாமமாயிற்றென்பர் பெரியோர். கோயிலொழுகில் இவரைப்பற்றின ப்ரஸ்தாவத்தில்— "முதலியாண்டானும் குறட்டிலேயிருந்து கோயில் கார்யத்தையும், உள்ளே கருவுகல வாசலிலே யிருந்து திருமேனி யுபசாரத்தையும், ஸந்நிதியிலேயிருந்து திருப்பவள வுபசாரங்களையும் உடையவர் நியமனப்படி ஆராய்ந்துகொண்டு அனைத்தையும் கண்டருளப் பண்ணிக்கொண்டிருந்தார்" என்றுள்ளது.

திருவாய்மொழியீட்டில் (2—9—2.) * **ஞானக் கை தா** * என்றவிடத்தில் "எம்பார்க்கு ஆண்டானருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது; அதாவது-ஒரு கிணற்றிலே விழுந்தவனுக்கு இரண்டுபேர் கை கொடுத்தால் எடுக்குமவர்களுக்கு எளிதாய் ஏறுமவனுக்கு எளிதாயிருக்குமிறே; அப்படியே யாகிறது என்று"—என்கிற ஐதிஹ்ய ஸ்ரீஸூக்தி யுள்ளது. இதன் விவரணம் வருமாறு;—முதலியாண்டான் ஒருகால் திருநாராயணபுரத்தி லெழுந்தருளியிருக்கையில் அவருடைய சிஷ்யரானவொரு ஸ்ரீவைஷ்ணவர் கோயிலிலே வந்து எம்பார் ஸந்நிதியிலே கைங்கர்யம் பண்ணிக் கொண்டிருந்தார். அப்போதொரு நாள் சில ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு எம்பார் திருவிலச்சினை ஸாதிக்க விருக்கையில் இந்த ஸ்ரீவைஷ்ணவரும் தமக்கும் [சக்ராங்கனம்] ஸாதிக்கும்படி வேண்டினர். அப்போது எம்பார் 'உமக்கு விசேஷஸம்பந்த முண்டோ?' என்று அவரைக் கேட்க; தேவரீருடைய ஸம்பந்தமே ஸம்பந்தம்' என்று அவர் விண்ணப்பஞ்செய்ய, அவ்வளவிலே எம்பார் இவர் முதலியாண்டானுடைய ஸ்ரீபாதத்தவரென்று அறியாதே இவர்க்கும் பஞ்ச ஸம்ஸ்காரங்களைப் பண்ணி இவரைக்கொண்டு கைங்கரியங்களும் கொண்டெழுந்தருளியிரா நிற்கையில் ஆண்டானும் திரும்பிக் கோயிலிலே யெழுந்தருள, அப்போது அந்த ஸ்ரீவைஷ்ணவர் ஆண்டானை வந்து ஸேவிக்க, ஆண்டானும் முன்புபோலே இவரைக்கொண்டு வேண்டும் கைங்கரியங்களைக் கொள்ள, அப்போது எம்பாருமறிந்து ஆண்டான் பக்கலிலே யெழுந்-

தருளி, கனக்க அபசாரப்பட்டேன்' என்றருளிச்செய்ய, இவருடைய திருவுள்ளத்தில் க்லேசத்தையறிந்து அப்போது ஆண்டானருளிச் செய்த வார்த்தை—"ஒரு கிணற்றிலே விழுந்தவனுக்கு இரண்டுபேர் கைகொடுத்தால் எடுக்குமவர்களுக்கும் எளிதாய் ஏறும் வனுக்கும் எளிதாயிருக்குமிறே; அப்படியேயாகிறது" என்று. ஸம்ஸாரஸாகரத்திலே அழுந்தினவனுக்கு அடியேனும் கைகொடுத்து தேவரீரும் கைகொடுத்தால் என்ன குறை? தேவரீர் தவறாக ஒன்றுஞ் செய்துவிட வில்லையே; எதற்காக க்லேசிப்பது? என்பது முதலியாண்டானுடைய பரமோதார மதுரமான திருவாக்கு. [கை கொடுப்பதாவது- ஞானக்கை கொடுப்பது]

முதலியாண்டான் பணித்தவார்த்தைகளென்று அரியனவாகச் சில காண்கின்றன. ஸ்ரீராமாயணத்திற்கு ஸ்வாபதேசார்த்தம்போலே சிலவார்த்தைகள் அருளிச்செய்தாராம்; அவையாவன—

1. பிராட்டிக்குச் சிறையிருப்புப்போலே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸம்ஸாரத்திலிருப்பு.
2. பிராட்டி இளையபெருமாள்விஷயத்தில் அபசாரப்பட்டு உடனே பெருமாளைப் பிரிய நேர்ந்ததுபோல, சேதநர்களுக்கு பாகவதாபசாரம் எம்பெருமான் திருவடிஸம்பந்தத்தை விலகப்பண்ணும்.
3. பிராட்டிக்கு அசோகவனம் போலே இவர்களுக்கு ப்ராக்ருதஸம்பந்தரூபமான தேஹம்.
4. பிராட்டிக்கு அரக்கிகளின் ஸஹவாஸம்போலே இவர்களுக்குப் புத்ரகளத்ராதிகளின் ஸஹவாஸம்.
5. பிராட்டிக்கு மாரீசமாயாம்ருகக் காட்சிபோலே இவர்களுக்கு "பாவியேனைப் பலநீ காட்டிப் படுப்பாயோ" என்னும்படியான விஷயங்களின் காட்சி.
6. பிராட்டிக்குத் திருவடி நேர்பட்டாப்போலே இவர்களுக்கு ஆசார்யன் நேர்படுவது.
7. பிராட்டிக்குத் திருவடிசொன்ன ஸ்ரீராமகுணங்கள்போலே இவர்களுக்கு ஆசார்யனுபதேசிக்கும் பகவத்விஷயாதிகள்.
8. பிராட்டிக்குத்திருவடி அடையாளங்கள் கூறித் திருவாழிமோதிரம் கொடுத்ததுபோல இவர்களுக்கும் குருபரம்பரா பூர்வகமான திருமந்த்ரோபதேசம்.
9. பிராட்டி திருவடிக்குச் சூடாமணிகொடுத்தாப்போல இவர்கள் ஆசார்யன்விஷயத்தில் * தலையல்லால் கைம்மாறிலேனே * என்றிருக்குமிருப்பு.
10. பிராட்டிக்கு ஸ்ரீவிபீஷணாழ்வானது திருமகளாருடைய ஸஹவாஸமும் பேச்சும் தாரகமாயிருந்ததுபோல இவர்களுக்கு பாகவதஸஹவாஸமும் அவர்களுடைய திவ்யஸூக்திகளும் தாரகமாயிருக்கும்.
11. பெருமாள் பிராட்டியிருந்தவிடத்தேவந்து விரோதிகளைச் சேதித்து அவளைக் கைக்கொண்டதுபோல, எம்பெருமான் * ஆவாரார்துணையென்று அலைநீர்க்கடலுளழுந்தும் நாவாய்போல் பிறவிக்கடலுள்நின்று துளங்குகின்ற விடத்தேதுறைவந்து * பொய்ந்நின்றஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்புமாகிற விரோதிகளை வேரோடே

தருளி, கனக்க அபசாரப்பட்டேன்' என்றருளிச்செய்ய, இவருடைய திருவுள்ளத்தில் க்லேசத்தையறிந்து அப்போது ஆண்டானருளிச் செய்த வார்த்தை—" ஒரு கிணற்றிலே விழுந்தவனுக்கு இரண்டுபேர் கைகொடுத்தால் எடுக்குமவர்களுக்கும் எளிதாய் ஏறுமவனுக்கும் எளிதாயிருக்குமிறே; அப்படியேயாகிறது" என்று. ஸம்ஸாரஸாகரத்திலே அழுந்தினவனுக்கு அடியேனும் கைகொடுத்து தேவரீரும் கைகொடுத்தால் என்ன குறை? தேவரீர் தவறாக ஒன்றுஞ் செய்துவிட வில்லையே; எதற்காக க்லேசிப்பது? என்பது முதலியாண்டானுடைய பரமோதார மதுரமான திருவாக்கு. [கை கொடுப்பதாவது- ஞானக்கை கொடுப்பது ]

முதலியாண்டான் பணித்தவார்த்தைகளென்று அரியனவாகச் சில காண்கின்றன. ஸ்ரீராமாயணத்திற்கு ஸ்வாபதேசார்த்தம்போலே சிலவார்த்தைகள் அருளிச்செய்தாராம்; அவையாவன—

1. பிராட்டிக்குச் சிறையிருப்புப்போலே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸம்ஸாரத்திலிருப்பு.
2. பிராட்டி இளையபெருமாள்விஷயத்தில் அபசாரப்பட்டு உடனே பெருமாளைப் பிரிய நேர்ந்ததுபோல, சேதநர்களுக்கு பாகவதாபசாரம் எம்பெருமான் திருவடிஸம்பந்தத்தை விலகப்பண்ணும்.
3. பிராட்டிக்கு அசோகவனம் போலே இவர்களுக்கு ப்ரக்ருதிஸம்பந்தரூபமான தேஹம்.
4. பிராட்டிக்கு அரக்கிகளின் ஸஹவாஸம்போலே இவர்களுக்குப் புத்ரகளத்ராதிகளின் ஸஹவாஸம்.
5. பிராட்டிக்கு மாரீசமாயாமிருகக் காட்சிபோலே இவர்களுக்கு " பாவியேனைப் பலநீ காட்டிப் படுப்பாயோ " என்னும்படியான விஷயங்களின் காட்சி.
6. பிராட்டிக்குத் திருவடி நேர்பட்டாப்போலே இவர்களுக்கு ஆசார்யன் நேர்படுவது.
7. பிராட்டிக்குத் திருவடிசொன்ன ஸ்ரீராமகுணங்கள்போலே இவர்களுக்கு ஆசார்யனுபதேசிக்கும் பகவத்விஷயாதிகள்.
8. பிராட்டிக்குத்திருவடி அடையாளங்கள் கூறித் திருவாழிமோதிரம் கொடுத்ததுபோல இவர்களுக்கும் குருபரம்பரா பூர்வகமான திருமந்த்ரோபதேசம்.
9. பிராட்டி திருவடிக்குச் சூடாமணிகொடுத்தாப்போல இவர்கள் ஆசார்யன்விஷயத்தில் * தலையல்லால் கைம்மாறிலேனே * என்றிருக்குமிருப்பு.
10. பிராட்டிக்கு ஸ்ரீவிபீஷணாழ்வானது திருமகளாருடைய ஸஹவாஸமும் பேச்சும் தாரகமாயிருந்ததுபோல இவர்களுக்கு பாகவதஸஹவாஸமும் அவர்களுடைய திவ்யஸூக்திகளும் தாரகமாயிருக்கும்.
11. பெருமாள் பிராட்டியிருந்தவிடத்தே வந்து விரோதிகளைக் கிழங்கெடுத்து அவளைக்கைக்கொண்டதுபோல, எம்பெருமான் * ஆவாரார்துணையென்று அலைநீர்க்கடலுளழுந்தும் நாவாய்போல் பிறவிக்கடலுள்நின்று துளங்குமிவர்களிடத்தே வந்து * பொய்ந்நின்றஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக்குடம்புமாகிற விரோதிகளை வேரோடே

களாக்கு நித்யமுக்தர்களோடே ஒருகோவையாக்கும்படி கைக்கொண்டருள்வது...
இங்ஙனே பல பொருள்களுள,

வேதாந்ததேசிகன் இப்பொருள்களையே பெரும்பாலும் திருவுள்ளம்பற்றி:

" दर्पोद्ग्रदशेन्द्रियाननमनोनक्तञ्चराधिष्ठिते
देहेऽस्मिन् भवसिन्धुना परिगते दीनां दशामास्थितः ।
अयत्ने हनुमत्समेन गुरुणा संबोधितार्थस्सुधीः
लङ्कारुद्धविदेहराजतनयान्यायेन लालप्यते ॥ "

[தர்ப்போதக்ரதசேந்த்ரியாநந.....லாலப்யதே.] என்கிற ச்லோகத்தை ஸங்கல்பஸூர்யோதயத்திலே பணித்தருளினார். அவ்வாசிரியர்தாமே ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஆண்டான்வார்த்தையாக அருளிச்செய்ததொன்றுண்டு; அதாவது—(அதில்எட்டாவதான அதிகாரிவிபாகாதிகாரத்தில்—" ஒருமலையில்நின்றும் ஒருமலையில்தாவும் ஸிம்ஹசரீரத்தில் ஜந்துக்களைப்போலே பாஷ்யகாரர் ஸம்ஸாரலங்கநம் பண்ண அவரோடுண்டான குடல்துடக்காலே நாம் உத்தீர்ணராவுதோமென்று முதலியாண்டானருளிச்செய்த பாசுரம் " என்று.

## 24. அனந்தாழ்வான்

எம்பெருமானார் பகவத்விஷய காலக்ஷேபம் நடத்தியருளுகையில் * ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி யென்கிற திருவாய்மொழி நடவா நிற்க, கோஷ்டியில் திருமுன்பேயிருந்த சிஷ்யர்களை நோக்கி 'ஆழ்வார் * திருவேங்கடத் தெழில்கொள் சோதியெந்தை தந்தை தந்தைக்கு ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம் * என்று பாரித்த குறைதீரத் திருவேங்கடமுடையான் பரிஸரத்திலே யிருந்து நித்யகைங்கர்யம் பண்ண விருப்பமுடையார் ஆரேனுமுளரோ?' என்று வினவியருள, * குளிரருவி வேங்கடமாகையாலே எல்லாரும் குளிர்க்கு அஞ்சி விடை கூறாதிருக்க, அனந்தாழ்வான் எழுந்து 'அடியேனுக்கு நியமித்தருளவேணும்' என்றார். அது கேட்டு உகந்த எம்பெருமானார் நீரொருவரே ஆண்பிள்ளை என்று போரவும் கொண்டாடித் தழுவியருளி விடை கொடுத்தருளினார். அதுமுதலாக அனந்தாண் பிள்ளை என்று அவர்க்கு ப்ரஸித்தியாயிற்று. அன்றே அவர் திருமலைக்கு விடைகொண்டு திருவேங்கடமுடையானைத் திருவடிதொழுது திருநந்தவனஞ் செய்து அதற்கு இராமாநுசன் என்று திருநாமஞ் சாத்தி அனேகவிதமான கைங்கரியங்களை அற்புதமாக நடத்திக் கொண்டிருக்கையில் அதை நேரில் கண்டு மகிழவேணுமென்கிற திருவுள்ளம் எம்பெருமானார்க் குண்டாகி பகவத்விஷய காலக்ஷேபத்தை விரைவாக நடத்திச் சாத்தியருளினார்.

பெருமாள்கோயில் திருமலை முதலான சில திருப்பதிகளை ஸேவித்துவரப் பெரிய பெருமாளிடத்தில் விடைபெற்றுக்கொண்டு சிஷ்யவர்க்கங்களுடனே புறப்பட்ட எம்பெருமானார் வழியடைவே திருப்பதிகளை யெல்லாம் தொழுது கொண்டு திருமலையடிவாரத்தே திருப்பதியிற் சேர்ந்து, திருமலையை மிதித்தேறத் திருவுள்ளம் பற்றாமல் கீழேயேயிருந்து

விடுவதாகத் திருவுள்ளம்பற்றி யிருக்கையில் அனந்தாழ்வான் முதலானோர் இதையறிந்து வந்து 'இப்படியும் திருவுள்ளம் பற்றலாமோ ? நாங்களும் இனித் திருமலையைவிட்டு இங்கே தான் படுகாடு கிடக்கவேண்டும் போலும்' என்ன; அதையே திருமலையப்பனுடைய நியமன மாகக்கொண்டு புறப்பட்டுத் திருமலைமேலெழுந்தருளிக் கோனேரியிலேநீராடி அப்பனைக் கண் களாரளவும் நின்று ஸேவித்து அனந்தாழ்வானுடைய திருப்பணிகளையும் கடாக்ஷித்து உள்ளம்பூரித்து * வளர்த்ததனால் பயன்பெற்றேன் வருகவென்று அவரை மிகவுகந்து மூன்று நாள் அவ்விடத்தில் அமுதுசெய்யாமலே யெழுந்தருளியிருந்தார். இங்கு அறியத்தக்க வொருவிசேஷம் ;—

பூதத்தாழ்வார் தமது திருவந்தாதியில் திருவேங்கடமலையை வருணித்து ஒரு பாசுரம் அருளிச் செய்துள்ளார் ;—

**"பெருகுமதவேழம் மாப்பிடிக்கு முன்னின்று, இருகணிள மூங்கில் வாங்கி—அருகிருந்த தேன்கலந்து நீட்டும் திருவேங்கடங் கண்டீர், வான்கலந்த வண்ணன் வரை."** **(75)**

என்பதாம் அது.

இதன் பொருள் யாதெனில்; மதநீர் பெருகப்பெற்ற யானையானது தனது பேடைக்கு இனிய உணவுகொடுத்து அதனை த்ருப்தி செய்விக்க விரும்பி மூங்கில் குருத்தைப் பிடுங்கித் தேனிலே தோய்த்துஅப்பேடையின் வாயிலே பிழிகின்றதாம் ; இப்படிப்பட்ட நிகழ்ச்சிக்கு இடமான திருமலையானது நீலமேக நிறத்தனான எம்பெருமான் உவந்து எழுந்தருளியிருக்குமிடம், என்பதாம். மலைகளில் பெரும்பாலும் இங்ஙனேநிகழ்வது இயல்வாதலால் இயற்கையான அந்நிகழ்ச்சியை ஆழ்வார் எடுத்துக்கூறினர் என்றுகொள்ளலாம்.

ஸ்ரீபதரிகாச்ரமத்து வழியிடையின்கணுள்ள ஒரு திவ்யதேசத்தை வருணிக்கிற திருமங்கையாழ்வாரும் " வரைசெய்மாக்களிறிள வெதிர் வளர் முளை யளை மிகு தேன் தோய்த்துப், பிரசவாரி தன் இளம்பிடிக்கருள் செயும் பிரிதி சென்றடை நெஞ்சே " என்று இங்ஙனே அருளிச் செய்திருக்கின்றாராதலால் மலையை வருணிக்குமிடத்து இங்ஙனே வருணித்தல் கவிமரபு என்றுங்கொள்ளலாம்.

ஆழ்வார்களின் திருவாக்கானது சாமானியமாகக் கவிகளின் போக்கிலே நிர்வஹிக்கத் தகுந்ததன்றே. ஏதேனும் விசேஷார்த்தத்தை உட்கொண்டே அருளிச் செய்வதன்றோ ஆழ்வார்களுடைய வழக்கம். மேலெடுத்துக் காட்டிய பூதத்தாழ்வார் பாசுரத்தில் உறையும் விசேஷார்த்தம் ரஹஸ்யமாக அநுஸந்திக்கப்பட்டு வருவதொன்றும். குறிக்கொண்மின் :—

மேலே விவரித்தபடி எம்பெருமானார் திருவேங்கடமலைக்கு எழுந்தருளியிருக்கையில் அங்குள்ள முதலிகள் பலர் ஸ்வாமியைத் திருவடி தொழுது ' அஸ்மதாதிகளுக்கு ஹிதமாக ஏதேனும் சில அர்த்த விசேஷங்கள் அருளிச் செய்யவேணும் ' என்று [உபந்யாஸ மொன்று செய்தருளுமாறு] வேண்டிக் கொண்டார்கள். அப்போது அவர்களது ப்ரார்த்தனையை நிறைவேற்றத் திருவுள்ளங் கொண்ட எம்பெருமானார், த்வயம் என்கிற மந்த்ராத்னத்தை * அகலகில்லேனிறையும் * என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தோடே ஸமந்வயப்படுத்தி அழகாக உபந்யஸித்தருளுகையில் மூலமந்திரமாகிய திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தின்

பொருளையும் * ஸர்வதர்மாந் இத்யாதி சரம ச்லோகத்தின் பொருளையும் சேர்த்து உபந்ய
ஸித்தருளி ச்ரோதாக்களைப் பரமானந்த பாவசராக்கினர். அப்போது அந்தப் பெருங்குழு
வில் அனந்தாழ்வான் எழுந்து "பூதத்தாழ்வார் இத்திருமலை விஷயமாக அருளிச் செய்திருந்த
ஒரு பாசுரத்தின் உள்ளுறை பொருளை அடியோம் இன்றே அறியப்பெற்றோம்" என்ற பிடிகை
யுடன் "பெருகுமத வேழம்" என்கிற இந்தப் பாசுரத்தை யெடுத்து எம்பெருமானாருடைய
உபந்யாஸ பரமாக ஒருங்கவிட்டு உபந்யஸித்தாராம்.

அப்பாசுரத்தில் "பெருகுமதவேழம்" என்றது எம்பெருமானாரையேயாம். இராமா
நுச நூற்றந்தாதியில் "பண்டரு மாறன் பசுந்தமிழ் ஆனந்தம் பாய்மதமாய் விண்டிட
எங்களிராமானுச முனி வேழம்" என்று அமுதனார் எம்பெருமானாரை ஒரு யானையாகவே
ரூபித்து அருளிச் செய்திருப்பதனால் இது பொருந்தும். யானைக்கும் எம்பெருமானார்க்கும்
பலபடிகளாலே ஸாம்யம் நிர்வஹிக்கலாம்; அது நிற்க.

[மாப்பிடிக்கு முன்னின்று]

யானைக்கு இஷ்டவிஷயமாயிருக்கும்
யானைப் பேடைக்கு 'பிடி' என்று பெயர். எம்பெருமானார்க்கு இஷ்டர்களாயும் ச்ரோதாக்களாயுமிருக்
யானைப் பேடை. அதுபோலே எம்பெருமானார்க்கு இஷ்டர்களாயும் ச்ரோதாக்களாயுமிருக்
கின்ற பக்தர்கள் இங்கு விவக்ஷிதர்கள்; அவர்களுடைய முன்னே நின்று கொண்டு.
(ஸன்னிதியில் பெருமாள் திருமுன்பே செய்தருளின உபந்யாஸமாகையாலே நின்றுகொண்டு
ஸாதித்தபடி.)

[இருகண் இளமூங்கில் வாங்கி.]

இரண்டு கண்டங்களாயிருக்கின்ற
இரண்டு கண்களை யுடைய மூங்கில் என்றது—இரண்டு கண்டங்களாயிருக்கின்ற
பரம போக்யமான த்வயத்தை. "ஷட்பதோயம் த்விகண்ட:" என்று பூர்வ வாக்ய
மென்றும் உத்தரவாக்ய மென்றும் இரண்டு கூறுகளாகவன்றோ த்வயமிருப்பது. மூங்கிலா
னது ரத்னங்கள் பிறக்குமிட மென்று சாஸ்த்ரம் சொல்லும். த்வயமும் மந்த்ர ரத்ன
மென்று ப்ரஸித்தி பெற்றது. ஆகவே 'இருகணிள மூங்கில் வாங்கி' என்றது—த்வயத்தை
உபந்யாஸ விஷயமாகப் பற்றிக்கொண்டு என்றபடி.

[அருகிருந்த தேன்கலந்து நீட்டும்]

த்வயத்தின் இரண்டு பக்கத்திலும் இரண்டு தேன்கள் இருக்கின்றன. "எனக்
கென்றும் தேனும் பாலுமமுதுமாய திருமால் திருநாமம்......நமோ நாராயணமே" என்
கிறபடியே திருமந்த்ரம் ஒரு தேனாகச் சொல்லப்பட்டது. * கீதா முகுந்தமுகபங்கஜசிந்து
துல்யா * என்கிறபடியே, கீதையின் உள்ளீடான சரம ச்லோகம் கண்ணபிரானுடைய
முகாரவிந்தத் தேனாகச் சொல்லப்பட்டது. ஆக இவ்விரண்டு தேன்களும் த்வயத்தின்
இரண்டருகிலும் உள்ளனவாதலால், "அருகிருந்த தேன் கலந்து" என்றது திருமந்
த்ரார்த்தத்தையும் சரம ச்லோகார்த்தத்தையும் கலந்துகொண்டு த்வயார்த்த முபந்யஸித்
தமையைச் சொன்னபடி.

ஆக இங்ஙனே தேவரீர் உபந்யஸித்தருளினபடியை மயர்வற மதிநலமருளப் பெற்ற
வரான பூதத்தாழ்வார் ஏற்கெனவே அகக்கண்ணினால் ஸாக்ஷாத்கரித்தே இப்பாசுரமருளிச்

செய்தருளினுரென்பதில் ஐயமில்லை—என்று அனந்தாழ்வான் இவ்விசேஷார்த்தத்தை வெளியிட்டருளினதாக ரஹஸ்ய ஸம்பிரதாயம்.

திவ்யப்பிரபந்த வியாக்யானங்களில் அனந்தாழ்வானுடைய நிர்வாஹங்களாகச் சில காண்பதுண்டு; பெருமாள்திருமொழியில் * ஊனேறு செல்வப்பதிகத்தில் * எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே *என்றவிடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில்—[" ஏதேனுமாவேனே "] அனந்தாழ்வான் இவ்விடத்துக்கு ' திருவேங்கடமுடையான் தானுகவுமமையும்" என்னும், சேஷபூதர் திரளுக்குப் புறம்பான சேஷியாகிலும் அமையு மென்கை" என்கிற ஸ்ரீஸூக்தி காண்கிறது. குலசேகராழ்வார் ஏதேனுமொருபடி திருமலையில் வாஸத்தையே தமக்குப் பரம உத்தேச்யமாகக்கொண்டு இத் திருமொழி பாடினாராதலால் திருவேங்கடமுடையானுக இருக்கப்பெற்றாலும் திருமலையில் வாஸத்திற்குக் குறையில்லாமையாலே அனந்தாழ்வான் இப்படியருளிச் செய்தாரென்க. சேஷியான திருவேங்கடமுடையானுக்கு அடிமைசெய்து ஸ்வரூபம் பெறக்கடவனான சேஷபூதனுக்கு சேஷியாகவே யிருக்கப்பெறுகை அநிஷ்டமேயாகும்; ஆகவே திருவேங்கடமுடையானுக இருக்கப்பெறுகை ஆழ்வார்க்கு உத்தேச்யமன்று; ஆனாலும் திருமலையில் இருப்பையே உத்தேச்யமாகக்கொண்டு அருளிச்செய்யும் பாசுரமாதலாலும், " மலைமேல் ஏதேனுமாவேனே" என்கிற சொல்தொடைக்கு அஸங்கோசாத் செய்யக்கூடியபொருள் இதுவாதலாலும் அனந்தாழ்வான் ரஸோக்தியாக அருளிச்செய்தபடி.

திருவாய்மொழியில் (6—8—1.) * பொன்னுலகாளீரோ புவனிமுழுதாளீரோ * என்றபாட்டில் * நன்னலப்புள்ளினங்காள் வினையாட்டியேன் நானிரந்தேன் * என்ற விடத்திற்கு—தூதுபோகவேணுமென்று இரக்கிறாளல்லள், உபய விபூதியையும் உங்களுக்கு நான் கொடுக்க நீங்கள் அவற்றை ஆளவேணுமென்று இரக்கிறாள் என்பது ஆசாரியர்கள் திருவுள்ளம்பற்றின பொருள். எம்பெருமானார் கோஷ்டியிலே சிஷ்யர்கள் ஒரு சர்ச்சை பண்ணினார்களாம்—இவள் உபயவிபூதியையும் கொடுத்துவிட்டாளாகில் அவன் வந்தால் தானுமவனும் எங்கே யிருப்பது? என்று. அப்போது அனந்தாழ்வான் பணித்தாராம்— " இக்குருவிகாட்டின விடத்தே" என்று. ரஸிகஸார்வபௌமர்களின் சங்கையும் ஸமாதானமும் பரமபோக்யமாயிருக்குமிறே.

## 25. ஸ்ரீராமநவமியநுபவம்.

ஸ்ரீராமாவதாரமும் சித்திரைமாதத்திலேயாதலால் ஸ்ரீராமசரிதத்தில் ஒன்றிரண்டு பகுதிகளை யீண்டெடுத்து அநுபவிப்போம்.

### ஸ்ரீராமாவதாரம்.

* ஸஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:, அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந: * என்ற ஸ்ரீராமாயண ச்லோகத்தின்படி ஸ்ரீமந்நாராயணன் ஸ்ரீராமபிரானுகத் திருவவதாரம் செய்தது ராவணஸம்ஹாரத்திற்கென்று தெரிந்துகொள்ளு

கிரேமாணுவும், ஸங்கல்பமாத்திரத்தாலே அகில ஜகத் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை அவலீலையாகச் செய்துபோருகின்ற பகவானுக்கு * பொல்லாவரக்கனைக் கிள்ளிக்களைதலாகிற இந்த அற்பகாரியம் ஸங்கல்பலேசமாத்திரத்தினுல் நிறைவேற்றக் கூடியதாயிருக்க, இதற்காக நேரேவந்து பிறந்து பாடுபடவேண்டுமோவென்று விவேகிகள் விமர்சிப்பார்கள். உண்மையில் ராவணஸம்ஹாரத்திற்காகவன்று இவ்வவதாரம். இவ்விஷயத்தில் நம் ஆசார்யர்களின் அபிப்ராயத்தை இங்குச் சுருக்கமாக வெளியிடுவோம். ஸ்ரீவிபீஷணாழ்வான் ஸ்ரீராமகோஷ்டியில் அந்வயிக்கவந்தகாலத்தில் அவனை அங்கீகரிக்கவே கூடாதென்று ஸுக்ரீவமஹாராஜர் வலிதாக ஆக்ஷேபித்தார். ஸ்ரீராமபிரான் அவ்வாக்ஷேபத்தைச் சிறிதும் ஏற்றுக்கொள்ளாமலே "வத்யோயம் வதஞ்சநே" என்று ஒரு நிலையாக நின்றபோதும் மீண்டும் ஸுக்ரீவன் வலிதாக ஆக்ஷேபித்தான். இந்த விபீஷணனை நாம் சேர்த்துக் கொண்டால் நமக்கு மிகுந்த ஆபத்துவிளையும் என்று காட்டி ஆக்ஷேபித்தான். அது கேட்டுப் பெருமாளுக்கு ஒரு ஆவேசம் வந்துவிட்டது. அப்போது தம்மையும்மறந்து ஒரு வார்த்தை அருளிச் செய்தார்; * பிசாசாந் தாநவாந் யக்ஷாந் ப்ருதிவ்யாஞ்சைவ ராக்ஷஸாந், அங்குல்யக்ரேண தாந் ஹந்யாம் இச்சந் ஹரிகணேச்வர." என்கிற ச்லோகம் இந்த ப்ரகரணத்தில் பெருமாள் திருவாக்கில் நின்று வெளிவந்திருக்கின்றது. பூமண்டலம் முழுவதிலுமுள்ள துஷ்டப் பூண்டுகளனைத்தையும் அநாயாஸமாக ஒருநொடிப்பொழுதில் இச்சாமாத்திரத்தினுல் தொலைத்திடுவேன்—என்று அருளிச் செய்திருக்கிற பெருமாளுடைய வார்த்தை உண்மையில் அர்த்தம் மலிந்ததாக இருக்கவேணுமே யொழிய, ஸமயம் வந்தவாறே நம்போல்வார் ஸ்ரீமத்கம்பீரமாகச் சொல்லிப் போருகிற சுஷ்கவார்த்தையாக இருக்கக் கூடியதன்று. இதனுல் ராவணனென்கிற ஒரு புழுவை நசுக்குவதற்காகப் படைதிரட்டிக் கொண்டு வந்தமையில்லை என்று நன்கு தெரிவிக்கப்பட்டதாகிறது.



இவ்வர்த்தத்தைக் கூரத்தாழ்வான் ஸுந்தரபாஹுஸ்தவத்தில் "க்ஷேப்தே: கில தக்ஷிணஸ்ய நிவஸந்" என்கிறச்லோகத்தினுல் வெகு அழகாக அருளிச்செய்தார். அதில், "தஸ்மாத் வநாத்ரீச்வர ஸ்ரீமந்ஸுந்தர! ஸேதுபந்தநமுகா: க்ரீடாஸ் தவாடம்பரம்" என்று முடித்திருப்பது உண்மைப்பொருளுணர்த்தினபடியாகும்.

குரங்குகளின் காலிலே மலையடுத்து ஸமுத்ரசஞ்சனம் பண்ணி ஸேது கட்டி இத்தனையும் செய்யாதொழியில் ராவண ஸம்ஹாரமாகாது என்று நினைப்பார் அறிவிலிகளேயாவர் என்று காட்டினபடி. அபிமுகர்களான பக்தர்களுக்கு வடிவழகைக் காட்டி அவர்களை அகமகிழ்விக்கச்செய்யவும், விமுகர்களான ராவணுதிகளையும் வடிவழகைக்காட்டி வசீகரிக்கப் பார்ப்பதற்குமே காட்டில் பிறந்து படாதன பட்டான் என்று அறுதியிடக் கடவது.

## விச்வாமித்ர யாக ஸம்ரக்ஷணம்.

ஸ்ரீராமாயணத்தில் பாலகாண்டத்தில் பதினெட்டாவது ஸர்க்கத்தில் ஸ்ரீராமபிரானுடைய திருவவதாரம் கூறப்பட்டது. அந்த ஸர்க்கத்தினிடையிலேயே விச்வாமித்திர முனிவன் தசரதசக்கரவர்த்தியிடம் வருகிற செய்தியும் கூறப்பட்டிருக்கின்றது. ஆராய்ச்சித் தலைவர்களின் ஸித்தாந்தத்தின்படி, விச்வாமித்திர முனிவன் தன்னுடைய வேள்வி

காத்தற்பொருட்டு ஸ்ரீராமபிரானைத் தன்னுடன் கூட அனுப்பவேணுமென்று இரக்கவந்த போது ஸ்ரீராமசந்திரனுக்கு வயது பன்னிரண்டென்று அறுதியிடப்பட்டிருக்கின்றது. ஆகவே, பன்னிரண்டு வருஷ காலம் ஸ்ரீராமபிரானுடைய வாழ்நாள் கழிந்த வரலாறுகளை வால்மீகி முனிவர் எவ்வளவோ விரிவாகக் கூறியிருக்கலாம். கண்ணபிரானுடைய பால சேஷ்டிதங்களை முனிவர்களும் ஆழ்வார்களும் மிக விரிவாகப் பேசியுகந்து உள் குழைந்து அநுபவித்துள்ளார்கள்.

"மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்குக் கச்சொடு பட்டைக் கிழித்துக் காம்பு துகிலவை கீறி நிச்சலும் தீமைகள் செய்வாய்" என்றும், "ஆற்றிலிருந்து விளையாடுவோங்களைச் சேற்றால் எறிந்து வளை துகில் கைக்கொண்டு காற்றில் கடியனாய் ஓடி யகம் புக்கு" என்றும், "தேனுகன்பிலம்பன் காளியனென்னுந் தீப்பப்பூடுக ளடங்கவுழக்கி" என்றும் பேசக்கூடிய கண்ணபிரான் சரிதைகளைப் போன்ற சரிதைகள் நம் இராமபிரானுக்கு இல்லையாயினும், "மனத்துக்கினியான்" என்று ஆண்டாள் உகந்து திருநாமம் சூட்டப் பெற்ற இப்பெருமானுக்கும் பல சரிதைகள் மனத்துக்கினியனவாக இளம்பிராயத்திலே நிகழ்ந்தவையிருக்குமே. அவற்றைப்பற்றி இரண்டொரு ஸர்க்கமாவது வால்மீகி முனிவர் இயற்றியிருக்கலாம். ஏன் இயற்றவில்லை என்று அவரை யார் கேட்பது? தேவலோகத்திலே மிக விஸ்தாரமாகவுள்ள ஸ்ரீராமாயணத்தில் அந்த பால்யசேஷ்டிதங்கள் வருணிக்கப்பட்டிருக்க லாம். வால்மீகி ராமாயணத்தில் முதன்முதலாக நாம் அநுபவிக்கக் கூடிய ஸ்ரீராம சரித்திரம் விச்வாமித்ரயாக ஸம்ரக்ஷணமென்பதே.

ஒரு நாள் தசரத சக்ரவர்த்தி சிங்காதனத்தில் வீற்றிருந்து தனது திருக்குமாரர்களின் விவாஹத்தைப் பற்றிப் புரோஹிதருடனும் பந்துக்களுடனும் கூடி ஆலோசித்துக்கொண் டிருக்கையில் விச்வாமித்ர முனிவர் அவ்வரசனைக் காணக் கருதி அவ்விடம் வந்தனர். அம்முனிவரைக் கண்டு மகிழ்ந்த மன்னவன் அவரை நன்கு பூஜித்து, "மாமுனிவரே! புதல் வர்களின் விவாஹத்தைக் குறித்து நான் ஆலோசித்துக்கொண்டிருக்கையில் நீர் தற்செயலாய் வந்தீர்; இதனால் நான் அடையும் ஆனந்தம் அளவற்றது; ஐயனே! நான் உமக்குச் செய்ய வேண்டுவதென்ன? எனது தானத்திற்கு நீரே தகுந்த பாத்திரமாயிருக்கின்றீர்; எனது ஜன் மம் இப்பொழுதுதான் பயன் பெற்றது; நீர் எந்தக் காரியத்தைக் குறித்து இங்கே வந் தீரோ, அதை மொழிந்தீராயின் அதை உமது அனுக்ரஹத்தினால் நிறைவேற்றுகிறேன் ஐயப்படவேண்டா" என்றனன்.

இது கேட்டு முனிவர் மிக மகிழ்ந்து மன்னவனைச் சிறிது புகழ்ந்துவிட்டு பிர புவே! நீ சொன்ன சொல் தவறாதிருக்கவேண்டும்; நான் ஒரு யாகஞ் செய்யத் தொடங்கி தீக்ஷையிலிருக்கின்றேன்; அதற்கு ராக்ஷஸர்களிருவர் மிக இடையூறு செய்கின்றனர். எனது விரதம் வெகுவாய் நடந்தேறி முடிய வேண்டிய தருணத்திலிருக்கின்றது; ஸுபாஹு மாரீசர்களின் உபத்திரவம் பொறுக்கமாட்டாமல் நானிங்கே வந்து சேர்ந்திருக்கிறேன்; அவர்களை நான் சபிக்கலாமென்று பார்த்தாலோ, யாகஞ் செய்யும் அத்தருணத்தில் கோபம் கொள்ளலாகாதல்லவா? ஆகவே உனது மூத்த குமாரனாகிய ராமனை என்னுடன்

அவசியம் அனுப்ப வேண்டும், அவனை நீ சிறு பிள்ளையென்று நினையாதே; ராமன் மஹாத்மாவென்றும் உண்மையான பராக்ரமமுடையனென்றும் நான் அறிவேன்; நானேயன்றி வஸிஷ்டாதி மஹர்ஷிகளும் அறிவார்கள். எப்படியும் எனக்கு நீ ராமனைக் கொடுத்தேயாக வேண்டும். அவனது உதவி எனக்குப் பத்து நாள் வரையிலுமே வேண்டும். அதனால் உனக்கு மிகுந்த க்ஷேமமும் புகழும் உண்டாகும். மனத்தில் கொஞ்சமும் யோசனையும் சோகமும் வேண்டாம்" என்று மொழிந்தனர்.

அதைக் கேட்ட தசரத சக்ரவர்த்தி உடனே கலங்கி வருந்தி மூர்ச்சித்தனன். சிலநாழிகை கழிந்த பின் தெளிந்த அரசன், "மாமுனிவரே! யான் பிறந்து அறுபதினாயிர மாண்டுகள் சென்றபின்பு எவ்வளவோ விரதங்களை யநுஷ்டித்து மிகவும் சிரமப்பட்டு இந்த ராமனை அருமையாகப் பெற்றேன்; அதை நினைத்தாயினும் தேவரீர் இவனை யழைத்துக் கொண்டு போகாமலிருக்கவேணும்; தவிரவும் தேவரீருடைய யாகத்தைக் கெடுக்கின்ற அரக்கர்களோ வீரசூரர்களில் தலைவர்கள்; அவர்களோடு போர்புரிய எனது குழந்தைக்குச் சிறிதும் ஆற்றலில்லை; ஆதலால் தேவரீர் க்ஷமித்தருளவேண்டும்" என்று பலவும் கூறினன்.

பிறகு முனிவர் கோபாவேசம் கொண்டு பேசவே, வஸிஷ்ட முனிவர் அரசனுக்குத் தேறுதல் கூறி ராமனை யனுப்ப இசைவித்தனர். பிறகு விச்வாமித்ரர் ராம லக்ஷ்மணர்களை யழைத்துக் கொண்டு சென்று தம்முடைய வேள்வியை இடையூறகற்றி நிறைவேற்றிக் கொண்டனர்—என்பது கதை.

இங்கே விமர்சிப்போம். விச்வாமித்ர முனிவர் இது வரையில் எவ்வளவோ விரதங்களை அநுஷ்டித்திருக்கிறார். அவர் செய்து முடித்த வேள்விகள் பலபல. அக்காலங்களில் அவர் யாருடைய சகாயத்தைக் கொண்டு தமது விரதத்தை நிறைவேற்றினர். ஒருவருடைய சகாயத்தையும் நாடவில்லை. அன்றியும், அவரைப்போன்ற மற்றும் பல பல முனிவர்களும் ஆரண்யங்களில் பல வேள்விகளைச் செய்தவர்களுண்டு; அவர்களுக்கும் இடையூறுகள் பல நேர்ந்திருக்கக்கூடுமே, அவர்கள் தசரத மன்னவனிடம் வந்து ராமபிரானை யாசித்தார்களென்றில்லை.

இப்படியிருக்க, விச்வாமித்ரர் இச்சமயத்தில் தசரதனிடம் வந்து சிறு பிள்ளையை வேண்டி யழைத்துக்கொண்டு போனதாகக் கதை ஏற்பட்டதற்கு நிதானம் என்ன? என்று ஆராயவேண்டும். அவதார சரித்திரம் முழுவதும் எம்பெருமானுடைய ஸங்கல்ப விசேஷமடியாகவே நிகழ்ந்திருப்பதனால் இந்த சரித்திர ஸங்கடநமும் ஒரு காரணார்த்தமாகவே ஸங்கல்பிக்கப்பட்டிருக்கவேண்டுமென்று தோன்றுகின்றது.

தன் வயிற்றில் பிறந்த பிள்ளையென்று மாத்திரம் நினைத்திருக்கின்ற தசரதனுக்கு இவன் ஸாக்ஷாத் பரம புருஷன் என்பதை உணர்த்தவேணும் என்பது ஒன்று. எம்பெருமான் ஸர்வாத்மநா பாரதந்திரன் என்பதை ஸ்வாநுஷ்டாநத்தினால் பிரகாசப்படுத்திக் கொள்வதே இந்த ப்ரகரணத்திற்கு முக்கியமான ப்ரமேயமாகும்.

விச்வாமித்ர முனிவன்பின்னே விநயம் தோற்றச் செல்லாநின்ற ராம லக்ஷ்மணர்கள் "**இமௌ ஸ்ம முநி சார்தூல! கிங்கரௌ ஸமுபஸ்திதௌ; ஆஜ்ஞாபய யதேஷ்டம்**

வை சாஸநம் கரவாவ கிம்'' என்று சொல்லித் தங்களுடைய அத்யந்த பாரதந்திரியத்தை வெளியிட்டுக்கொண்ட அழகு அநுபவ ரஸிகர்களுடைய நெஞ்சைப் பரவசமாக்கும்.

---

## —ஸ்ரீராமாயணத்தில் ஒருவிசேஷார்த்தம்:

அசோகவனத்தில் கதறுகின்ற பிராட்டியானவள், ''* மமைவ துஷ்க்ருதம் கிஞ்சித் மஹதஸ்தி ந ஸம்சய:, ஸமர்த்தாவபி தௌ யந்மாம் நாவேக்ஷேதே பரந்தபௌ. '' என்றாள். விரோதிகளைத் தொலைத்து என்னை ரக்ஷிக்கைக்குறுப்பான ஆற்றல்படைத்த (ஸ்ரீராம லக்ஷ்மணர்களாகிற) இரண்டு ஆண்புலிகளும் என்னைக் கடாக்ஷியாமலிருக்கிறார்களே, இது என் பாபத்தின்பலனேயன்றோ என்றாள் பிராட்டி. இங்கு ''துஷ்க்ருதம் கிஞ்சித் மஹத்'' என்றிருக்கிறது. கிஞ்சித் என்றால் சிறிது என்றபடி. மஹத் என்றால் பெரிது என்றபடி. ஒரு பாபம் சிறிதாயும் பெரிதாயுமிருக்குமோவென்று விமர்சிக்கவேண்டும். இங்கே சிலர் கூறுகிற அர்த்தமாவது ; கிஞ்சித் என்பதற்கு சிறிது என்றுபொருளல்ல; கிஞ்சித் என்றிவிது (ஏதோ வொன்று) என்று பொருள்பட்டு நிற்கும். மஹத்தான ஏதோ வொரு பாபம் நான் பண்ணியிருக்க வேண்டுமென்று பிராட்டி கூறுவதாகக் கொள்ளலாமென்கிறார்கள்.

அங்ஙனன்றிக்கே, சிறிதாயும் பெரிதாயுமிருக்கிற பாபம் தனக்கு உண்டென்று பிராட்டி கூறுவதாகவே கொள்ளக் குறையில்லை. ஒரு பாபமே சிறிதாயும் பெரிதாயுமிருப்பதாகச் சொல்லுகிறபடியன்று. சிறியதான பாபம் ஒன்று ; பெரியதான பாபம் ஒன்று ஆக இரண்டு பாபங்கள் இங்கே விவக்ஷிதமென்னலாம். பகவத் விஷய அபசாரத்தைச் சிறிய பாபமென்றும், பாகவதவிஷய அபசாரத்தைப் பெரிய பாபமென்றும் சாஸ்த்ரங்கள் சொல்லக் காணாநின்றோம். பிராட்டி திறத்தில் அவை யிரண்டு மெங்ஙனே யென்னில் ; காட்டுக்குப் புறப்படும் ஸமயத்திலே தன்னை உடன்கொண்டு செல்லமாட்டேனென்ற பெருமாளை நோக்கி *கிம் த்வாமந்யத வைதேஹ: பிதா மே மிதிலாதிப:, ராம ஜாமாதரம் ப்ராப்ய ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம் * என்று கடிந்து கூறினள். இங்கே ''ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம்'' என்றது பகவத் விஷயாபசாரம்; இதைத்தான் ''மம கிஞ்சித் துஷ்க்ருதம்'' என்றது.

பெருமாள் மாரீச மாயமான்பின்னே யெழுந்தருளினபோது கபடமான கூக்குரலைக் கேட்ட பிராட்டி இளையபெருமாளை நோக்கி பலவார்த்தைகள் சொல்லிவருகையில் ''அநார்ய கருணாரம்ப ந்ருசம்ஸ குலபாம்ஸந'' என்று தொடங்கி ''மம ஹேதோ : ப்ரதிச்சந்ந : ப்ரயுக்தோ பரதேந வா, தந்ந ஸித்த்யதி ஸௌமித்ரே தவ வா பரதஸ்ய வா'' என்று இளைய பெருமாளையும் பரதாழ்வானையும்பற்றி மிகக் கடுமையாகச் செவி புதைக்கவேண்டும்படி பழித்துக் கூறினது பாகவதாபசாரம். இதைத்தான் ''மம மஹத் துஷ்க்ருதம்'' என்றாளாயிற்று.

பாகவதாபசாரத்தின் மிக்க கொடுமையை ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் ஸ்ரீதேசிகன் *திமிம் கில திமிங்கிலோ கிலதி......நிவ்ருத்திமபி தர்மமத்தி அநகதத்வவிந்நிக்ரஹ : * என்கிற ச்லோகத்தினால் வெகு அழகாக அருளிச் செய்தார்.

## —ஸ்ரீ விபீஷணசரணாகதி.

ஸ்ரீராமாயணத்தில் விபீஷண சரணாகதியென்பது ஒரு சிறந்த ப்ரகரணம். விபீஷணன் ராவணனுக்குப் பலவாறு நன்மைகளை உபதேசித்தும் அவன் கேளாமல் திரஸ்கரித்ததனால் நான்கு அன்பர்களோடுகூட ஆகாயத்திற் கிளம்பி ஸ்ரீராமபிரான் வானர முதலிகளோடு கூட எழுந்தருளியிருந்த இடத்திற்கு நேராக வந்து வானரவீரர்களை நோக்கி 'அடியேனை நீங்கள் இராமபிரானது திருவடிகளுக்கு ஆளாக்கவேணும்' என்று பிரார்த்திக்கையில் அந்த வானர வீரர்கள் அவனிடத்தில் மிக்க அதிசங்கை கொண்டு, ராமகோஷ்டிக்கு அவனால் மறைத்தான அபாயம் விளையுமென்றெண்ணி அவனைச் சேர்த்துக்கொள்ளவே கூடாதென்று இராமபிரானிடத்தில் ப்ரபலமாக ஆக்ஷேபங்கள் செய்ததாகவும், சற்றைப்போது விசாரம் நடந்து, விபீஷணனைச் சேர்த்துக் கொள்ளவே போகிறேன் என்று இராமபிரான் திருவாய் மலர்ந்தருளி அப்படியே அவனைச் சேர்த்துக் கொண்டதாகவும் வரலாறு.

இவ்விதிஹாஸத்தில் நாம் உய்த்துணரவேண்டிய நுட்பங்கள் பலவுண்டு. சிலவற்றை இப்போது எடுத்துக் காட்டுதும்.

விபீஷணாழ்வான் வந்து புகும்போது "* நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணமுபஸ்திதம், ஸர்வலோக சரண்யாய ராகவாய மஹாத்மநே." என்று வானர முதலிகளை நோக்கி மொழிகின்றான். பெருமானை ஸர்வலோக சரண்யனென்று விபீஷணன் ஸந்தேஹமின்றி முடிவில் தெரிந்து கொண்டிருக்கின்றான். இன்னார் இனையாரென்கிற வாசியின்றிக்கே எப்படிப்பட்டவர்களையும் அன்பாகத் திருவுள்ளம் பற்றிக் காத்தருள்பவர் பெருமான் என்னுமிடத்தை நன்றாகத் தெரிந்து கொண்டேயன்றோ விபீஷணன் 'ஸர்வலோக சரண்யாய' என்று ஓலமிடுகிறான். பெருமானுடைய உண்மையான ஸ்வபாவத்தை இங்ஙனே தெரிந்து கொண்டிருக்கும்போது விபீஷணன் நேர்கொடு நேரே பெருமாள் திருவடி வாரத்திலே வந்து விழுந்திருக்கலாமே. அப்போது எவ்விதமான ஆக்ஷேபஸமாதானங்களுக்கும் இடமிராதே! வானர வீரர்கள் பராக்ரமம் காட்டிப் பரிபவித்தலை யொன்றும் அவகாசம் பெற்றிராதே. பெருமான் கட்டுங் காவலுமாக இருக்கிறாரல்லரே. *உத்பாத கதாபாணி: என்று உயரக்கிளம்பின விபீஷணன் நேராக ஸ்ரீராம பாதாரவிந்தங்களிலே வந்து விழுந்து 'அங்கோவடியேற்கு அருளாயுன்னருளே' என்றால் விபீஷணனுடைய அபேக்ஷிதம் மிக எளிதாகத் தலைக்கட்டியிராதோ? வானர வீரர்களை வேண்டுவானேன்? அவர்கள் தடியும் தாம்பு மெடுத்துத் தகர்க்கப் புகுவானேன்? ஒருவிதமான கஷ்டத்திற்கும் அவகாசமில்லாதபடி விபீஷணன் நேராக ஸ்ரீராம பாதங்களில் வந்துவிழுந்து உய்ந்திருக்கலாமே; ஏன் அங்ஙனம் செய்யவில்லை? என்று ஆராய வேண்டுவது அவசியமல்லவா?

ஆராயுமளவில் தேறும் பொருள் என்னென்னில்; கேண்மின். நேராகப் பெருமாள் திருவடிகளிலே புகுவது முறைமையன்று; "வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து" என்கிறார் ஆழ்வார். பாகவதர்களை முன்னிட்டுக் கொண்டே பகவான் திருவடிகளிற் புகவேணும். யானைப்பாகனை முன்னிட்டுக் கொண்டல்லது யானையினருகிற் செல்லவொண்ணாது. "தென்னானாய் வடவானாய் குடபாலானாய் குணபால மதயானாய்!" என்று யானையாகக் கூறப்படுகிற பகவானிடத்தே பாகவதர்களாகிற

## —ஸ்ரீ விபீஷணசரணாகதி.

ஸ்ரீராமாயணத்தில் விபீஷண சரணாகதியென்பது ஒரு சிறந்த ப்ரகரணம். விபீஷணன் ராவணனுக்குப் பலவாறு நன்மைகளை உபதேசித்தும் அவன் கேளாமல் திரஸ்கரித்ததனால் நான்கு அன்பர்களோடுகூட ஆகாயத்திற் கிளம்பி ஸ்ரீராமபிரான் வானர முதலிகளோடு கூட எழுந்தருளியிருக்குமிடத்திற்கு நேராக வந்து வானரவீரர்களை நோக்கி 'அடியேனை நீங்கள் இராமபிரானது திருவடிகளுக்கு ஆளாக்கவேணும்' என்று பிரார்த்திக்கையில் அந்த வானர வீரர்கள் அவனிடத்தில் மிக்க அதிசங்கை கொண்டு, ராமகோஷ்டிக்கு அவனால் மறைத்தான அபாயம் விளையுமென்றெண்ணி அவனைச் சேர்த்துக்கொள்ளவே கூடாதென்று இராமபிரானிடத்தில் பிரபலமாக ஆக்ஷேபங்கள் செய்ததாகவும், சற்றுப்போது விசாரம் நடந்து, விபீஷணனைச் சேர்த்துக் கொள்ளவே போகிறேன் என்று இராமபிரான் திருவாய் மலர்ந்தருளி அப்படியே அவனைச் சேர்த்துக் கொண்டதாகவும் வரலாறு.

இவ்விதிஹாஸத்தில் நாம் உய்த்துணரவேண்டிய நுட்பங்கள் பலவுண்டு. சிலவற்றை இப்போது எடுத்துக் காட்டுதும்.

விபீஷணாழ்வான் வந்து புகும்போது "* **நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணமுபஸ்திதம், ஸர்வலோக சரண்யாய ராகவாய மஹாத்மநே.**" என்று வானர முதலிகளை நோக்கி மொழிகின்றான். பெருமாளை ஸர்வலோக சரண்யனென்று விபீஷணன் ஸந்தேஹ லேசமுமின்றித் தெரிந்து கொண்டிருக்கின்றான். இன்னார் இனையாரென்கிற வாசியின்றிக்கே எப்படிப்பட்டவர்களையும் ரக்ஷ்யராகத் திருவுள்ளம் பற்றிக் காத்தருள்பவர் பெருமாள் என்னுமிடத்தை நன்றாகத் தெரிந்து கொண்டேயன்றோ விபீஷணன் '**ஸர்வலோக சரண்யாய**' என்று ஓலமிடுகிறான். பெருமாளுடைய உண்மையான ஸ்வபாவத்தை இங்ஙனே தெரிந்து கொண்டிருக்கும்போது விபீஷணன் நேர்கொடு நேரே பெருமாள் திருவடி வாரத்திலே வந்து விழுந்திருக்கலாமே. அப்போது எவ்விதமான ஆக்ஷேபஸமாதானங்களுக்கும் இடமிராதே; வானர வீரர்கள் பராக்ரமம் காட்டிப் பரிபவித்தலை யொன்றும் அவகாசம் பெற்றிராதே. பெருமாள் கட்டுங் காவலுமாக இருக்கிறாரல்லரே. ***உத்பபாத கதாபாணி:** என்று உயரக்கிளம்பின விபீஷணன் நேராக ஸ்ரீராம பாதாரவிந்தங்களிலே வந்து விழுந்து 'அடியேற்கு அருளாயுன்னருளே' என்றால் விபீஷணனுடைய அபேக்ஷிதம் மிக எளிதாகத் தலைக்கட்டியிராதோ? வானர வீரர்களை வேண்டுவானேன்? அவர்கள் தடியும் தாம்புமெடுத்துத் தகர்க்கப் புகுவானேன்? ஒருவிதமான கஷ்டத்திற்கும் அவகாசமில்லாதபடி விபீஷணன் நேராக ஸ்ரீராம பாதங்களில் வந்துவிழுந்து உய்ந்திருக்கலாமே; ஏன் அங்ஙனம் செய்யவில்லை? என்று ஆராய வேண்டுவது அவசியமல்லவா?

ஆராயுமளவில் தேறும் பொருள் என்னென்னில்; கேண்மின். நேராகப் பெருமாள் திருவடிகளிலே புகுவது முறைமையன்று; "வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து" என்கிறார் ஆழ்வார். பாகவதர்களை முன்னிட்டுக் கொண்டே பகவான் திருவடிகளிற் புகவேணும். யானைப்பாகனை முன்னிட்டுக் கொண்டல்லது யானையினருகிற் செல்லவொண்ணாது. "தென்னானாய் வடவானாய் குடபாலானாய் குணபாலமதயானாய்!" என்று யானையாகக் கூறப்படுகிற பகவானிடத்தே பாகவதர்களாகிற

பாகனை முன்னிட்டே புகவேணும். இது சிறந்த சாஸ்த்ரார்த்தம். இதனை அனுஷ்டித்துக் காட்டினன் விபீஷணாழ்வான். ஆனது பற்றியே ஆழ்வானென்ற பட்டமும் பெற்றான்.

இங்ஙனே முறை தப்பாமே வந்து புகுந்த விபீஷணன் மீது வானர வீரர்கள் த்ரோஹ புத்தி கொண்டது ஏன்? பரம ஸாத்விகனான விபீஷணனென்பானொருவன் இலங்கையிலுளன் என்பது ஸுக்ரீவ மஹாராஜர்க்குத் தெரியாதா? விபீஷணன் ஸாத்விகனன்றிக்கே அயோக்யனாகவே யிருக்கவுமாம். இருந்தாலென்ன? அவன் ஒரு நால்வருடன் வந்து புகுந்ததனால் ராமகோஷ்டிக்கு என்ன அவத்யம் விளைந்திடும்! பெருமானுடைய வீரம் அறியாதவனோ ஸுக்ரீவன். * **பிசாசாந் தாநவாந் யக்ஷாந் ப்ருதிவ்யாஞ்சைவ ராக்ஷஸாந். அங்குள்யக்ரேண தாந் ஹந்யாம் இச்சந் ஹரிகணேச்வர!.**" என்று பெருமாள் புதிதாக எடுத்துரைக்க வேண்டும்படியோ ஸுக்ரீவனுடைய அறிவிருப்பது. மராமரமேழ் செற்றவன்றே அறிந்திலனோ? அறிந்திருந்தும் எதற்காக அஞ்சி விபீஷணன் மீது படையெடுக்கப் புகுந்தது? என்று ஆராய வேண்டாவா?

ஆராயுமளவில் தேறும் பொருள் இது காண்மின். இதனை நம் வாயால் வெளியிடுவதிற் காட்டிலும் கவிசக்ரவர்த்தியான கம்பர் வாக்கினால் வெளியிடுவது மிக நன்று என நினைக்கிறோம். விபீஷண பரிக்ரஹத்தைப் பற்றின ஆக்ஷேப ஸமாதானங்களெல்லாம் முடிந்த பின்பு பெருமாள் ஸுக்ரீவனுக்குக் கட்டளையிடுவதைக் கம்பர் கூறுகின்றார் ;—

**"ஆதலான் அபயமென்ற பொழுதத்தே அபயதானம்**
**ஈதலே கடப்பாடென்பது, இயம்பினீரென்பால் வைத்த**
**காதலான், இனிவேறெண்ணக் கடவதேன்? கதிரோன் மைந்த!**
**கோதிலாதவனை நீயே என்வயிற் கொணர்தி யென்றான்."**

என்பதாம் அந்தச் செய்யுள்.

இது தன்னில், "**இயம்பினீர் என்பால் வைத்த காதலான் இனி வேறெண்ணக் கடவதேன்?**" என்பது ஸாரமாக நோக்கத்தக்கது. "ஸுக்ரீவா! நீயும் உன்னைச் சேர்ந்தவர்களும் விபீஷணனை அங்கீகரிக்கலாகாதென்று வலிதாக மறுத்ததற்குக் காரணம் நான் அறியேனோ? விபீஷணனிடத்தில் தோஷமிருப்பதாக உண்மையில் நினைத்து நீங்கள் மறுத்தவர்களல்லீர்; என்னிடத்தில் நீங்கள் வைத்திருக்கின்ற காதலுண்டே, அது எல்லை கடந்தது. அஸ்தானே பய சங்கை பண்ணுவதற்குக் காரணமான அந்தக் காதலின் மிகுதியினால் மறுத்துரைத்தீர்கள்த்தனை. இத்தனை ப்ரேமம் நீங்கள் என்பால் கொண்டிருப்பது [illegible]வும் உணர்கின்றேன்" என்று விரிவுபட இராகவன் திருவாய் மலர்ந்தருளியதைக் கம்பர் ஸூத்ரம் போல் அமைத்திருக்கின்ற அழகு என்னே!

பகவானிடத்திலே கொண்ட காதல் பாகவத சிகாமணிகளிடத்தே அதிசங்கையை விளைக்குமோ? என்று கேட்க வேண்டா, பரதாழ்வான் பரம பக்தி தலையெடுத்துப் பெருமாளைத் திருப்பி யெழுந்தருளப் பண்ணிக்கொண்டு போகச் சித்திரகூடம் நோக்கிப் பரிவாரங்களுடனே வரும்போது குஹப்பெருமாளிடத்தில் நடந்த செய்திகளை நன்கு அறிவீர்களே! (அதைச்சிறிது விவரிப்போம்) குஹப்பெருமாள் இராமபிரானுடைய சக்தி விசேஷங்

பாகனை முன்னிட்டே புகவேணும். இது சிறந்த சாஸ்த்ரார்த்தம். இதனை அநுஷ்டித்துக் காட்டினன் விபீஷணாழ்வான். ஆனது பற்றியே ஆழ்வாரென்ற பட்டமும் பெற்றான்.

இங்ஙனே முறை தப்பாமே வந்து புகுந்த விபீஷணன் மீது வானர வீரர்கள் த்ரோஹ புத்தி கொண்டது ஏன்? பரம ஸாத்விகனான விபீஷண னென்பானொருவன் இலங்கையிலுளன் என்பது ஸுக்ரீவ மஹாராஜர்க்குத் தெரியாதா? விபீஷணன் ஸாத்விகனன்றிக்கே அயோக்யனாகவே யிருக்கவுமாம். இருந்தாலென்ன? அவன் ஒரு நால்வருடன் வந்து புகுந்ததனால் ராமகோஷ்டிக்கு என்ன அவத்யம் விளைந்திடும்! பெருமாளுடைய வீரம் அறியாதவனோ ஸுக்ரீவன். * பிசாசாந் தாநவாந் யக்ஷாந் ப்ருதிவ்யாஞ்சைவ ராக்ஷஸாந். அங்குள்யக்ரேண தாந் ஹந்யாம் இச்சந் ஹரிகணேச்வர!.'' என்று பெருமாள் புதிதாக எடுத்துரைக்க வேண்டும்படியோ ஸுக்ரீவனுடைய அறிவிருப்பது. மராமரமேழ் செற்றவன்றோ அறிந்திலனோ? அறிந்திருந்தும் எதற்காக அஞ்சி விபீஷணன் மீது படையெடுக்கப் புகுந்தது? என்று ஆராய வேண்டாவா?

ஆராயுமளவில் தேறும் பொருள் இது காண்மின். இதனை நம் வாயால் வெளியிடுவதிற் காட்டிலும் கவிசக்ரவர்த்தியான கம்பர் வாக்கினால் வெளியிடுவது மிக நன்று என நினைக்கிறோம். விபீஷண பரிக்ரஹத்தைப் பற்றின ஆக்ஷேப ஸமாதானங்களெல்லாம் முடிந்த பின்பு பெருமாள் ஸுக்ரீவனுக்குக் கட்டளை யிடுவதைக் கம்பர் கூறுகின்றார் :—

" ஆதலான் அபயமென்ற பொழுதத்தே அபயதானம்
ஈதலே கடப்பாடென்பது, இயம்பினீரென்பால் வைத்த
காதலான், இனிவேறெண்ணக் கடவதேன்? கதிரோன் மைந்த!
கோதிலாதவனை நீயே என்வயிற் கொணர்தி யென்றான்.''

என்பதாம் அந்தச் செய்யுள்.

இது தன்னில், " இயம்பினீர் என்பால் வைத்த காதலான் இனி வேறெண்ணக் கடவதேன்?'' என்பது ஸாரமாக நோக்கத்தக்கது. " ஸுக்ரீவா! நீயும் உன்னைச் சேர்ந்தவர்களும் விபீஷணனை அங்கீகரிக்கலாகாதென்று வலிதாக மறுத்ததற்குக் காரணம் நான் அறியேனோ? விபீஷணனிடத்தில் தோஷமிருப்பதாக உண்மையில் நினைத்து நீங்கள் மறுத்தவர்களல்லீர்; என்னிடத்தில் நீங்கள் வைத்திருக்கின்ற காதலுண்டே, அது எல்லை கடந்தது. அஸ்தாநே அபாய சங்கை பண்ணுவதற்குக் காரணமான அந்தக் காதலின் மிகுதியினால் மருண்டு மறுத்தீர்களத்தனை. இத்தகைய பரமப்ரேமம் நீங்கள் என்பால் கொண்டிருப்பது பற்றிச் சாலவும் உவக்கின்றேன்'' என்று விரிவுபட இராகவன் திருவாய் மலர்ந்தருளியதைக் கம்பர் ஸூத்ரம் போல் அமைத்திருக்கின்ற அழகு என்னே!

பகவானிடத்திலே கொண்ட காதல் பாகவத சிகாமணிகளிடத்தே அதிசங்கையை விளைக்குமோ? என்று கேட்க வேண்டா; பரதாழ்வான் பரம பக்தி தலை யெடுத்துப் பெருமானைத் திருப்பி யெழுந்தருளப் பண்ணிக்கொண்டு போகச் சித்திரகூடம் நோக்கிப் பரிவாரங்களுடனே வரும்போது குஹப்பெருமாளிடத்தில் நடந்த செய்திகளை நன்கு அறிவீர்களே! (அதைச்சிறிது விவரிப்போம்) குஹப்பெருமாள் இராமபிரானுடைய சக்தி விசேஷங்

களையும் நன்கறிந்தவர்; பரதாழ்வானுடைய பக்தியின் கனத்தையும் நன்கறிந்தவர். அன்னவர் அப்பரதாழ்வானை நோக்கி விபரீதமாகச் சங்கித்து,

" அஞ்சன வண்ண னென்னுருயிர் நாயகனுளாமே
வஞ்சனையாலர செய்திய மைந்தரும் வந்தாரே
செஞ்சரமென்பன தீயுமிழ்கின்றன செல்லாவோ
உஞ்சிவர் போய்விடின் நாய்க்குகனென்றெனை யோதாரோ.
ஆழநெடுந்திரை யாறு கடந்திவர் போவாரோ
வேழ நெடும்படைகண்டு விலங்கிடும் வில்லாளோ
தோழமை யென்றவர் சொல்லிய சொல்லொரு சொல்லன்றோ
ஏழைமை வேடனிறந்தில னென்றெனை யேசாரோ." (கம்பர்)

என்கிறபடியே அதிப்ரவ்ருத்திகள் செய்யப் பார்த்தது எதனாலே? பெருமாள்மீது கொண்ட காதலின் மிகுதியாலன்றோ.

உள்ளத்தை உள்ளபடி உணரவல்ல யோகிகளில் தலைவரான பரத்வாஜ மாமுனி வரும் பரதனைப் பார்த்து * கச்சிந்ந துஷ்டோ வ்ரஜஸி ராமஸ்யாக்லிஷ்ட கர்மண: * [பரதா! உன்னைப் பார்த்தால் எனக்கு மிகவும் அதிசங்கை உண்டாகிறதே; இராமனுக்கு ஏதோ தீங்கிழைக்கப் போகிறாய் போலே தோன்ற நின்றாயே. அந்தோ! இராமன் ஒருவர்க்கும் ஒரு தீங்கும் இழைப்பவனல்லனே; அன்னவன் திறத்து நீ தீங்கிழைக்க நினைக்கவும் தகாதே; ருஜுவான புத்தியுடன் செல்லுகின்றாயா?] என்று கேட்டிருக்கின்றார். ஒரு யோகிச்ரேஷ்டர் இப்படி அஸ்தாநே கலங்கினாரென்றால் காதலின் கனமே யன்றோ இதற்குக் காரணமாக வேண்டும்.

அயர்வறு மமரர்க ளென்று போற்றப்பட்ட நித்ய ஸூரிகளுக்கும் இங்ஙனே அஸ்தாநே அபாய சங்கையுண்டு. "ஹாவு ஹாவு ஹாவு" என்கிற ஸாமகான கோஷத்தைக் கேட்கும் திருவனந்தாழ்வான் அந்த ஸாமகோஷத்தை அஸுர ராக்ஷஸர்களின் கோலாஹலமென்று மருண்டு மயங்கிச் சீறி அழலை உமிழ்கின்றானென்று திருமழிசைப் பிரான் தமது உட்கண்ணினால் கண்டு பேசுகின்றார்;—"ஆக்கு ஆரவாரம் அது கேட்டு அழலுமிழும் பூங்காரரவு" என்பது அவ்வாழ்வாருடைய பாசுரம். பட்டரும் ஸ்ரீ குணரத்ந கோசத்தில்—" ஸ்நேஹாத் அஸ்தாநரக்ஷா வ்யஸநிபிரப்யுத் சார்ங்க சக்ராஸிமுக்யை: ஆநந்தைகார்ணவம் ஸ்ரீ:! பகவதி! யுவயோராஹுராஸ்தாநரத்நம்" என்கிறார்—பரமபதத்தில் பஞ்சாயுதாழ்வார்களும் ப்ரேமத்தாலே கலங்கிக் காப்பிட நிற்பர்களென்கிறது இதில்.

ஆகவே விபீஷணாழ்வான் திறத்து ஸுக்ரீவ மஹாராஜப்ரப்ருதிகள் கலங்கினது கூடும். அது ப்ரேமத்தின் மிகுதியாலத்தனை என்கிற நுட்பம் இங்கு அறியக் கிடக்கின்றது.

வானர வீரர்கள் எவ்வளவு தான் ஆக்ஷேபித்தாலென்ன? இதை இராமபிரான் பொருள் படுத்த வேணுமோ? அவர்களுடைய ஆக்ஷேப மொழிகளைச் சிறிதும் செவியேற்காமலே 'ஹாய்! விபீஷணா!' என்று சடக்கென அழைத்துக் கொள்ளலாகாதா? 'அங்கதனே! நீ என்ன சொல்லுகிறாய்? சரபனே! நீ என்ன கூறுகின்றாய்? ஜாம்பவானே! நீ என்ன

இயம்புகின்றாய்?' என்றிப்படி இவ்வொரு தூஷணையும் கேட்டுக் கொண்டு கிடக்கவேணுமா? அந்தக் காலதாமதம் விபீஷணனுக்குப் புண்ணிற் புளிப்பெய்தா லொக்குமே; பெருமாள் திருவாக்கிலிருந்து என்ன கட்டளை வெளிவரப்புகுகின்றதோ! என்று அவன் குடல் குழம்பி நிற்கும்படியாக இவ்வொரு காலக்ஷேபம் செய்தது ஏன்? என்று ஆராய வேண்டும்.

எம்பெருமான் ஆச்ரித பாரதந்த்ரியமே வடிவெடுத்தவனாகையாலே எதையும் ஸ்வதந்திரனாகச் செய்ய விரும்பாமல் அடியார்களோடு ஒருமிடறாகக் கலந்து செய்வதே கடமையென்று விரதங் கொண்டவனாதலால், அத்தகைய தனது விரதத்தையும் வழுவாது காட்டுதல் இங்கு அறியத்தக்க சாஸ்த்ரார்த்தம். அங்ஙனே அடியவர்களோடு கூடிக் கலந்து பெருமாள் ஒரு நிர்த்தாரணம் வெளியிடும்போது மிகவும் அற்புதமான வொரு சாஸ்த்ரார்த்தத்தை வெளியிட்டிருக்கின்றார். அஃது என்னென்னில்;—

விபீஷணன் துஷ்டனாகையால் அவன் அங்கீகரிக்கத் தக்கவனல்லன்—என்றார்கள் ஸுக்ரீவாதிகள். விபீஷணன் துஷ்டனல்லனாகையாலே அங்கீகரிக்கத் தகுந்தவனே என்றார் திருவடி. ஆக இங்ஙனே விளைந்த இரண்டு பக்ஷங்களையும் கண்டித்தார் பெருமாள். இரண்டு பக்ஷங்களையும் எங்ஙனே கண்டித்தாராக முடியும்? திருவடியின் பக்ஷத்தைத் தழுவியே யன்றோ விபீஷணனை அங்கீகரித்திருக்கின்றார் என்று கேள்வி பிறக்கும். விஷயம் அதுவன்று. இவனை அங்கீகரிக்கலாகாதென்று ஸுக்ரீவாதிகள் கூறியதைக் கண்டித்தது நிர்விவாதம். திருவடியின் கூற்றாவது—"இவன் அதுஷ்டனாகையாலே அங்கீகரிக்கத்தக்கவன்" என்பது. இதில் அதுஷ்டனாகையாலே என்கிற காரணோக்தியானது பெருமாள் திருவுள்ளத்திற்கு இசையாதது. * தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத் அகர்ஹிதம் * என்கிற பெருமாள் திருவாக்கானது திருவடியின் பக்ஷத்திற்கு [ஏகதேசத்திற்கு]க் கண்டனமாக நிற்கின்றது. சரணாகதரான குற்றவாளரை அங்கீகரிப்பதே நலம் என்கிற பெருமாள் திருவுள்ளம் வெளியாயிற்று. இங்ஙனே பல சாஸ்த்ரார்த்தங்கள் பொதிந்து நிற்குமிடம் விபீஷண சரணாகதி ப்ரகரணம்.

## ஸ்ரீராமாயணத்தில் ஒரு சிறிய சங்காபரிஹாரம்.

வால்மீகி ராமாயணத்தில் கிஷ்கிந்தா காண்டத்தில் ஐம்பத்து நான்காவது ஸர்க்கத்தில் அங்கதனுடைய ப்ராயோபவேச முயற்சியை மறுத்துக் கூறுகின்ற மாருதியானவர் "தஸ்யாபத்யஞ்ச நாஸ்த்யந்யத் தஸ்மாத் அங்கத! கம்யதாம்" என்று சொல்லியிருக்கிறார். இதன் கருத்து யாதெனில், அங்கதா! ஸுக்ரீவனுடைய கட்டளையின்படி ஸீதாபிராட்டியைக் கண்டுபிடித்து வெற்றியுடன் திரும்பிப் போகமாட்டாத நம்மை ஸுக்ரீவன கொலை செய்துவிடுவான் என்று நீ ஏன் அஞ்சுகின்றாய்? ஒருகாலும் ஸுக்ரீவன் அப்படி கொடுந்தொழில் புரியமாட்டான். அவனுக்கு நீ தவிர வேறு புத்திரனுமில்லை; உன்னையே அவன் சொந்த மகனாகப் பாவித்து அன்பு பாராட்டி யிருப்பதனால் அவனைப்பற்றி நீ அஞ்சவேண்டா; உனக்கே அவன் பட்டம் கட்டுவான்; இங்கே தற்கொலை செய்துகொள்ள வேண்டா: ஊருக்குத் திரும்பிப் போகலாம்—என்பதாம். இதனால் ஸுக்ரீவனுக்கு வேறு மகனில்லை யென்பது நிஸ்ஸந்தேஹமாகக் காட்டப்பட்டது.

இங்ஙனம் சொல்ல மாருதியை நோக்கி மறுமொழி கூறுகின்ற அங்கதன் அடுத்த ஸர்க்கத்தில் (55—8) "ராஜ்யே புத்ர: ப்ரதிஷ்டாப்ய: ஸகுணோ நிர்குணோऽபி வா, கதம் சத்ருகுலீநம் மாம் ஸுக்ரீவோ ஜீவயிஷ்யதி" என்று கூறியிருக்கிறான். ஸுக்ரீவன் தன் மகனுக்கு ராஜ்யத்தில் அரசுரிமை கொடுப்பதை விட்டு சத்ருவின் புதல்வனை எனக்கு ஏன் கொடுப்பான்? என்பது இந்த ச்லோகத்தின் கருத்தாதலால் இவை பரஸ்பர விருத்தமாக இருக்கின்றனவே; ஸுக்ரீவனுக்குப் புத்திரன் கிடையாதென்று மாருதி சொல்லியிருக்கிறார்; புத்திரன் உண்டென்று அங்கதன் வார்த்தையினால் விளங்குகின்றது; இந்த விரோதத்தைப் பரிஹரிப்பதெங்ஙனம்? என்று சிலர் கேட்பதுண்டு.

(பரிஹாரம்) இங்கு விரோதமே கிடையாது. அங்கதன் வார்த்தையினால் ஸுக்ரீவனுக்கு மகனிருப்பதாக விளங்குகின்றதென்று கொள்ள இடமில்லை. "வயிற்றில் பிறந்த பிள்ளையாக இருந்தால், அவன் குணவானோ நிர்க்குணனோ எப்படியிருந்தாலும் அவனுக்கு ராஜ்யம் அளிக்கலாகும்; நானோ ஸுக்ரீவனுக்கு ஔரஸபுத்திரனல்லேன்! விரோதியின் புதல்வனுமாயிருக்கிறேன். இப்போது குணமற்றவனுமாய்விடுகிறேன். இப்படிப்பட்ட என்னை அவன் எதுக்கு ஆதரிப்பான்" என்பதே அங்கதனுடைய வார்த்தையின் கருத்தாதலால் விரோதத்திற்கு உதயமேயில்லையென்று கண்டு கொள்வது.



## அபூர்வமான ஸ்ரீராமாயணக் கதையொன்று.

திருவாய்மொழியில் (1—5—5) * மானேய் நோக்கி மடவாளை * என்னும் பாசுரத்தில் "கூனே சிதைய உண்டை வில் நிறத்தில் தெறித்தாய் கோவிந்தா!" என்ற விடத்திற்கு வியாக்கியானமருளிச் செய்யாநின்ற நம்பிள்ளை, க்ருஷ்ணாவதாரத்தில் "நாறிய சாந்தம் நமக்கிறை நல்கென்னத், தேறி யவளும் திருவுடம்பிற் பூச, ஊறிய கூனினை உள்ளே யொடுங்க, அன்றேற வுருவினாய்!" என்கிறபடியே நடந்ததான கூனி கூன் நிமிர்த்த வரலாற்றை முந்துற முன்னம் அர்த்தமாக அருளிச் செய்து, பிறகு பக்ஷாந்தரமாக ராமாவதார கதையொன்றை அர்த்தமாக அருளிச்செய்கிறார். "வநவாஸ ஹேது பூதையான குப்ஜையைச் சொல்லிற்றாய், பால்யத்திலே பெருமாள் சுண்டுவிற்கொண்டு திரியா நிற்க லீலாரஸமநுபவித்தாரென்றுமொன்று; அத்தைப்பற்றிச் சொல்லிற்றாகவுமாம்" என்பது ஈடு முப்பத்தாறாயிரப்படி ஸ்ரீஸூக்தி. ராமாவதாரத்தில் இங்ஙனே யொரு சரிதை நடந்ததாக எங்கே கூறப்பட்டுள்ளது? என்று பலரும் வினவுவதுண்டு;

(விடை) வடமொழிப் புராணங்களில் எந்த புராணத்தில் எந்த இடத்தில் இக்கதை கூறப்பட்டிருக்கின்றதென்பது நம்முடைய ஆராய்ச்சிக்குப் புலனாகவில்லை. வால்மீகி ராமாயணத்தில் இஃது இல்லையென்பது அனைவருமறிந்ததாகும். கம்ப ராமாயணத்தில் இக்கதை கூறப்பட்டிருக்கின்றது. வாலியின் வதமான பின்பு இராமபிரான் சுக்ரீவனுக்கு முடி சூட்டி அவனுக்குச் சில ஹிதோபதேசங்கள் செய்யுமிடையில் [கிட்கிந்தா காண்டத்து அரசியற் படலத்தில்]

இங்ஙனம் சொன்ன மாருதியை நோக்கி மறுமொழி கூறுகின்ற அங்கதன் அடுத்த ஸர்க்கத்தில் (55—8) "ராஜ்யே புத்ர: ப்ரதிஷ்டாப்ய: ஸகுணோ நிர்க்குணோऽபி வா, கதம் சத்ருகுலீநம் மாம் ஸுக்ரீவோ ஜீவயிஷ்யதி" என்று கூறியிருக்கிறான். ஸுக்ரீவன் தன் மகனுக்கு ராஜ்யத்தில் அரசுரிமை கொடுப்பதை விட்டு சத்ருவின் புதல்வனை எனக்கு ஏன் கொடுப்பான்? என்பது இந்த ச்லோகத்தின் கருத்தாதலால் இவை பரஸ்பர விருத்தமாக இருக்கின்றனவே; ஸுக்ரீவனுக்குப் புத்திரன் கிடையாதென்று மாருதி சொல்லியிருக்கிறார்; புத்திரன் உண்டென்று அங்கதன் வார்த்தையினால் விளங்குகின்றது; இந்த விரோதத்தைப் பரிஹரிப்பதெங்ஙனம்? என்று சிலர் கேட்பதுண்டு.

(பரிஹாரம்) இங்கு விரோதமே கிடையாது. அங்கதன் வார்த்தையினால் ஸுக்ரீவனுக்கு மகனிருப்பதாக விளங்குகின்றதென்று கொள்ள இடமில்லை. "வயிற்றில் பிறந்த பிள்ளையாக இருந்தால், அவன் குணவானோ நிர்க்குணனோ எப்படியிருந்தாலும் அவனுக்கு ராஜ்யம் அளிக்கலாகும்; நானோ ஸுக்ரீவனுக்கு ஔரஸபுத்திரனல்லேன்! விரோதியின் புதல்வனாயுமிருக்கிறேன். இப்போது குணமற்றவனாயுமாய்விடுகிறேன். இப்படிப்பட்ட என்னை அவன் எதுக்கு ஆதரிப்பான்" என்பதே அங்கதனுடைய வார்த்தையின் கருத்தாதலால் விரோதத்திற்கு உதயமேயில்லையென்று கண்டு கொள்வது.

## அபூர்வமான ஸ்ரீராமாயணக் கதையொன்று.

திருவாய்மொழியில் (1—5—5) * மானேய் நோக்கி மடவாளை * என்னும் பாசுரத்தில் "கூனே சிதைய உண்டை வில் நிறத்தில் தெறித்தாய் கோவிந்தா!" என்றவிடத்திற்கு வியாக்கியானமருளிச் செய்யா நின்ற நம்பிள்ளை, க்ருஷ்ணாவதாரத்தில் "நாறிய சாந்தம் நமக்கிறை நல்கென்னத், தேறி அவளும் திருவுடம்பிற் பூச, ஊறிய கூனினை உள்ளே யொடுங்க, அன்றேற வுருவினாய்!" என்கிறபடியே நடந்ததான கூனி கூன் நிமிர்ந்த வரலாற்றை முந்துற முன்னம் அர்த்தமாக அருளிச் செய்து, பிறகு பக்ஷாந்தரமாக ராமாவதார கதையொன்றை அர்த்தமாக அருளிச்செய்கிறார். "வநவாஸ ஹேதுபூதையான குப்ஜையைச் சொல்லிற்றாய், பால்யத்திலே பெருமாள் சுண்டுவிற்கொண்டு திரியா நிற்க விலாஸ மநுபவித்தாரென்றுமுண்டு; அத்தைப்பற்றிச் சொல்லிற்றாகவுமாம்" என்பது ஈடு முப்பத்தாறாயிரப்படி ஸ்ரீஸூக்தி. ராமாவதாரத்தில் இங்ஙனே யொரு சரிதை நடந்ததாக எங்கே கூறப்பட்டுள்ளது? என்று பலரும் வினவுவதுண்டு;

(விடை) வடமொழிப் புராணங்களில் எந்த புராணத்தில் எந்த இடத்தில் இக்கதை கூறப்பட்டிருக்கின்றதென்பது நம்முடைய ஆராய்ச்சிக்குப் புலனாகவில்லை. வால்மீகி ராமாயணத்தில் இது இல்லையென்பது அனைவருமறிந்ததாகும். கம்ப ராமாயணத்தில் இக்கதை கூறப்பட்டிருக்கின்றது. வாலியின் வதமான பின்பு இராமபிரான் சுக்ரீவனுக்கு முடி சூட்டி அவனுக்குச் சில ஹிதோபதேசங்கள் செய்யுமிடத்தில் [கிஷ்கிந்தா காண்டத்து அரசியற் படலத்தில்]

"சிறியரென்றிகழ்ந்து நோவு செய்வன செய்யல் மற்றிந்
நெறியிகந்து யானோர் தீமையிழைத்தலாலுணர்ச்சி நீண்டு
குறியதா மேனியாய கூனியால் குவவுத்தோளாய்!
வெறியன வெய்தி நொய்தின் வெந்துயர்க் கடலின் வீழ்ந்தேன்."

என்பது பெருமாளுடைய பாசுரமாக அமைக்கப்பட்டிருக்கின்றது. இராமன் சிறுவனாயிருந்த காலத்தில் தனது கையில் சிறு வில்லும் மண்ணுண்டையுங் கொண்டு விளையாடி வருகையில் விற்கொண்டு எய்த உண்டை மந்தரை யென்னுங் கூனியின் முதுகின் புறத்தே தெறிக்க, அவள் தனது கூனுடைமையை இராமன் இங்ஙனம் பரிஹஸித்தனனென்று தவறாகக் கருதி மனம் வருந்தி அவன்மேற் சினங்கொண்டு, ராஜபுத்திரனாகையாலே அப்பொழுது ஒன்றும் செய்யமாட்டாமற் சென்று தனக்கு வாய்க்குந் தருணம் நோக்கிக் கறுக் கொண்டிருந்து, பின்பு தசரதன் இராமபிரானுக்கு முடிசூட்ட நிச்சயித்ததை உணர்ந்தவளவில் கோபதாபம் மிக்கவளாகி, அதற்கு எப்படியாவது தான் தடை செய்ய வேண்டுமென்று நிச்சயித்து, கைகேயிக்குக் கலகஞ் செய்து அவள் மனத்தை மாற்றி அவளைக் கொண்டு இராம பட்டாபிஷேகத்தைத் தவிர்த்து அப்பெருமானை வனம் புகுவித்தனள்—என்கிற இதிஹாஸம் மேற்குறித்த கம்பர் செய்யுளிற் பொதிந்துள்ளது. அவர் ஒரு வடமொழிப் புராணத்தின் ஆதாரங் கொண்டே கூறியிருத்தல் வேண்டும்.

---

## 8. வைகாசி மாதம்.

ஆழ்வார்களுள் தலைவரான நம்மாழ்வாரும், ஆசாரியர்களுள் மஹநீயரான பட்டரும் இம்மாதத்தில் திருவவதரித்தவர்கள். அடைவே விசாகமும் அநுஷமும் இவர்களது திருநக்ஷத்ரங்கள்.

### 26. நம்மாழ்வார்.

காரிமாறன், குருகூர்ச்சடகோபன், வகுளாபரணன், மகிழ்மாலைமார்பினன், ஸ்ரீசடாரி, ப்ரபந்நஜநகூடஸ்தர்...இவைமுதலான திருநாமங்களும் இவர்க்குள்ளன. ஆழ்வார்களுள் இவர் ஐந்தாமவராகத் தோன்றினரெனினும் வைபவவிசேஷங்களினால் இவரே முதன்மைபெற்றவர். இவர் அவயவியென்றும், மற்றையாழ்வார்கள் இவர்க்கு அவயவபூதர்களென்றும் ஸ்ரீவைஷ்ணவபரமாசார்யர்களால் கொள்ளப்பட்டிருக்கின்றது. ஒரு காலவிசேஷத்தில் திவ்யப் பிரபந்தங்களெல்லாம் லோபமடைந்திருக்கையில், ஆசார்யபரம்பரையில் தலைவரான ஸ்ரீமந்நாத முனிகள் இவ்வாழ்வார் விஷயமாக மதுரகவிகள் அருளிச் செய்திருந்த * கண்ணிநுண்சிறுத்தாம்பு பிரபந்தத்தை நியமத்துடன் ஜபித்து யோகதசையிலே இவரை ஸாக்ஷாத்கரித்து இவர் முகமாகவே நாலாயிரதிவ்யப் பிரபந்தங்களையும் உபதேசிக்கப்

பெற்றார். ஆனதுபற்றியே இவருடைய வாழித்திருநாமத்தில் "நாதனுக்கு நாலாயிர முரைத்தான் வாழியே" என்று அநுஸந்தானம் செய்யப்பட்டு வருகின்றது.

உலகில் பயிர்செய்பவன் தான் செய்யும்பயிர் பழுதுபட்டாலும் சோம்பிக் கைவாங்காமல் பின்னையும் க்ருஷியையே பண்ணுமாபோலே கல்பந்தோறும் ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணிப் போராநின்ற எம்பெருமான் அந்த ஸ்ருஷ்டி ஸபலமாகாமலிருந்தும் சிறிதும் விரக்தியடையாமல் என்றேனுமொருநாள் பலிக்கவேபலிக்குமென்று உகந்து ஸ்ருஷ்டியையே பண்ணிக் கொண்டுவந்தும், படைத்த அந்த ஜகத்தில் அநுப்ரவேசித்தும், அறியவேண்டிய அர்த்தங்களையெல்லாம் அறிவிக்குமதான சாஸ்த்ரங்களையுபதேசித்தும், * உறங்குவான் போல் யோகு செய்தபெருமான் * என்கிறபடியே நித்ராமுத்ரையாலே ஜகத்ரக்ஷணை சிந்தைபண்ணியும், சிந்தித்தவுபாயத்திற்குத் தகுதியாக * மனிசரும் மற்றும் முற்றுமாய் மாயப்பிறவி பிறந்த * என்கிறபடியே மத்ஸ்யாதி யோனிகளிலே கண்காணவந்து பிறந்தும் 'எனக்கு அடிமை யாவாருண்டோ' என்று இதுவே காரியமாகத் தேடித்திரியாநிற்க, ஐயோ! ஒருவரும் அடிமைக்கிசைந்துவந்து அவனுடைய க்ருஷியை ஸபலமாக்கிற்றிலர். சிற்றின்பங்களிலே ஆழ்ந்து அழுந்திவருந்துவதே உலகவியற்கையாக இருந்தது. இவ்வுலகவியற்கையைமாற்றி ஸம்ஸாரி சேதநர்களைத் தம்பக்கலில் ஈடுபடுத்துவதற்குத் தன்னாலாகாதென்றும், ம்ருகத்தைக் கொண்டே ம்ருகத்தைப்பிடிப்பது போலே ஸம்ஸாரிகளி லொருவரைக் கொண்டே ஸம்ஸாரிகளை வலைப்படுத்திக் கொள்ள வேணுமென்றும் நிச்சயித்து, அப்படிப்பட்ட அதிகாரியைத் தேடுகையில், *அன்பொடு தென்திசைநோக்கி* என்கிறபடியே தனது அன்பார்ந்த நோக்குக்குப் பள்ளமடையான தென்திசையிலே இவ்வாழ்வார்மேலே தன்னுடைய கடாக்ஷாம்ருத தாரையைப் பெருகவிட்டான். இதனை இவ்வாழ்வார் தாமுமறிந்து தமது முதற் பிரபந்தமாகிய திருவிருத்தத்தில் "பெருங்கேழலார் தம் பெருங்கண் மலர்ப்புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழவைத்தார் இவ்வகாலம்" என்கிற பாசுரத்தினால் வெளியிட்டார்.

அந்த திவ்ய கடாக்ஷமடியாகத் தோன்றின இவ்வாழ்வார்க்கு அளவுகடந்த அதிசயங்கள் அமைந்தன. உபய விபூதியினு மடங்காத பெருமை வாய்ந்த பரப்ரஹ்மத்தைத் தம்முடைய ஹ்ருதய ஏகதேசத்திலே யடக்கி "புவியுமிருவிசும்பும் நின்னகத்த, நீ என் செவியின் வழி புகுந்து என்னுள்ளாய், அவிவின்றியான் பெரியன், நீ பெரியை யென்பதனை யாரறிவார்? ஊன் பருகுநேமியாய்! உள்ளு." (பெரிய திருவந்தாதி) என்கிற பாசுரத்தினால் எம்பெருமானோடே போராடும்படியான பெருமை பெற்றார்; (அதாவது) பிரானே! நீ பரப்ரஹ்ம மென்று பேர் சுமக்கின்றாயே, இது உனக்குத் தகுமா? தன்னைக் காட்டிலும் பெரியதொரு வஸ்து வில்லாதபடி தானே மிகப் பெரிதாகவுள்ள வஸ்துவன்றோ பரப்ரஹ்ம மென்னத்தகும்; என் செவிவழியாகப் புகுந்து என்னுள்ளே அடங்கி நிற்கின்றாய் நீ; உபய விபூதிமானான உன்னையு மடக்கிக் கொண்டிருக்கிற நானன்றோ பெரியவன்; என்னுள் அடங்கி நிற்கிற நீ பெரியவனாகத் தகுமோ? என்று கேட்டால் விடை யிறுக்க வல்லமை யில்லையாயிற்று எம்பெருமானுக்கு. நாமெல்லாருங் கூட பகவானை ஹ்ருதயத்தில் அடக்கிக்கொண்டுதானிருக்கிறோமென்று ஒவ்வொருவரும் நினைத்துக்கொள்ளலாமானு

பெற்றார். ஆனதுபற்றியே இவருடைய வாழித்திருநாமத்தில் "நாதனுக்கு நாலாயிர முரைத்தான் வாழியே" என்று அநுஸந்தானம் செய்யப்பட்டு வருகின்றது.

உலகில் பயிர்செய்பவன் தான் செய்யும்பயிர் பழுதுபட்டாலும் சோம்பிக் கைவாங்காமல் பின்னையும் க்ருஷியையே பண்ணுமாபோலே கல்பந்தோறும் ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணிப் போராநின்ற எம்பெருமான் அந்த ஸ்ருஷ்டி ஸபலமாகாமலிருந்தும் சிறிதும் விரக்தியடையாமல் என்றேனுமொருநாள் பலிக்கவேபலிக்கு மென்று உகந்து ஸ்ருஷ்டியையே பண்ணிக் கொண்டுவந்தும், படைத்த அந்த ஜகத்தில் அநுப்ரவேசித்தும், அறியவேண்டு மர்த்தங்களையெல்லாம் அறிவிக்குமதான சாஸ்த்ரங்களையுபதேசித்தும், * உறங்குவான் போல் யோகு செய்தபெருமான் * என்கிறபடியே நித்ராமுத்ரையாலே ஜகத்ரக்ஷண சிந்தைபண்ணியும், சிந்தித்தவுபாயத்திற்குத் தகுதியாக * மனிசரும் மற்றும் முற்றுமாய் மாயப்பிறவி பிறந்த * என்கிறபடியே மநுஷ்யாதி யோனிகளிலே கண்காணவந்து பிறந்தும் 'எனக்கு அடிமை யாவாருண்டோ' என்று இதுவேகாரியமாகத் தேடித்திரியாநின்றான். அந்தோ! ஒருவரும் அடிமைக்கிசைந்துவந்து அவனுடைய க்ருஷியை ஸபலமாக்கிற்றிலர். சிற்றின்பங்களிலே ஆழ்ந்து அழுந்திவருந்துவதே உலகவியற்கையாக இருந்தது. இவ்வுலகவியற்கையைமாற்றி ஸம்ஸாரி சேதநர்களைத் தம்பக்கலில் ஈடுபடுத்துவதற்குத் தன்னாலாகாதென்றும், ம்ருகத்தைக் கொண்டே ம்ருகத்தைப்பிடிப்பது போல ஸம்ஸாரிகளி லொருவரைக் கொண்டே ஸம்ஸாரிகளை வலைப்படுத்திக் கொள்ள வேணுமென்றும் நிச்சயித்து, அப்படிப்பட்ட அதிகாரியைத் தேடுகையில், * அன்பொடு தென்திசைநோக்கி * என்கிறபடியே தனது அன்பார்ந்த நோக்குக்குப் பள்ளமடையான தென்திசையிலே இவ்வாழ்வார்மேலே தன்னுடைய கடாக்ஷாம்ருத தாரையைப் பெருகவிட்டான். இதனை இவ்வாழ்வார் தாமுமறிந்து தமது முதற் பிரபந்தமாகிய திருவிருத்தத்தில் "பெருங்கேழலார் தம் பெருங்கண் மலர்ப்புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழவைத்தார் இவ்வகாலம்" என்கிற பாசுரத்தினால் வெளியிட்டார்.

அந்த திவ்ய கடாக்ஷமடியாகத் தோன்றின இவ்வாழ்வார்க்கு அளவுகடந்த அதிசயங்கள் அமைந்தன. உபய விபூதியிலு மடங்காத பெருமை வாய்ந்த பரப்ரஹ்மத்தைத் தம்முடைய ஹ்ருதய ஏக தேசத்திலே யடக்கி "புவியுமிருவிசும்பும் நின்னகத்த, நீ என் செவியின் வழி புகுந்து என்னுள்ளாய், அவிவின்றியான் பெரியன், நீ பெரியையென்பதனை யாரறிவார்? ஊன் பருகுநேமியாய்! உள்ளு." (பெரிய திருவந்தாதி) என்கிற பாசுரத்தினால் எம்பெருமானோடே போராடும்படியான பெருமை பெற்றார்; (அதாவது) பிரானே! நீ பரப்ரஹ்ம மென்று பேர் சுமக்கின்றாயே, இது உனக்குத் தகுமா? தன்னைக் காட்டிலும் பெரியதொரு வஸ்து வில்லாதபடி தானே மிகப் பெரிதாகவுள்ள வஸ்துவன்றோ பரப்ரஹ்ம மென்னத்தகும்; என் செவிவழியாகப் புகுந்து என்னுள்ளே அடங்கி நிற்கிறாய் நீ; உபய விபூதிமானான உன்னையு மடக்கிக் கொண்டிருக்கிற நானன்றோ பெரியவன்; என்னுள் அடங்கி நிற்கிற நீ பெரியவனாகத் தகுமோ? என்று கேட்டால் விடை பிறக்க வல்லமை யில்லையாயிற்று எம்பெருமானுக்கு. நாமெல்லாருங் கூட பகவானை ஹ்ருதயத்தில் அடக்கிக்கொண்டுதானிருக்கிறோ மென்று ஒவ்வொருவரும் நினைத்துக்கொள்ளலாமாகு

னும் “கண்கள் சிவந்து பெரியவாய் வாயுஞ் சிவந்து கனிந்து, உள்ளே வெண்பலிலகு சுடரிலகு விலகுமகர குண்டலத்தன், கொண்டல் வண்ணன் சுடர் முடியன் நான்கு தோளன் குனி சார்ங்கன், ஒண் சங்கதை வாளாழியா னொருவன் அடியேனுள்ளானே” [திருவாய்மொழி 8—8—1.] என்னும்படியும் * வெள்ளைச் சுரிசங்கொடாழியேந்தித் தாமரைக் கண்ணனென்னெஞ்சினூடே, புள்ளைக் கடாகின்ற வாற்றைக்காணீர்! என் சொல்லிச் சொல்லுகேன் * [தி. 7—3—1.] என்னும்படியும் இவர் திருவுள்ளத்தே எம்பெருமான் அடங்கி நிற்குந் தன்மை லோக விலக்ஷணமன்றோ.

இவ்வாழ்வாருடைய த்யானச்லோகமாக வழங்கிவருகின்ற

*** யத்கோஸஹஸ்ரமபஹந்தி தமாம்ஸி பும்ஸாம் நாராயணோ வஸதி யத்ர ஸசங்கசக்ர:,**
**யன்மண்டலம் ச்ருதிகதம் ப்ரணமந்தி விப்ராஸ் தஸ்மை நமோ வகுளபூஷணபாஸ்கராய. ***

என்கிற ச்லோகம் நம்பிள்ளையருளிச் செய்ததாகப் பெரியோர் பகர்வர்; பட்டர் அருளிச் செய்த தென்பாருமுளர். முக்தகமானவிது யாரருளிச் செய்ததாயினுமாகுக. அற்புதமான ச்லோகரத்னமிது. நம்மாழ்வார் இவ்வுலகின் அகவிருளையகற்றத் தோன்றிய விலக்ஷண ஸூர்யன். எல்லாருங் கண்ட ஸஹஸ்ரகிரணனென ஸூர்யன் தனது ஆயிரங் கிரணங்களினாலும் புறவிருளைப் போக்குகின்றான்; இந்த வகுள பூஷணபாஸ்கரர் தமது ஆயிரம் பாசுரங்களினாலும் உலகத்தின் அகவிருளைப் போக்குகின்றார். ஸூர்யன் * **த்யேயஸ் ஸதா ஸவித்ருமண்டல மத்யவர்த்தீ நாராயணஸ் ஸரஸிஜாஸநஸந்நிவிஷ்ட:, கேயூரவாந் மகரகுண்டலவாந் கிரீடீ ஹாரீ ஹிரண்மயவபுர் த்ருதசங்கசக்ர:** * என்று உலகமெங்கும் ஸுப்ரஸித்தமாக அந்தணர் யாவருமநுஸந்திக்கின்ற ச்லோகத்தின் படியே திவ்யாபரண திவ்யாயுத பூஷிதனான ஸ்ரீமந்நாராயணன் தன்னிடத்திலே நித்யவாஸஞ் செய்யப் பெற்றவன்; இந்த வகுள பூஷண பாஸ்கரரும் *கண்கள் சிவந்து* என்று கீழேயெடுத்துக் காட்டிய பாசுரத்தின் படியே அப்படிப்பட்டவர். [**யன்மண்டலம் ச்ருதிகதம் ப்ரணமந்தி விப்ரா:**] சிலேடையாக அமைக்கப்பட்டது; வேதப்ரதிபாத்யமான ஸூர்ய மண்டலத்தை அந்தணர்கள் ஸந்த்யாவந்தநக்ருத்யத்தினால் முச்சந்தியுந் தொழுகின்றனர்; மண்டலமென்று திருவவதாரஸ்தலத்திற்கும் பெயர்; ச்ருதியென்று காதுக்கும் பெயர்; திருக்குருகூர் என்றோ ஆழ்வார் திருநகரியென்றோ காதில் விழுந்தவாறே ஸகலபக்த ஜநங்களும் மத்தகத்திடைக் கைகளைக் கூப்பி நிற்பர். ஆக இவ்வகைகளாலே உள்ளபடி ஸூர்யனென்றே நிரூபிக்கத் தகுந்தவர் இவ்வாழ்வார்.

இவருடைய திருவவதாரத்தை மஹர்ஷிகளும் தங்களுடைய புராண நூல்களில் ஸூசிப்பித்திருக்கின்றார்கள். எங்ஙனே யெனில்; ஸ்ரீபாகவதத்தில் பதினோராம் ஸ்கந்தத்தில் ஐந்தாவது அத்யாயத்தில் முப்பத்தெட்டாவது ச்லோகந் தொடங்கி ஸ்பஷ்டமாகவே காணலாம்; * **க்ருதாதிஷு நரா ராஜந் கலௌ இச்சந்தி ஸம்பவம், கலௌ கலு பவிஷ்யந்தி நாராயணபராயணா:** — * .... **த்ரமிடேஷு ச பூரிச: — தாம்ரபர்ணீ நதீ யத்ர** * என்பவை முதலான ச்லோகங்கள் குறிக்கொள்ளத் தக்கவை. க்ருதயுகம் முதலான முன்யுகங்களில் தோன்றியிருந்த சில மனிசர்கள் கலியுகத்தில் அவதரிக்க வேணுமென்று ஆசை கொண்டி

கொண்டவர்களாய்க் கலி
ருந்தார்கள். அவர்கள் ஸ்ரீமந்நாராயணனையே பரதெய்வமாகக் கொண்டவர்களாய்க் கலி
யுகத்தில் அவதரிக்கப் போகிறார்கள். ஏதோ சில சில இடங்களில் அவதரிப்பார்கள். தமிழ்
நாடுகளிலோ வென்னில் பெரும்பான்மையாக அவதரிப்பார்கள். தாமிரபர்ணி, க்ருதமாலே,
பாலாறு, காவேரி என்னுமிப் புண்ய நதிகள் எவ்விடங்களில் பெருகுகின்றனவோ அவ்
விடங்களில் [அவற்றின் கரையிலே] அவதரிப்பார்கள்,—என்று இந்த ச்லோகங்களில்
கூறப்பட்டுள்ளது. இந்த நதிகளை யெடுக்கும் போது தாமிரபர்ணி நதியை முந்துற முன்னம்
எடுக்கையாலே நம்மாழ்வாருடைய திருவவதாரமே மஹர்ஷிகளால் முக்கியமாகக் கருதப்
பட்டதென்பது வெளிப்படை. ஆழ்வார்களிற்சிறந்த நம்மாழ்வாரும் ஆசாரியர்களிற் சிறந்த
மணவாளமாமுனிகளும் தாமிரபர்ணிக்கரையில் திருவவதரித்த மஹா புருஷர்களன்றோ.

பகவான் க்ருத
இவ்வாழ்வாரை ஸாக்ஷாத் பகவதவதாரமேயாகவும் கொள்வர். பகவான் க்ருத
யுகத்தில் தத்தாத்ரேயனும் பரசுராமனுமாய் ப்ராஹ்மண குலத்தில் தோன்றினன்; அவனே
அடுத்த த்ரேதாயுகத்தில் க்ஷத்ரியனான தசரத சக்கரவர்த்திக்குப் பிள்ளையாய்த் தோன்றினன்;
அவனே த்வாபரயுகத்தில்—வைச்யப்ராயரான வஸுதேவர்க்கும், பசுரக்ஷணத்தாலே ஸா
க்ஷாத் வைச்யரான நந்த கோபர்க்கும் பிள்ளையாய்த் தோன்றினன். இப்படி யுகக்ரம
த்தில் வர்ணக்ரமமாக அவதரித்த பரமபுருஷன் நான்காவது யுகமான இக்கலியுகத்தில் நான்
காவது வருணத்திலே அவதரிக்க வேண்டி ஆழ்வாராக அவதரித்தனனோ! என்று சங்கிக்க
ஔசித்யமுண்டு. வேதங்களைப் பரிஷ்கரிப்பது முதலிய காரியங்களுக்காக வியாஸர் முதலா
னோரிடத்தில் ஆவேசித்தாப்போலே த்ராவிட வேத ப்ரவர்த்தநார்த்தமாக இவர்பக்கல் ஆவே
சித்தபடியோ! என்றும் சங்கிப்பர்கள். இவ்விபூதியைத் திருத்துகைக்காக ஈச்வரனுடைய
நியமனத்தினால் நித்ய முக்தர்களிலே யொருவர் வந்து அவதரித்தபடியோ! என்றும் சங்
கிப்பர்கள்.

மஹர்ஷிகளென்று கொண்டாடப்படுகிற வ்யாஸ பராசர வால்மீகி ப்ரப்ருதிகளிற்
காட்டிலும் ஆழ்வார் மிக்க மேம்பாடு உற்றவர்; அவ்விருடிகள் கனி காய் கிழங்கு சருகு காற்று
தண்ணீராகிய இவற்றையே தாரக போஷக போக்யங்களாகக் கொண்டிருந்தார்கள். * ரிஷீம்
ஜுஷாமஹே க்ருஷ்ணத்ருஷ்ண தத்வமிவோதிதம் * என்று பட்டர் அருளிச் செய்தபடி எம்
பெருமான் விஷயமான காதலே வடிவெடுத்தவரான ஆழ்வாரோ வென்னில் * உண்ணுஞ்
சோறு பருகு நீர்தின்னும் வெற்றிலையு மெல்லாம் கண்ணன் * என்று தாமேயருளிச்
செய்தபடி தாரக போஷக போக்யங்களெல்லாம் எம்பெருமானே யாயிருப்பர். ரிஷிகளின்
சரித்திரங்களைக் காணும்போது அவர்கள் ஸம்ஸாரப் பற்று அறாதவர்களென்பது விளங்கும்.
வஸிஷ்ட பகவான் புத்திரனிறந்த வருத்தத்தினால் மரணத்தை விரும்பி மலையிலேறி விழுவது,
நெருப்பிலே குதிப்பது, கழுத்திலே கல்லைக் கட்டிக்கொண்டு கடலிலே விழுவது ஆகவிப்
படியெல்லாம் தடுமாறின னென்றும், வேதவ்யாஸ பகவான் புத்திரவியோகம் பொறுக்க மாட்
டாமல் புத்திரனே! யென்று வாய்விட்டுக் கூப்பிட்டு அழுது கொண்டு காணப் பெறாமையால்
அலமந்து திரிந்தாரென்றும் கதைகள் காண்கின்றன. ஆழ்வாரோ வென்னில், எம்பெரு
மானைப் பிரிந்த வருத்தத்தினால் கண்ணுங் கண்ணீருமாய் * எங்கே காண்கேனீன் துழாயம்
மான் தன்னை * என்று கடலும் மலையும் விசும்பும் துழாவி அலமந்து * சிந்தை கலங்கித்
திருமாலென்றழைப்பதே போது போக்காயிருந்தவர்.

ரிஷிகளின் அத்யவஸாயத்திற் காட்டிலும் ஆழ்வாருடைய அத்யவஸாயம் பரம
விலக்ஷணமாயிருக்கும். எம்பெருமானைப் பெறுவதே பேறு என்றும், அதற்குக் கர்ம
ஜ்ஞாநபக்திகளே உபாயமென்றும் இந்திரன் முதலிய தேவதைகளுக்கு அந்தர்யாமியான
ஈச்வரனே உத்தேச்யனாகையாலே அந்தத் தேவதைகளும் அநுவர்த்திக்கவுரியர் என்றும்
இப்படி ரிஷிகள் பேசியுள்ளார்கள். ஆழ்வார் அருளிச்செய்வதோவென்னில், கைங்கர்யமே
புருஷார்த்தமாகவும், அதனைப்பெறுவிப்பது ப்ரபத்தியேயாகவும், இதரதேவதைகள் அநு
வர்த்திக்கத் தகாதவராகவு மாயிற்று. ரிஷிகள் இயற்றிய நூல்களிற்காட்டிலும் ஆழ்வார்

திருவாய்மலர்ந்தருளிய திவ்யப்பிரபந்தங்களுக்கு நெடுவாசியுண்டு:—வால்மீகி மஹர்ஷியானவர் ராமகதையைச் சொல்லுவதாக ராமாயணமென்று தொடங்கி, கங்கையின் உற்பத்தி ஸுப்ரஹ்மண்யனுடைய உற்பத்தி புஷ்பகவர்ணகம் முதலான கதைகளைப் பரக்கப் பேசி வாக்கில் அசுத்திபடைத்தார். வேதவ்யாஸர் மஹாபாரதத்தை * நாராயணகதை யென்றாகத் தொடங்கி பீஷ்மர்முதலான பற்பலருடைய உத்பத்திப்ரகாரங்களை விரிவாகப் பேசுகையாலும், "பூசல்பட்டோலை" [யுத்தபுஸ்தகம்] என்னும்படி பாரதப்போர்வகைகளையே பரக்கநின்று வருணித்தபடியாலும் அஸத்கீர்த்தநத்திலே மிகவும்பரந்து வாக்கை அசுத்தமாக்கிக் கொண்டார். இப்படிப்பட்ட அவத்யங்களில் ஏகதேசமும் ஆழ்வாரருளிச்செயலில் இடம்பெற்றிருக்கவில்லை. "மாற்றங்களாய்ந்து கொண்டு மதுசூத பிரானடிமேல்" என்று தாமேபணித்தபடி எம்பெருமான் விஷயமல்லாத ஒரு சொல்லும் கலசாதபடி அத்தனையும் பகவத்விஷயமேயாக அருளிச்செய்த பாசுரங்களே மலிந்திருக்கும். இவரதுபாசுரங்களின் பெருமையைப் பற்றிக் கம்பர் சடகோபரந்தாதியில் கூறியுள்ள செய்யுள்களில் ஒன்று கேளீர்:—

"அந்தமிலா மறையாயிரத் தாழ்ந்த வரும் பொருளைச்
செந்தமிழாகத் திருத்திலனேல் நிலத்தேவர்களும்
தந்தம்விழாவுமழகு மென்னும் தமிழார்கவியின்
பந்தம்விழாவோமுகுங் குருகூர் வந்த பண்ணவனே!" என்பதாம்.

வேதப்பொருள்களையே நிரம்பக்கொண்ட ஆழ்வார் ஸ்ரீஸூக்திகள் அவதரிக்கவில்லையென்றால் கோவில்களையும் உத்ஸவங்களையும் கேட்பாரார்? என்னுங் கருத்துப்பட அமைந்துள்ள இப்பாசுரத்தின் சுவை விலக்ஷணமானதே. சைவ சமயத்திலும் தேவாரம் முதலியன தோன்றியிருந்தாலும் சிவாலயங்களில் அவற்றிற்கு ஒரு மதிப்பு கொடுக்கப் பட்டிருக்கவுமில்லை, உபநிஷத்துக்களின் அர்த்தங்களை நிர்வஹிக்குந் திறத்தில் அவற்றைத் துணைகொள்வாருமில்லை. ப்ராஹ்மண பரிக்ரஹமும் வித்வத் பரிக்ரஹமு மற்றவையன்றோ அவை. நமது ஸம்ப்ரதாயத்தில் அப்படியன்றிக்கே நமது பூருவாசாரியர்கள் யாவரும் தென்மொழி வேதமாகிய திவ்யப்ரபந்தங்களை வலக்கண்ணாகவும், வடமொழி வேதத்தை இடக்கண்ணாகவு மன்றோ கொண்டிருந்தார்கள். கூரத்தாழ்வான் ஆழ்வார் விஷயமாக அருளிச்செய்த * த்ரைவித்யவ்ருத்தஜந * என்றச்லோகமும் * பக்திப்ரபாவபவதத்புத * என்றச்லோகமும் அமைந்திருக்கு மழகு நெஞ்சால் நினைப்பரிதே. [அவ்விரண்டுச்லோகங்களும் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தின் தொடக்கத்தில் காணத்தக்கன.] ஆழ்வாரைத் துதிப்பதற்கென்று தோன்றிய இந்தச்லோகங்க ளிருக்கட்டும்; எம்பெருமானை யநுபவித்துக்கொண்டு போம்போதும் ஆழ்வாருடைய ஞாபகமேயன்றோ ஆழ்வான் பட்டர் முதலானோர்க்கு இடையறாமலிருப்பது. அதிமாநுஷஸ்தவத்தில் * ஸ்ரீமத் பராங்குச முநீந்த்ரமநோநிவாஸாத் * என்றச்லோகமும், வரதராஜஸ்தவத்தில் * ஆம்நாயாநாம் யதபிச சிரோ யச்ச மூர்த்தா சடாரே:* என்றச்லோகமும், ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் * வடதள...கமலாஸ்தந சடகோபவாக்வபுஷி ரங்கக்ருஹேசயிதம் * என்றச்லோகமும் இவைபோல்வன பலவும் உயிரையுருக்கி யுண்ணுமே.

---

# நம்மாழ்வாரைப் பற்றியே மற்றொருவகையான அநுபவம்.

இக்கலியுகத்தின் தொடக்கத்தில் திருவவதரித்துத் தொண்டர்க்கு அமுதுண்ணச் சொல் மாலைகள் சொன்ன நம்மாழ்வார் நம்முடைய ஸ்ரீ வைஷ்ணவ தரிசனத்திற்கு இந்த யுகத்தில் ப்ரதம ப்ரவர்த்தகராக விளங்கினர். ஸ்ரீமந் நாதமுனிகள் தொடங்கி ஆளவந்தார் எம்பெருமானார் ஆழ்வான் பட்டர் முதலான ஆசிரியர்கள் அநேக திவ்ய க்ரந்தங்

களால் இவ்வுலகை வாழ்வித்தருளின தெல்லாம் இவ்வாழ்வாருடைய திவ்ய ப்ரபந்தங்களை மூலமாகக் கொண்டே யாம்.

"நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம் பஹுபிருப்சிதம் யாமுநேய ப்ரபந்தை: த்ராதம் ஸம்யக் யதீந்த்ரைரித மகில தம:கர்சநம் தர்சநம் ந:" என்று அருளிச்செய்த தேசிகன் தாமே ஸ்ரீ குரு பரம்பராஸாரத்தில்—"ஸ்ரீமந் நாதமுனிகளுக்கு ஸ்ரீ மதுர கவிகள் முதலாக வுண்டான ஸம்ப்ரதாய பரம்பரையாலும் திருவாய்மொழி முகத்தாலும் யோகதசையிலே ஸாக்ஷாத்க்ருதராயும் நம்மாழ்வார் ஆசார்யரானார்" என்றருளிச் செய்திருக்கையாலும், ஆளவந்தார் தமது ஸ்தோத்ர ரத்நத்தில் ஆழ்வாரைத் துதிக்கும் ச்லோகத்தில் "ஆத்யஸ்ய ந: குலபதே:" என்றே அருளிச் செய்கையாலும் நம்மாழ்வாரே ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தத்திற்கு முதன்மையான ப்ரவர்த்தகர் என்னத் தட்டில்லை.

உபநிஷத்துக்களில் த்வைத பரமாகவும் அத்வைத பரமாகவுங் காண்கின்ற பற்பல வாக்கியங்களை முறையே அத்வைதிகளும் த்வைதிகளும் அநாதரித்தது போலல்லாமல் விசிஷ்டாத்வைதிகள் எல்லாவற்றையும் அழகாகவே ஆதரித்து நிர்வஹித்து வருவதானது ஸர்வேச்வரனுக்கும் சேதநாசேதநங்களுக்குமுள்ள சரீராத்ம பாவத்தைக் கொண்டே யாகும். இதனை முதன் முதலாக நமக்கு விளங்கக்காட்டிக் கொடுத்தருளின ஆசிரியர் நம்மாழ்வாரே யாவர். திருவாய் மொழியில் முதற் பதிகத்தில், "திடவிசும் பெரிவளி நீர் நிலமிவை மிசை, படர்பொருள் முழுவதுமாய் அவையவை தொறும், உடன்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன், சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே." என்றுள்ள பாசுரம் ஸ்ரீ பாஷ்யம் முதலிய ஸ்ரீ வைஷ்ணவ க்ரந்தங்களனைத்துக்கும் ஜீவாது வாகும். இங்ஙனே ஆழ்வார் காட்டியருளின வழியைப் பின்பற்றியே ஆசாரியர்கள் பேதா பேத ச்ருதிகளை ஒருங்கவிட்டார்கள்.

மற்றும் ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தத்திற்கு உள்ளீடான அர்த்த விசேஷங்கள் யாவும் ஆழ்வாருடைய திவ்ய ஸூக்திகளிலிருந்தே ஆளவந்தார் எம்பெருமானார் முதலான ஆசாரியர்களால் நிஷ்கர்ஷிக்கப்பட்டவை யாகும். "பாஷ்யகாரர் இதுகொண்டு ஸூத்ர வாக்யங்கள் ஒருங்க விடுவர்" என்ற ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீஸூக்தியும், "செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளிய வோதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே" என்ற தேசிக ப்ரபந்த பாசுரமும் இவ்விஷயத்தை வற்புறுத்தி நிற்கும்.

உதாஹரணமாக மற்றொரு விஷயமுங் காட்டுவோம். எம்பெருமானார், கத்யத்தில் "ஸ்வாதீந த்ரிவித சேதநா சேதநஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்தி பேதம்" என்று எம்பெருமானுக்கு ஒரு விசேஷணமிட்டருளியுள்ளார். சேதநா சேதனங்களின் ஸ்வரூபமும் ஸ்திதியும் ப்ரவ்ருத்தியு மெல்லாம் எம்பெருமானிட்ட வழக்கா யிருக்கு மென்பது இதன் கருத்து. இவ்வர்த்தத்தை எம்பெருமானார் எங்கிருந்து க்ரஹித்தருளினார் என்று ஆராய்ந்து பார்க்குமளவில், திருவாய்மொழியில் முதற்பதிகத்தில் நான்கு ஐந்து ஆறும் பாசுரங்களிலிருந்து முறையே க்ரஹித்தருளினார் என்பே புலப்படுகின்றது. அவற்றுள் * நாமவனிவனுவன் * என்கிற பாசுரத்தில் ஸகல சேதநா சேதநங்களின் ஸ்வரூபமும் எம்பெருமானுக்கு அதீனமென்றது. அதற்கடுத்த * அவரவர் தமதமது * என்ற பாசுரத்தில் ஸகல பதார்த்தங்களினுடையவும் ஸ்திதி [ரக்ஷணம்] எம்பெருமானதீன மென்றது. அதற்கடுத்த * நின்றனரிருந்தனர் * என்ற பாசுரத்தில் ஸகல ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும் எம்பெருமானதீன மென்றது. ஆக இங்ஙனே மூன்று பாசுரங்களினாலும் தேறின பொருளையே எம்பெருமானார் ஸ்வாதீநத்ரிவிதேத்யாதியான ஒரு சூர்ணையினால் தொகுத்தருளினார்.

இப்படி ஆழ்வார் அருளிய அர்த்த விசேஷங்களையே உடையவர் பெரும்பாலும் உபந்யாஸ முகத்தாலும் ஸ்ரீ பாஷ்யாதி திவ்யக்ரந்தமுகத்தாலும் ப்ரவசனஞ் செய்தருளினது பற்றியே "தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற முதல்தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த

களால் இவ்வுலகை வாழ்வித்தருளின தெல்லாம் இவ்வாழ்வாருடைய திவ்ய ப்ரபந்தங்களை மூலமாகக் கொண்டே யாம்.

“நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம் பஹுபிருபசிதம் யாமுநேய ப்ரபந்தை: த்ராதம் ஸம்யக் யதீந்த்ரைரித மகில தம:கர்சநம் தர்சநம் ந:” என்று அருளிச்செய்த தேசிகன் தாமே ஸ்ரீ குரு பரம்பரா ஸாரத்தில்—“ஸ்ரீமந் நாதமுனிகளுக்கு ஸ்ரீ மதுர கவிகள் முதலாக வுண்டான ஸம்ப்ரதாய பரம்பரையாலும் திருவாய்மொழி முகத்தாலும் யோகதசையிலே ஸாக்ஷாத்க்ருதராயும் நம்மாழ்வார் ஆசார்யரானார்” என்றருளிச் செய்திருக்கையாலும், ஆளவந்தார் தமது ஸ்தோத்ர ரத்நத்தில் ஆழ்வாரைத் துதிக்கும் ச்லோகத்தில் “ஆத்யஸ்ய ந: குலபதே:” என்றே அருளிச் செய்கையாலும் நம்மாழ்வாரே ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தத்திற்கு முதன்மையான ப்ரவர்த்தகர் என்னத் தட்டில்லை.

உபநிஷத்துக்களில் த்வைத பரமாகவும் அத்வைத பரமாகவுங் காண்கின்ற பற்பல வாக்கியங்களை முறையே அத்வைதிகளும் த்வைதிகளும் அநாதரித்தது போலல்லாமல் விசிஷ்டாத்வைதிகள் எல்லாவற்றையும் அழகாகவே ஆதரித்து நிர்வஹித்து வருவதானது ஸர்வேச்வரனுக்கும் சேதநாசேதநங்களுக்குமுள்ள சரீராத்ம பாவத்தைக் கொண்டே யாகும். இதனை முதன் முதலாக நமக்கு விளங்கக்காட்டிக் கொடுத்தருளின ஆசிரியர் நம்மாழ்வாரே யாவர். திருவாய் மொழியில் முதற் பதிகத்தில், “திடவிசும் பெரிவளி நீர் நிலமிவை மிசை, படர்பொருள் முழுவதுமாய் அவையவை தொறும், உடன்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன், சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே.” என்றுள்ள பாசுரம் ஸ்ரீ பாஷ்யம் முதலிய ஸ்ரீ வைஷ்ணவ க்ரந்தங்களனைத்துக்கும் ஜீவாதுவாகும். இங்ஙனே ஆழ்வார் காட்டியருளின வழியைப் பின்பற்றியே ஆசாரியர்கள் பேதாபேத ச்ருதிகளை ஒருங்கவிட்டார்கள்.

மற்றும் ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தத்திற்கு உள்ளீடான அர்த்த விசேஷங்கள் யாவும் ஆழ்வாருடைய திவ்ய ஸூக்திகளிலிருந்தே ஆளவந்தார் எம்பெருமானார் முதலான ஆசாரியர்களால் நிஷ்கர்ஷிக்கப்பட்டவை யாகும். “பாஷ்யகாரர் இதுகொண்டு ஸூத்ர வாக்யங்கள் ஒருங்க விடுவர்” என்ற ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீஸூக்தியும், “செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளிய வோதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே” என்ற தேசிக ப்ரபந்தப் பாசுரமும் இவ்விஷயத்தை வற்புறுத்தி நிற்கும்.

சுருக்கமாக மற்றொரு விஷயமுங் காட்டுவோம். எம்பெருமானார், கத்யத்தில் “ஸ்வாதீந த்ரிவித சேதநா சேதநஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்தி பேதம்” என்று எம்பெருமானுக்கு ஒரு விசேஷண மிட்டருளியுள்ளார். சேதநா சேதனங்களின் ஸ்வரூபமும் ஸ்திதியும் ப்ரவ்ருத்தியு மெல்லாம் எம்பெருமானிட்ட வழக்கா யிருக்கு மென்பது இதன் கருத்து. இவ்வர்த்தத்தை எம்பெருமானார் எங்கிருந்து க்ரஹித்தருளினார் என்று ஆராய்ந்து பார்க்குமளவில், திருவாய்மொழியில் முதற்பதிகத்தில் நான்கு ஐந்து ஆறும் பாசுரங்களிலிருந்து முறையே க்ரஹித்தருளினார் என்றே புலப்படுகின்றது. அவற்றுள் * நாமவனிவனுவன் * என்கிற பாசுரத்தில் ஸகல சேதநா சேதநங்களின் ஸ்வரூபமும் எம்பெருமானுக்கு அதீனமென்றது. அதற்கடுத்த * அவரவர் தமதமது * என்ற பாசுரத்தில் ஸகல பதார்த்தங்களினுடையவும் ஸ்திதி [ரக்ஷணம்] எம்பெருமானதீன மென்றது. அதற்கடுத்த * நின்றனரிருந்தனர் * என்ற பாசுரத்தில் ஸகல ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும் எம்பெருமானதீன மென்றது. ஆக இங்ஙனே மூன்று பாசுரங்களினாலும் தேறின பொருளையே எம்பெருமானார் ஸ்வாதீநத்ரிவிதேத்யாதியான ஒரு சூர்ணையினால் தொகுத்தருளினார்.

இப்படி ஆழ்வார் அருளிய அர்த்த விசேஷங்களையே உடையவர் பெரும்பாலும் உபந்யாஸ முகத்தாலும் ஸ்ரீ பாஷ்யாதி திவ்யக்ரந்தமுகத்தாலும் ப்ரவசனஞ் செய்தருளினது பற்றியே “தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற முதல்தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த

இதத்தாய் இராமாநுசன்" என்று பட்டர் அருளிச் செய்யலாயிற்று. இவ்வாழ்வார் திறத்து ஆளவந்தார் கொண்டிருந்த பக்திப் பெருங்காதலின் பரிசு "**மாதா பிதா யுவதய:**" என்ற ஒரு ச்லோகத்தினாலேயே நன்கு விளங்கும். ஆழ்வாருடைய திருநாமத்தையும் ஸாக்ஷாத்தாக வெளியிடாமே '**ஆத்ய குலபதி**' என்றே குறிப்பிட்டது மிகவும் பாராட்டத்தக்கது.

ஆழ்வான் பட்டர் முதலானோர்கள் தங்கள் தங்கள் திவ்யக்ரந்தங்களிலே ஆழ்வாரைத் துதிக்கக் கூறிய ச்லோகங்கள் பல பல இருந்தாலும், எம்பெருமானார்க்கு ஆழ்வார் திருவடிகளில் ப்ராவண்ய மிருந்ததாக அவருடைய ஸ்ரீஸூக்திகளினால் ஏற்படவில்லையே யென்று சிலர் கேட்பதுண்டு. ஆழ்வார் பக்கலிலுள்ள பக்தியே உடையவராக உருக்கொண்டதென்று காட்ட இராமாநுச நூற்றந்தாதியில் பல பாசுரங்கள் இருந்தாலும் உடையவருடைய ஸாக்ஷாத்தான ஸ்ரீஸூக்தி ஆழ்வார்துதியாக ஒன்றுமில்லையே யென்று ஸ்ரீவைஷ்ணவர்களிலேயே பலர் சொல்லிக் கொண்டிருப்பதுண்டு.

பெரியோர்கள் இதற்கு இரண்டு வகையான ஸமாதானமருளிச் செய்வர்கள். உலகத்தில் எல்லா ஆசார்யர்களின் நீதியும் ஒரு படிப்பட்டதாகவே காண்கிறதில்லை. "பஞ்சாசார்ய பதாச்ரித:" என்கிறபடியே உடையவர் ஐந்து ஆசாரியர்களை அடிபணிந்தவராயிருந்தும் ஒரு ஆசாரியர் விஷயமாகவும் ஒரு துதிக்கைகூட (க்ரந்தஸ்தமான துதிமொழி) அருளிச் செய்திருக்கவில்லை. ஸ்ரீவைகுண்டஸ்தவம் அருளிச் செய்யப் புகுந்த ஆழ்வான் உடையவரை ஒரு ச்லோகத்தாலும் நம்மாழ்வாரை இரண்டு ச்லோகங்களாலும் துதித்து மேலே எம்பெருமானளவிற் சென்று விட்டார். ஸ்ரீரங்கராஜஸ்தவம் அருளிச் செய்யாநின்ற பட்டர், ஆழ்வான் எம்பார் உடையவர் ஆளவந்தார் நாதமுனிகள் நம்மாழ்வார் பெரிய பிராட்டியார் நம்பெருமாள் என்ற கிரமத்திலே போயினர். இதில் சில ஆசாரியர்களை விட்டிருக்கிறார். யதிராஜஸப்ததி அருளிச் செய்யாநின்ற தேசிகன், பெருமாள் தொடங்கி உடையவர் வரையில் குரு பரம்பரையில் ஒருவரையும் விடாமல் உபச்லோகித்திருக்கின்றார். ஒரு ஆசாரியரையும் துதியாமலே க்ரந்தங்கள் எழுதி யிருப்பாருமுளர். இங்ஙனே பலபடியும் நாம் காணுகின்றோம். ஆசாரியர்ஸ்துதிகளைப் பிற்காலத்தவரும் காணும்படி க்ரந்தஸ்தமாக்கியே வைக்க வேணுமென்கிற நிர்ப்பந்தம் இருக்க வில்லை. ச்லோகமாகவோ பாசுரமாகவோ ஆசார்ய ஸ்துதிகளை யியற்றி யிருந்தால்தான் ப்ராவண்ய முள்ளதாகக் கொள்ளக்கூடுமென்று சொல்வதற்கில்லை. பெரியவாச்சான்பிள்ளை, பிள்ளை லோகாசார்யர், மணவாள மாமுனிகள் முதலானோர் க்ரந்தங்களருளிச் செய்திருக்கும் படியை நோக்கலாம்.

கோயில் திருமலை பெருமாள்கோயில்முதலான திவ்யதேசங்களில் ஆழ்வார்களின் ஆலயங்களைப் பரிஷ்கரிப்பித்தும் அருளிச் செயல்களின் ப்ரசாரங்களை அபிவிருத்தி செய்வித்தும் உடையவர் செய்தருளின ஆணைத் தொழில்கள் கோயிலொழுகு முதலான நூற்களில் விசதம். "**ஸர்வதேச தசாகாலேஷ்வவ்யாஹத பராக்ரமா, ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாமபிவர்த்ததாம்**" என்கிற நெடுநாளைய மங்கள சாஸநம் அதுபற்றியே நிகழ்கின்றது. உடையவர்க்கு முற்பட்ட ஆசாரியர்களும் பிற்பட்ட சிஷ்யர்களும் ஆழ்வாரல்லது வேறு தெய்வமில்லை யென்று உறுதி கொண்டிருக்கின்றமை ஸ்பஷ்டமாக இருக்கும்போது, பராங்குச தாஸரென்றே திருநாமம் பூண்ட பெரியநம்பிகளைப் பணிந்து உய்ந்தவரான உடையவர் வேறுபட்டிருந்தாரென்று நெஞ்சிலும் நினைக்கக் கூடுமோ? நூற்றந்தாதி தொடங்கும்போதே "பூமன்னுமாது பொருந்திய மார்பன் புகழ் மலிந்த பாமன்னு மாறனடிபணிந்துய்ந்தவன்—இராமாநுசன்" என்றுளது. இடையில் "உறுபெருஞ் செல்வமும் தந்தையுந் தாயும் உயர்குருவும் வெறிதரு பூமகள் நாதனும், மாறன் விளங்கிய சீர் நெறிதருஞ் செந்தமிழாரணமே யென்று இந்நீணிலத்தோரறிதர நின்றவிராமாநுசன்" என்றும் "பண்டரு மாறன் பசுந் தமிழானந்தம் பாய்மதமாய் விண்டிட வெங்க ளிராமாநுச முனிவேழம்"

என்றும். “உணர்ந்த மெய்ஞ்ஞானியர் யோகந்தொறும் திருவாய்மொழியின் மணந்தரும் இன்னிசை மன்னுமிடந்தொறும் ............புக்கு நிற்கும் இராமாநுசன்” என்றும் பல பாசுரங்கள் திகழ்கின்றன.

ஆக இவ்வளவும் உடையவருடைய ஸ்ரீஸூக்திகளில் ஆழ்வார் விஷயமான ஏற்றமில்லையென்கிற வாதத்தை யிசைந்து சொன்ன ஸமாதானம். இனி இரண்டாவது வகையான ஸமாதானமேதென்னில்; ஸ்ரீபாஷ்யத்தின் தொடக்கத்தில், * அகிலபுவநஜந்ம * என்றுள்ள மங்கள ச்லோகம் ஆழ்வார் விஷயமாகவும் அழகாக அமைக்கப்பட்டுள தென்பதைப் பெரியோர்கள் பரம்பரையிற் கூறி வருவதுண்டு. இது ரஹஸ்யமாகப் பேணி அநுஸந்திக்க வேண்டிய அர்த்தமாயினும் ஒரு அபிநிவேசத்தினால் வெளியிடப் பெறுகின்றது.

அகில புவநஜந்மஸ்தேம பங்காதி லீலே = ஜகத்ஸ்ருஷ்டி ஸம்ரக்ஷண ஸம்ஹாராதிகளை அநாயாஸமாக [விளையாட்டாக]ச் செய்து நடத்துகிறவன் எம்பெருமான் என்றபடி. இந்தவிசேஷணம் ஆழ்வார்க்கும் பொருத்தமாக அந்வயிக்கின்றது. “உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாம் கண்ணன்” என்று ஆழ்வார்தாம் அருளிச் செய்தபடியே புவநஜன்மஸ்தேமபங்காதிலீலனான எம்பெருமானை அகிலமாக [எல்லாமாக]க்கொண்டவர் ஆழ்வார் என்றபடி. கீதையிலே “வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:” என்று கண்ணபிரான் இழவோடே பேசிப் போனான். அப்படி அவன் சொல்லி வாய்மூடுவதற்குள்ளே ஆழ்வார் திருவவதரித்து * எல்லாங் கண்ணன் * என்று பேசியருளினராதலால் அந்தச் சிறப்பை உடையவர் மூதறிய வெளியிடுகிறாரென்க. ஸ்ரீபாஷ்யத்தின் உபஸம்ஹாரமும் * வாஸுதேவஸ்ஸர்வமிதி * என்பதே யாதலால் அங்கும் ஆழ்வாரையே ஒருவாறு ஸ்மரித்துத் தலைக்கட்டுகின்றார் போலும். * அகிலேத்யாதியான இந்த முதல் விசேஷணத்திற்கு எல்லா வுலகங்களையும் படைத்து அளித்து அழிப்பதற்கு ஆதிகாரண பூதனான எம்பெருமானோடே பிராட்டி நிலைமைகொண்டு லீலை புரிகின்றவர் ஆழ்வார் என்றுரைப்பாருமுளர்; * மின்னிடை மடவார்கள் முதலான திருவாய்மொழிகளில் எம்பெருமானுக்கும் ஆழ்வார்க்கும் லீலா ப்ரவ்ருத்திகள் காணத் தக்கன.

விநத விவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே = தன்னை வணங்கின பலவகைப்பட்ட ஜந்து ஸமூஹங்களை ரக்ஷிப்பதையே விரதமாகவுடையவன் என்று இவ்விசேஷணம் எம்பெருமானுக்கு அந்வயிப்பதுபோலவே ஆழ்வார்க்கும் பொருத்தமாக அந்வயிக்கும். எங்ஙனே யெனில்; ரக்ஷிக்கின்ற அதிகாரம் திருவடிகளுக்கே யாகும். “பிராட்டியுமவனும் விடிலும் திருவடிகள் விடாது; திண்கழலாயிருக்கும்” என்கிற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தியும் காண்க. பாதுகா ஸஹஸ்ரத்தில் [ப்ரபாவபத்ததி—42.] * ஜகதாமபிரக்ஷணே த்ரயாணாமதிகாரம் மணிபாதுகே வஹந்த்யோ:— யுவயோ:* என்ற ச்லோகத்தை ஊன்றி நோக்குமிடத்து விநத விவித பூதவ்ராத ரக்ஷைக தீக்ஷத்வம் ஆழ்வார்க்குப் பொருந்தத் தட்டுண்டோ? ஸ்ரீசடகோபனென்று வழங்குகின்ற திருவடிநிலை ஆழ்வாரில் வேறுபட்டதன்றே.

ச்ருதி சிரஸி விதீப்தே = ச்ருதிகளின் சிரஸ்ஸாகிய உபநிஷத்துக்களில் எம்பெருமான் விளங்குபவன். இவ்விசேஷணம் ஆழ்வார்க்கும் மிகப் பொருந்தும். ச்ருதி யென்று செவிக்கினிய செஞ்சொல்லாகிய திருவாய்மொழியைச் சொல்லிற்றாய், சிரஸ்ஸென்று ஒவ்வொரு பதிகத்திலும் முடிவு பாசுரத்தைச் சொல்லிற்றாய் அதிலே நியமேந * குருகூர்ச் சடகோபன் * என வருதலால் நிகமனப்பாசுரங்களாகிய ச்ருதிசிரஸ்ஸில் ஆழ்வார் விளங்குபவர் என்றபடி. அன்றியே, திருவாய்மொழியின் தலையான ஸ்தானத்திலே கண்ணிநுண் சிறுத்தாம்பெனும் திவ்ய ப்ரபந்தம் ஸம்ப்ரதாய ப்ராப்தமாதலால் ச்ருதிசிரஸ்ஸென்று அதைச் சொன்னபடியாய் அதிலே * தேவு மற்றறியேன் * என்னும்படி விசேஷேண தீப்தர் ஆழ்வார் என்றலும் மிகப் பொருந்தும்.

ப்ரஹ்மணி = ஸ்வரூபத்தாலும் குணத்தாலும் மிகப் பெரியன் எம்பெருமான். இப்பெருமை ஆழ்வார்க்கு அற்புதமாக அமையும். எங்ஙனே யெனில்; ஆழ்வார் பெரிய

என்றும். "உணர்ந்த மெய்ஞ்ஞானியர் யோகந்தொறும் திருவாய் மொழியின் மணந்தரு மின்னிசை மன்னுமிடந்தொறும் .............புக்கு நிற்கும் இராமானுசன்" என்றும் பல பாசுரங்கள் திகழ்கின்றன.

ஈ இவ்வளவும் உடையவருடைய ஸ்ரீஸூக்திகளில் ஆழ்வார் விஷயமான துதி யில்லையென்கிற வாதத்தை பிசைந்து சொன்ன ஸமாதானம். இனி இரண்டாவது வகையான ஸமாதானமேதென்னில்; ஸ்ரீபாஷ்யத்தின் தொடக்கத்தில், * அகிலபுவநஜந்ம * என்றுள்ள மங்கள ச்லோகம் ஆழ்வார் விஷயமாகவும் அழகாக அமைக்கப்பட்டுள தென்பதைப் பேராசிரியர்கள் உபதேச பரம்பரையிற் கூறி வருவதுண்டு. இது ரஹஸ்யமாகப் பேணி அநுஸந்திக்க வேண்டிய அர்த்தமாயினும் ஒரு அபிநிவேசத்தினால் வெளியிடப் பெறுகின்றது.

அகில புவநஜந்மஸ்தேம பங்காதி லீலே = ஜகத்ஸ்ருஷ்டி ஸம்ரக்ஷண ஸம்ஹாராதிகளை அநாயாஸமாக [விளையாட்டாக]வே நடத்துகிறவன் எம்பெருமான் என்றபடி. இந்தவிசேஷணம் ஆழ்வார்க்கும் பொருத்தமாக அந்வயிக்கின்றது. "உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாம் கண்ணன்" என்று ஆழ்வார்தாம் அருளிச் செய்தபடியே புவநஜந்மஸ்தேமபங்காதிலீலனான எம்பெருமானை அகிலமாக [எல்லாமாக]க்கொண்டவர் ஆழ்வார் என்றபடி. கீதையிலே "வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:" என்று கண்ணபிரான் இழவோடே பேசிப் போனான். அப்படி அவன் சொல்லி வாய்மூடுவதற்குள்ளே ஆழ்வார் திருவவதரித்து * எல்லாங் கண்ணன் * என்று பேசியருளினாரதலால் அந்தச் சிறப்பை உடையவர் முந்துற வெளியிடுகிறாரென்க. ஸ்ரீபாஷ்யத்தின் உபஸம்ஹாரமும் * வாஸுதேவஸ்ஸர்வமிதி * என்பதே யாதலால் அங்கும் ஆழ்வாரையே ஒருவாறு ஸ்மரித்துத் தலைக்கட்டுகின்றார் போலும். * அகிலேத்யாதியான இந்த முதல் விசேஷணத்திற்கு எல்லா வுலகங்களையும் படைத்து அளித்து அழிப்பதற்கு ஆதிகாரண பூதனான எம்பெருமானுடைய பிராட்டி நிலைமைகொண்டு லீலை புரிகின்றவர் ஆழ்வார் என்றுரைப்பாருமுளர்; * மின்னிடை மடவார்கள் முதலான திருவாய்மொழிகளில் எம்பெருமானுக்கும் ஆழ்வார்க்கும் லீலா ப்ரவ்ருத்திகள் காணத் தக்கன.

விநத விவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே = தன்னை வணங்கின பலவகைப்பட்ட ஜந ஸமூஹங்களை ரக்ஷிப்பதையே விரதமாகவுடையவன் என்று இவ்விசேஷணம் எம்பெருமானுக்கு அந்வயிப்பதுபோலவே ஆழ்வார்க்கும் பொருத்தமாக அந்வயிக்கும். எங்ஙனேயெனில்; ரக்ஷிக்கின்ற அதிகாரம் திருவடிகளுக்கே யாகும். "பிராட்டியுமவனும் விடிலும் திருவடிகள் விடாது; திண்கழலாயிருக்கும்" என்கிற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தியும் காண்க. பாதுகா ஸஹஸ்ரத்தில் [ப்ரபாவபத்ததி—42.] * ஜகதாமபிரக்ஷணே த்ரயாணா மதிகாரம் மணிபாதுகே வஹந்த்யோ:— யுவயோ: * என்ற ச்லோகத்தை ஊன்றி நோக்குமிடத்து விநத விவித பூதவ்ராத ரக்ஷைக தீக்ஷத்வம் ஆழ்வார்க்குப் பொருந்தத் தட்டுண்டோ? ஸ்ரீசடகோபனென்று வழங்குகின்ற திருவடிநிலை ஆழ்வாரில் வேறுபட்ட தன்றே.

ச்ருதி சிரஸி விதீப்தே = ச்ருதிகளின் சிரஸ்ஸாகிய உபநிஷத்துக்களில் எம்பெருமான் விளங்குபவன். இவ்விசேஷணம் ஆழ்வார்க்கும் மிகப் பொருந்தும். ச்ருதி யென்று செவிக்கினிய செஞ்சொல்லாகிய திருவாய்மொழியைச் சொல்லிற்றாய், சிரஸ்ஸென்று ஒவ்வொரு பதிகத்திலும் முடிவு பாசுரத்தைச் சொல்லிற்றாய் அதிலே நியமேந * குருகூர்ச் சடகோபன் * என வருதலால் நிகமனப்பாசுரங்களாகிய ச்ருதிசிரஸ்ஸில் ஆழ்வார் விளங்குபவர் என்றபடி. அன்றியே, திருவாய்மொழியின் தலையான ஸ்தானத்திலே கண்ணிநுண் சிறுத்தாம்பெனும் திவ்ய ப்ரபந்தம் ஸம்ப்ரதாய ப்ராப்தமாதலால் ச்ருதிசிரஸ்ஸென்று அதைச் சொன்னபடியாய் அதிலே * தேவு மற்றறியேன் * என்னும்படி விசேஷேண தீப்தர் ஆழ்வார் என்றலும் மிகப் பொருந்தும்.

ப்ரஹ்மணி = ஸ்வரூபத்தாலும் குணத்தாலும் மிகப் பெரியன் எம்பெருமான். இப்பெருமை ஆழ்வார்க்கு அற்புதமாக அமையும். எங்ஙனேயெனில்; ஆழ்வார் பெரிய

திருவந்தாதியிலே எம்பெருமானை நோக்கி ஒரு பாசுரமருளிச் செய்கிறார்; (அதாவது) * புவியுமிரு விசும்பும் நின்னகத்த, நீ யென் செவியின் வழிபுகுந் தென்னுள்ளாய்—அவிவின்றி, யான் பெரியன் நீ பெரியை யென்பதனை யாரறிவார், ஊன்பருகு நேமியாயுள்ளு.'' * இதன் பொருள் :— எம்பெருமானே! கீழுலகங்களும் மேலுலகங்களுமாகிய வெல்லாம் உன்னிடத்தேயுள்ளன; அப்படி யெல்லாவற்றையும் தாங்கிக்கொண்டிரா நின்ற நீ என்காதுவழியாக என்னுள்ளே புகுந்து பேராமலிருக்கின்றாய்; ஆனாலும் 'ப்ரஹ்மம்' என்று உனக்குப் பேராயிருக்கிறது. எது எல்லாவற்றிற்காட்டிலும் பெரிதான வஸ்துவோ அது ப்ரஹ்மமென்னத்தகும்; விபூதிகளைமாத்திரம் வஹித்துக்கொண்டிருக்கின்ற நீ பெரியவனா? அல்லது விபூதிகளை வஹிக்கிற வுன்னையுங் கூடச்சேர்த்து வஹிக்கிற நான் பெரியவனா? என்று ஆராயவேண்டாவோ? இதனை நன்கு ஆராய்ந்தால் நானே மிகப் பெரியவனாவேன்; ப்ரஹ்மமென்னும் பெயர் பெறுதற்கு நானே தகுதியுடையேனாவேன்; என்னுள்ளே ஒரு மூலையில் அடங்கிக் கிடக்கவல்ல உன்னை ப்ரஹ்மமென்று சொல்ல வொண்ணுமோ? இதனை நீயே ஆராய்ந்துபார் என்பதாம். இதன்படி ஆழ்வார்க்கு ப்ரஹ்மத்வம் சாலப் பொருந்தியதே. அன்றிக்கே * ஜந்மாத்யஸ்ய யத: * என்கிற ப்ரஹ்ம ஸூத்ரத்தின்படி ஜகத்ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹார காரணத்வமே ப்ரஹ்மலக்ஷணமாகத் தேறுதலால், ஆழ்வார் தம்மை எம்பெருமானாக அநுகரித்துப்பேசியருளும் ஒரு பதிகத்தில் "கடல் ஞாலஞ் செய்தேனும் யானே யென்னும்" என்று தொடக்கத்திலேயே அந்த ப்ரஹ்ம லக்ஷணம் தம்மிடத்துள்ளதாகக் கூறுகின்றமை கொண்டும் இதனை நிர்வஹிப்பாருளர். முந்தின நிர்வாஹமே ரஸவத்தாம்.

ஸ்ரீநிவாஸே = * அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கையுறைமார்பனாகையாலே எம்பெருமான் ஸ்ரீநிவாஸனாயினன். ஆழ்வார் ஸ்ரீநிவாஸரானபடி யெங்ஙனே யென்னில்; கேண்மின்: இலங்கைச் செல்வமனைத்தையும் விட்டிட்டுப் புகலற்று வானத்திலே வந்து நின்ற விபீஷணாழ்வானை "அந்தரிக்ஷகத: ஸ்ரீமாந்" என்றார் வால்மீகிமுனிவர். அப்போது அவ்விபீஷணரிடத்து இருந்த ஸ்ரீயாவது பகவத் பாகவத கோஷ்டியில் அந்வயிக்கப் பெறவேணுமென்றிருந்த விருப்பமே யன்றோ. அன்றியும் * குவலயத்துங்கக்கரியும் பரியுமிராச்சியமும் எங்கும் பரதற்கருளி வன் கானடையப் புறப்பட்ட இராமபிரான் பின்னே மண்வெட்டியும் கூடையுமாய்ப் புறப்பட்ட இளையபெருமாள் * லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்ந: * எனப்பட்டார். அப்போது அவர்க்கிருந்த லக்ஷ்மியாவது * ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டு மென்று கொண்ட கைங்கரியப் பாரிப்பேயன்றோ. அன்றியும் முதலையின் வாயிலே யகப்பட்டுத் துடியாநின்ற கஜேந்த்ராழ்வான் *ஸது நாகவர: ஸ்ரீமாந் * எனப்பட்டான். அப்போது அவனுக்கிருந்த ஸ்ரீயாவது எம்பெருமானை நேரில் கண்டு அவனது திருவடிகளிலே செவ்விப்பூவைப் பணிமாறவேணு மென்று கொண்டிருந்த குதுகலமேயன்றோ. இப்படிப்பட்ட ஸ்ரீயானது ஆழ்வாரையே பிறப்பிடமாகக் கொண்டதென்னுமிடம் விவரணஸாபேக்ஷமன்றே.

பவது மம பரஸ்மிந் சேமுஷீ பக்திரூபா = அந்த ஆழ்வார் திருவாய்மொழி முதற்பாசுரத்தில் * அயர்வறுமமரர்களதிபதி—மதிநலமருளினன் " * என்று தமக்குப் பரமபுருஷன் பக்திரூபமான சேமுஷியை(ஜ்ஞானத்தை)த் தந்ததாகக் கூறினர்; தேவுமற்றறியாத நான் அவ்வாழ்வாரையே பரமபுருஷனாகக் கொண்டுள்ளதலால் இவர்திறத்திலே எனக்கு மதிநலம் விளையக்கடவது—என்று எம்பெருமானார் பிரார்த்தித்தாராயிற்று.

## நம்மாழ்வார்க்குப் பிராட்டியோடு ஒப்பு.

நம்மாழ்வார்க்குத் திருவாய்மொழியில் செல்லும் அநுபவப்ரகாரங்களை நோக்குமிடத்து, ஏற்கெனவே விபவாவதாரத்தில் ஈடுபட்டிருந்த பலபல பக்தர்களுடையவும் பாவபந்தம் ஆழ்வார்க்கு உண்டென்னுமிடம் நன்கு தெரிகின்றது. இது தன்னை ஆழ்வார் தாமே தமது திருவாக்கினால் *பின்னைகொல் நிலமாமகள் கொல் திருமகள்கொல் பிறந்திட்டாள்! *

என்று தோழிபாசுரமாக வெளியிட்டுள்ளார். பின்னை, நிலமகள், திருமகள் என்று மூன்று திரு
நாமங்களைச் சொன்னது உபலக்ஷணமாய், லக்ஷ்மணன், பரதன், சத்ருக்னன், திருவடி,
விபீஷணன், ப்ரஹ்லாதன், பார்த்தன்—முதலான மற்றும் பல அன்பர்களுடையவும் பாவ
பந்த முடையாரென்பது காட்டப்பட்டதாகும். ஸீதாபிராட்டிக்கும் ஆழ்வார்க்கு முண்
டான வொற்றுமை இப்போது நிரூபிக்கப் படுகின்றது. ஸ்ரீராமாயண ச்லோகங்களுக்கும்
திருவாய்மொழிப் பாசுரங்களுக்குமுண்டான ஐகாஸ்யம் இங்கு அநுபவிக்கத் தக்கது.

பெருமானைப் பிரிந்து தாம் தரித்திருக்கமாட்டாமையைக் கூறுகின்ற இளைய பெரு
மாள், *நச ஸீதா த்வயா ஹீநா நசாஹமபி ராகவ!, முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந்மத்ஸ்யா
விவோத்ருதௌ* என்றுபிராட்டியையும் கூட்டிக் கொண்டு பேசியிருக்கிறபடியே நீரில் நின்று
மெடுக்கப்பட்ட மீன்போலே பெருமானை விட்டுப் பிரியில் ஸத்தாஹாநி பிறக்கும்படியா
யிருந்தாள் பிராட்டி ; ஆழ்வாரும் *மராமரமெய்த மாயவன் என்னுள்ளிரானெனில் பின்னை
யான் ஒட்டுவேனோ* என்று ஸப்தஸால பங்கம் செய்தருளின சக்ரவர்த்தித் திருமகனோடே
கூடியிருப்பு இல்லையாகில் தமக்கு ஸத்தையில்லை யென்றிருந்தார்.

பிராட்டி வநவாஸப் புறப்பாட்டிலே பெருமானோடே கூடப்பெற்றுப் போலே, ஆழ்
வாரும் * இலங்கை செற்றாய் ! உன்னையென்னுள்ளே குழைத்த வெம்மைந்தா * என்று பெரு
மாள் தம்மோடே ஏகதத்வமென்னலாம்படி குழைந்து நிற்கப் பெற்றார்.

பிராட்டி பெருமானைப் பிரிந்து இலங்கை புகுந்தவளவிலே அந்த லங்காபுரிவரையிலும்
அவன் பெருமானாலே பின் தொடரப்பெற்றது போல, ஆழ்வாரும் *எதிர் சூழல் புக்
கெனைத்தோர் பிறப்பும் எனக்கேயருள்கள் செய்ய விதி சூழ்ந்ததால் * என்று தாம்பிறந்த
பிறப்புக்களிலெல்லாம் எம்பெருமான் பின்தொடரும்படி பெற்றார்.

பிராட்டி ராவணக்ருஹத்திலே சிறையிருந்தாப் போலே ஆழ்வாரும் ஸம்ஸாரத்திலே
சிறையிருந்தார். தேவமாதர் சிறையை விடுவிக்கைக்காகப் பிராட்டி லங்கையிலே தனிச்
சிறையிருந்தாள். ஸம்ஸாரிகளின் சிறையை விடுவிக்கைக்காக ஆழ்வார் சிறை
யிருந்தார். * அறுவர் தம்பிறவியஞ்சிறையே.*

பிராட்டி சிறையிருந்த காலத்துப் ப்ரதிகூலனான ராவணனுக்கும் * விதிதஸ் ஸ ஹி தர்
மஜ்ஞ: சரணாகத வத்ஸல:, தேந மைத்ரீ பவது தே யதி ஜீவிதுமிச்சஸி* என்று ஹிதஞ்
சொன்னாள். ஆழ்வாரும் ப்ரதிகூலரான ஸம்ஸாரிகளுக்கும் *புணைவன் பிறவிக் கடல்
நீந்துவார்க்கே* சொன்னால் விரோதமிது ஆகிலுஞ் சொல்லுவன் கேண்மினோ என்பது
முதலான பாசுரங்களினால் ஹிதமருளிச் செய்தார்.

பிராட்டி *நஹி மே ஜீவிதேநார்த்தோ நைவார்த்தைர் ந ச பூஷணை:, வஸந்த்யா ராக்ஷ
ஸீமத்யே விநா ராமம் மஹாரதம்* என்று பெருமானையொழிய ராக்ஷஸிகளின் நடுவே யிருக்
கிறவெனக்குப் பிராணன் முதலியவற்றால் என்ன ப்ரயோஜனமென்று அவற்றையுபேக்ஷித்
தாள். ஆழ்வாரும் *ஏறாளுமிறையோனும்* என்கிற திருவாய்மொழியிலே *மாறாளன்
கவராத மணிமாமை குறைவிலமே* மடநெஞ்சால் குறைவிலமே* நிறைவினால் குறைவிலமே*
*தளிர் நிறத்தால் குறைவிலமே* அறிவினால் குறைவிலமே* கிளரொளியால் குறைவிலமே*
*வரிவளையால் குறைவிலமே*மேகலையால் குறைவிலமே* உடம்பினால் குறைவிலமே* உயிரி
னால் குறைவிலமே* என்று எம்பெருமானுக் குதவப்பல்லாத நானும் என்னுடைமையும்
வேண்டா வென்று ஆத்மாத்மீயங்களை உபேக்ஷித்தார்.

பிராட்டி ராவண பவனத்திலே *விஷஸ்ய தாதா நஹி மேஸ்தி கச்சித் சஸ்த்ரஸ்ய வா
வேச்மநி ராக்ஷஸஸ்ய* என்று மரணோபாயங்களைச் சிந்தித்தாள். ஆழ்வாரும் ராவண பவந
துல்யமான ஸம்ஸாரத்திலே பிரிவாற்றாது *மாயும் வகையறியேன் வல்வினையேன் பெண்
பிறந்தே * என்று தாம் முடியும் வகைதேடினார்.

பிராட்டி *ஹா ராம! ஸத்யவ்ரத! தீர்க்கபாஹோ! ஹா பூர்ணசந்த்ரப்ரதிமாநவக்த்ர* என்று பெருமாளுடைய பெருமைகளைச் சொல்லிக் கதறினாள். ஆழ்வாரும் *புணரா நின்ற மரமேழன்றெய்த ஒரு வில் வலவா வோ!* என்று அவனுடைய வீரப்பாடுகளைச் சொல்லிக் கூப்பிட்டார்.

பிராட்டி *க்யாத: ப்ராஜ்ஞ: க்ருதஜ்ஞச் ச ஸாநுக்ரோசச் ச ராகவ:, ஸத்வ்ருத்தோ நிரநுக்ரோச: சங்கே மத்பாக்ய ஸம்க்ஷயாத்* என்று பெருமாளை அருளில்லாதவராக அதிசங்கித்தாள். ஆழ்வாரும் *இரக்கமெழீர் இதற்கென்செய்கேன்? அரக்கனிலங்கை செற்றீருக்கே* என்றும், *இலங்கைக் குழா நெடுமாட மிடித்த பிரானார் கொடுமைகளே* என்றும் *அறிவோன்றும் சங்கிப்பன் வினையேன்* என்றும் எம்பெருமானை இரக்கமெழாக் கொடுமையுடையவனாகச் சங்கித்தார்.

பிராட்டி *ஜீவந்தீம் மாம் யதா ராம: ஸம்பாவயதி கீர்த்திமாந், தத் த்வயா ஹநுமந்! வாச்யோ வாசா தர்மமவாப்நுஹி* என்று பெருமாளுடைய ரக்ஷ்யவர்க்கத்திலே நானுமொருத்தியிருப்பதாக அவர்க்கு விண்ணப்பம் செய் என்று ஆள்விட்டாள். ஆழ்வாரும் *மாறில் போரரக்கன் மதிள் நீறெழச் செற்றுகந்த ஏறு சேவகனார்க்கு என்னையுமுளளென்மின்களே* என்று சொல்லித் தூது விட்டார்.

பிராட்டி *அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா* என்று ஆதித்யனோடு ப்ரபைபோலே நான் பெருமாளோடு ஒற்றுமைப் பட்டிருப்பேன் என்றாள். ஆழ்வாரும் *சோர்ந்தே புகல் கொடாச் சுடரை அரக்கியை மூக்கீர்ந்தாயை அடியேனடைந்தேன் முதல் முன்னமே* என்று சேஷத்வத்தாலே எம்பெருமானோடு தாம் நித்ய ஸம்யுக்தரென்பதைப் பேசினார்.

பிராட்டி *அகலகில்லேனிறையு மென்று அலர்மேல் மங்கை யுறைமார்பா* என்கிறபடியே எம்பெருமானை க்ஷணகாலமும் பிரிந்திருக்கமாட்டாத தன்மையை யுடையளாயிருப்பது போல, ஆழ்வாரும் *அந்தோ வடியேனுனபாதம் அகலகில்லேனிறையுமே* என்று பேசினார். ஆக இவ்வகைகளாலே ஆழ்வார்க்குப் பிராட்டியோடு ஸாம்யம் ஆசார்ய ஹ்ருதயத்தில் நிரூபித்தருளின கட்டளை.

## 27. பட்டர்.

ஸ்ரீபராசரபட்ட ரென்பது இவ்வாசிரியருடைய முழுத்திருநாமம். வைகாசியனுஷத்தில் கூரத்தாழ்வானுடைய திருக்குமாரராகத் தோன்றின இவர் எம்பெருமானாருடைய ஸ்தானத்தில் அபிஷிக்தர். அவ்வெம்பெருமானார்தாமும் கண்டுவியந்த அபரிமிதமான பாண்டித்யமும் ரஸிகத்வமும் பொலிந்தவரிவர். இவருடைய பெருமைகளைப் பலமுகமாக அநுபவித்தாலும் த்ருப்திபிறவாது. இவர் அருளிச்செய்த க்ரந்தங்களுள் ஸஹஸ்ரநாம பாஷ்யமொன்றே இவருடைய ஸர்வஜ்ஞதையைத் தெரிவிக்கவல்லது. அதன்பெருமையைப் பங்குனித்திங்களநுபவத்திலேயே ப்ரஸங்காத் பேசினோம் இப்போது இங்கு இவருடைய குணாநுபவம் * த்வம்மேஹம்மே ச்லோக விவரணமுகத்தால் செய்பபடுகிறது.

## நம்பெருமாள் திருமஞ்சனமும் பட்டர் ஈடுபாடும்

பட்டர் கோயிலில் வாழும் நம்பெருமாளுடைய திருமஞ்சனங்களை ஸேவிக்கும் காலங்களில் அந்த ஸந்நிவேசத்தில் ஈடுபட்டும் வடிவழகில் ஈடுபட்டும் சமத்காராதிசயம் பொலியப் பலச்லோகங்களை அருளிச் செய்திருக்கிறார். அவை நாளைக்கும் அவருடைய திருவம்சஸ்தர்களால் திருமஞ்சன ஸமயங்களில் விண்ணப்பம் செய்யப்பட்டு வருகின்றன.

அவர்தாம் * த்வம் மே அஹம்மே * என்கிற ஒரு ச்லோகம் மிகவும் அற்புதமாக அமைந்தது. இதனை நம் ஆசாரியர்கள் வியாக்யான க்ரந்தங்களிலே கையாண்டு வருகின்றனர். இதன் அரிய பெரிய பொருள் இங்கு விவரிக்கலாகிறது. ஸ்ரீ ரங்கநாதன் தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாய் மாலையையுடையனாய்த் திருமஞ்சனங் கொண்டருள ஸந்நத்தராயிருக்கும் படியைப் பார்த்தால் பிரமாணம் செய்ய ஸித்தராயிருக்கிறாரோ என்று உத்ப்ரேக்ஷிக்கலாம்படியுள்ளது என்று பட்டர் திருவுள்ளம் பற்றுகிறார். உலகத்தில் பிரமாணம் செய்பவர்கள் துளசி மாலை யணிந்துகொண்டு ஒரு முழுக்குப் போடுவது வழக்கமாதலால் எம்பெருமானும் அங்ஙனே செய்கிறானே என்று உல்லேகிக்கிறார். பிரமாணம் செய்யவேண்டிய அவசியம் எம்பெருமானுக்கு என்ன வந்தது என்னில், உலகத்தில் பிரமாணம் செய்பவர்கள் எதற்காகச் செய்வது வழக்கம் என்று பார்த்தால், ஒருவன் தன்னுடைய ஸொத்தைப் பிறன் கொள்ளை கொண்டால் அதைத் தனக்கு ஸ்வாதீனப் படுத்தித் தரவேணுமென்று நியாயாலயத்தில் விண்ணப்பம் செய்துகொண்டு உண்மையில் அந்த ஸொத்து யாருடையது என்று தெரிந்து கொள்வதற்காக ஸாக்ஷி விசாரணை முதலியன செய்யப்படுங் காலத்திலே தகுந்த ஆதாரங்களைக்கொண்டு உண்மையை ஸ்தாபித்துக்கொள்ள முடியாமல் அந்தோ! நம்முடைய ஸொத்தை அநியாயமாக இழந்துவிட நேருகின்றதே! என்கிற அநுதாப முடையார் கடைசியாக ஒரு வார்த்தை சொல்லுவதுண்டு. "இது என்னுடைய ஸொத்துதான் என்று பிரமாணம் செய்ய நான் துளசிமாலை யணிந்து முழுக்கிட்டு விடுகிறேன்; நியாயாதிபதிகள் அதுகொண்டாவது உண்மை யுணரவேண்டும்" என்பார்கள், இது இன்னமும் நியாயாதிகாரிகளும் அதனை ஆதரித்துத் தீர்ப்புக் கொடுப்பதுண்டு. இது இன்னமும் வழக்கத்திலுள்ளது. இவ்விதமாகவே எம்பெருமானுக்கும் பிரமாணம் செய்யவேண்டிய ஆவச்யகதை நேர்ந்து விட்டதாம். அது எங்ஙனில், சேதநவர்க்கம் என்கிற ஸொத்து எம்பெருமானுடையது; ஆனால் அந்த ஸொத்தை "பண்டே யுன்தொண்டாம் பழவுயிரை யென்னதென்று கொண்டேன்" என்கிறபடியே ஸம்ஸாரிகள் கொள்ளை கொண்டார்கள். இந்த ஸொத்து என்னுடையது என்கிறான் எம்பெருமான். ஸம்ஸாரிகளோ 'இது உன்னுடையதல்ல, எங்களுடையதே' என்கிறார்கள். விவாதம் முற்றிவிட்டது. ஸம்ஸாரிகள் அடாவடியில் பலிஷ்டர்களாகையாலே அவர்களுடைய வாதமே மேம்பட்டு எம்பெருமானுடைய வாதம் தோல்வி யடையும்படியான நிலைமையிலே வந்துவிட்டது; அந்தோ! அந்யாயமாய் நம்முடைய ஸொத்தை இழந்துவிட நேருகின்றதே! என்கிற பரிதாபம் எம்பெருமானுக்கு உண்டாய் விட்டது. 'இந்த ஸொத்து என்னுடையதுதான் என்று பிரமாணம் செய்தாகிலும் இதனை நாம் இழவாமல் அடைந்தே தீரவேண்டும்' என்கிற அபிநிவேசம் எம்பெருமானுக்கு உண்டாய் விட்டது. அது துளசிமாலை யணிந்து முழுக்கிட்டுச் செய்யவேண்டிய காரியமாதலால் இந்தத் திருமஞ்சனமென்கிற வியாஜத்தாலே அது செய்யப்படுகிறது போலும் என்பது பட்டருடைய உல்லேக சமத்காரம்.

ஈச்வரனுக்கும் சேதநனுக்கும் நடந்த விவாதம் ஒரு ஸம்வாத ரூபமாக இந்த ச்லோகத்தில் அழகாய்க் காட்டப்படுகிறது. ச்லோகம் வருமாறு :—

த்வம் மேஅஹம் மே குதஸ் தத் ததபி குத இதம் வேதமூலப்ராமாணாத்,
ஏதச்சாநாதி ஸித்தாதநுபவவிபவாத் ஸோபி ஸாக்ரோச ஏவ,
க்வாக்ரோச: கஸ்ய கீதாதிஷு மம விதித: கோத்ர ஸாக்ஷீ ஸுதீஸ் ஸ்யாத்
ஹந்த த்வத்பக்ஷபாதீ ஸ இதி ந்ருகலஹே ம்ருக்யமத்யஸ்தவத் த்வம்.

இதன்பொருள் சுருக்கமாகக் காட்டப்படுகிறது:—

த்வம் மே - இது எம்பெருமான் ஸம்ஸாரிசேதநனை நோக்கிச் சொல்லும் வார்த்தை. சேதநா! நீ என்னுடைய சரக்கு என்றானெம்பெருமான். அதாவது நீ எனக்கு அடிமைப்

பட்டவனென்றபடி. சேதநன் ஸ்வாதந்திரியம் பாராட்டி வணங்காமுடிமன்னனாய்க் கிடந்தபடியாலே எம்பெருமான் இந்தவார்த்தை சொல்லவேண்டியதாயிற்று.

அஹம் மே - அதற்கு ஸம்ஸாரி பதில் சொல்லுகிற வார்த்தை இது. நான் உனக்கு அடிமைப் பட்டவனல்லேன், எனக்கு நானே அடிமை என்றான் ஸம்ஸாரி. எம்பெருமான் "த்வம் மே [illegible] போலே ஸம்ஸாரியும் பதிலுக்கு 'த்வம் மே' [illegible] ஏன் சொல்லவில்லை? 'நானே உனக்கு அடிமைப்பட்டவன், நீ தான் [illegible] அடிமைப் பட்டவன் [illegible] ஸம்ஸாரி சொல்லியிருக்கலாமே? [illegible] சொல்லவில்லை என்னில், [illegible] பதில் ஸம்ஸாரி சொல்லியிருந்தானாகில் [illegible] பேறு பெற்றவனாயினன்; தான் சேஷியாயிருப்பதிலுங் [illegible] மிகவும் குதூஹலமுடையானன்றோ அவன். [illegible] தனக்கு ஸம்பந்தம் ஏற்பட்டால் போதும் என்று பாரிப்பவனன்றோ அவன்; சேஷியாகவே தானிருக்கவேணுமென்கிற எண்ணம் இல்லைப் அவனுக்கு. ஸம்ஸாரிகள் தன்னோடு உறவை அறுத்துக்கொண்டு பாராமல் தன்னை அடியவனாகக்கொண்டு [illegible] பரமிருப்பி பெறுபவனன்றோ அவன். அது தான் [illegible] 'த்வம் மே' என்று ஸாவசேஷமாய்க் கிடக்கிறது. த்வம் மே தாஸ: என்றோ த்வம் மே ப்ரபு: என்றோ விவக்ஷித்துச் சொன்னபடி. ஏதேனுமொரு படிக்கு ஸம்ஸாரி இசைந்திடுவனோ என்று பார்த்தான் எம்பெருமான். ஸம்ஸாரி மஹாசதுரனாகையாலே இவனோடு நமக்கு [illegible]மான உறவும் வேண்டியதில்லை; அவன் தமக்கு அடியவனாக இருக்க இசைந்தாலும் அதற்கும் நாம் இசையலே கூடாது; அடியவன்போலே இருந்து காலக்ரமத்தில் நம்மையே அடிமைப்படுத்திக்கொள்ளவல்ல கிறியான் அவன்; ஆதலால் அவனுடைய எல்லையிலும் நாம் செல்லாமல் இருந்துவிடுவதே நமக்குத் தகுதி என்று ஸம்ஸாரி நினைத்தானாகையாலே அஹம் மே என்று, எம்பெருமானுக்குப் பிடிகொடாமலே விடையளித்து விட்டான். இவனும் த்வம் மே என்று பதில் சொல்லி யிருந்தானாகில் அவனோடு விவாதம் சாந்தமாகியிருக்குமே; எம்பெருமானே வெற்றி பெற்றானாய்விடுவனே. அதற்கு ஸம்ஸாரி இடம் தரவில்லை.

குதஸ் தத் — (தத் குத:?) 'அஹம் மே' என்று சொன்ன ஸம்ஸாரியை நோக்கி எம்பெருமான் கேட்கிறான். எதனால் நீ அப்படிச் சொல்லுகிறாய்? என்று.

தத் அபி குத:? நீ த்வம் மே என்று சொன்னாயே, அது எதைக்கொண்டு சொன்னாய்? என்று ஸம்ஸாரியின் பதில்கேள்வி இது.

இதம் வேதமூலப்ரமாணாத்—சேதநா! வேதமாகிற மூலப்பிரமாணத்தைக்கொண்டு நான் த்வம் மே என்று சொன்னேன் என்கிறவிது எம்பெருமானுடைய பதில்.—" *பதிம் விச்வஸ்யாத்மேச்வரம் "* இத்யாதிப்ரமாணங்கள் இங்குக் கொள்ளத்தக்கன.

ஏதச்ச அநாதிஸித்தாத் அநுபவவிபவாத்—(இது ஸம்ஸாரியின் பதில் வார்த்தை.) நீ சொல்லுகிற ப்ரமாணம் ஓலைப்பட்ட ப்ரமாணமாகையாலே வெளிக்கு வரமாட்டாதது; அஹம் மே என்று சொன்ன எனக்கு ஸாதகமான ப்ரமாணம் அப்படிப்பட்டதன்று. அநாதிகாலமாக ஸ்வாதந்திரியத்தை நான் அநுபவித்துக்கொண்டு வருவதால், அநுபவமே ப்ரபல ப்ரமாணமாகையால் இதனால் உன்னுடைய வேதம் அடிபட்டொழிந்தது என்றான். உலகத்திலும் ஒரு க்ருஹம் ஒருவனுடையதென்று சாஸனபத்திரங்கள் இருந்தாலும் நெடுநாளாக அந்த க்ருஹத்தை வேறொருவன் அநுபவித்துவந்தால் அவனே அதற்குச் சொந்தக்காரனாக ஆய்விடுவன் என்றும், உண்மையான உடையவன் இழந்துபோய்விடுவான் என்றும் காண்கிறோம். அதுபோல், எம்பெருமானே உடையவனென்று சாஸநமிருப்பினும் அநாதியான அநுபவம் ஸம்ஸாரியினுடையதாகையாலே அந்த சாஸநம் துர்பலமாக இவனால் நிரூபிக்கப்பட்டது: ஸம்ஸாரியும் கிரமமான வழியிலேயே வழக்காடுகிறான் போலும்.

ஸோபி ஸாக்ரோச ஏவ—(அதற்கு எம்பெருமானுடைய பதில் இது.) சேதநா! நெடுங்காலமாக உனக்கு ஸ்வாதந்த்ரிய அநுபவம் உண்டென்பது உண்மையே; அதை நான் அட

பட்டவனென்றபடி. சேதநன் ஸ்வாதந்த்ரியம் பாராட்டி வணங்காமுடிமன்னனாய்க் கிடந்த படியாலே எம்பெருமான் இந்தவார்த்தை சொல்லவேண்டியதாயிற்று.

அஹம் மே - அதற்கு ஸம்ஸாரி பதில் சொல்லுகிற வார்த்தை இது. நான் உனக்கு அடிமைப்பட்டவனல்லேன், எனக்கு நானே அரசன் என்றான் ஸம்ஸாரி. எம்பெருமான் "த்வம் மே" என்றது போலே ஸம்ஸாரியும் பதிலுக்கு 'த்வம் மே' என்னலாமே; அப்படி ஏன் சொல்லவில்லை? 'நானா உனக்கு அடிமைப்பட்டவன்? நீதான் எனக்கு அடிமைப் பட்டவன்' என்று ஸம்ஸாரி சொல்லியிருக்கலாமே; ஏன் அங்ஙனம் சொல்லவில்லை என்னில், இப்படிப்பட்ட பதில் ஸம்ஸாரி சொல்லியிருந்தானாகில் எம்பெருமான் பெறும் பேறு பெற்றானவனே; தான் சேஷியாயிருப்பதிலுங்காட்டில் சேஷபூதனாயிருந்திருப்பிலே மிகவும் குதூஹலமுடையானன்றோ அவன். ஏதேனுமொருபடியாலே சேதநனோடு தனக்கு ஸம்பந்தம் ஏற்பட்டால் போதும் என்று பாரிப்பவனன்றோ அவன்; சேஷியாகவே தானிருக்கவேணுமென்கிற எண்ணம் இல்லையே அவனுக்கு. ஸம்ஸாரிகள் தன்னோடு உறவை அறுத்துக்கொண்டு போகாமல் தன்னை அடியவனாகக்கொண்டு பரிமாறினாலும் பரமதிருப்தி பெறுபவனன்றோ அவன். அதுதான்றவன்றோ 'த்வம் மே' என்று ஸாவசேஷமாய்க் கிடக்கிறது. த்வம் மே தாஸ: என்றோ த்வம் மே ப்ரபு: என்றோ விவக்ஷித்துச் சொன்னபடி. ஏதேனுமொருபடிக்கு ஸம்ஸாரி இசைந்திடுவனோ என்று பார்த்தான் எம்பெருமான். ஸம்ஸாரி மஹாசதுரனாகையாலே 'இவனோடு நமக்கு எவ்விதமான உறவும் தேவையில்லை; அவன் நமக்கு அடியவனாக இருக்க இசைந்தாலும் அதற்கும் நாம் இசையவே கூடாது; அடியவன்போலே இருந்து காலக்ரமத்தில் நம்மையே அடிமைப்படுத்திக்கொள்ளவல்ல கிறியான் அவன்; ஆதலால் அவனுடைய எல்லையிலும் நாம் செல்லாமல் இருந்துவிடுவதே நமக்குத் தகுதி' என்று ஸம்ஸாரி நினைத்தானாகையாலே அஹம் மே என்று, எம்பெருமானுக்குப் பிடிகொடாமலே விடையளித்து விட்டான். இவனும் த்வம் மே என்று பதில் சொல்லி யிருந்தானாகில் அவ்வளவோடு விவாதம் சாந்தமாகியிருக்குமே; எம்பெருமானே வெற்றி பெற்றானாய்விடுவனே. அதற்கு ஸம்ஸாரி இடம் தரவில்லை.

குதஸ் தத் – (தத் குத:?) 'அஹம்மே' என்று சொன்ன ஸம்ஸாரியை நோக்கி எம்பெருமான் கேட்கிறான். எதனால் நீ அப்படிச் சொல்லுகிறாய்? என்று.

தத் அபி குத:? நீ த்வம் மே என்று சொன்னாயே, அது எதைக்கொண்டு சொன்னாய்? என்று ஸம்ஸாரியின் பதில்கேள்வி இது.

இதம் வேதமூலப்ரமாணாத்—சேதநா! வேதமாகிற மூலப்பிரமாணத்தைக்கொண்டு நான் த்வம் மே என்று சொன்னேன் என்கிறவிது எம்பெருமானுடைய பதில்.—" *பதிம் விச்வஸ்யாத்மேச்வரம்"* இத்யாதிப்ரமாணங்கள் இங்குக் கொள்ளத்தக்கன.

ஏதச்ச அநாதிஸித்தாத் அநுபவவிபவாத்—(இது ஸம்ஸாரியின் பதில் வார்த்தை.) நீ சொல்லுகிற ப்ரமாணம் ஓலைப்பட்ட ப்ரமாணமாகையாலே வெளிக்கு வரமாட்டாதது; அஹம் மே என்று சொன்ன எனக்கு ஸாதகமான ப்ரமாணம் அப்படிப்பட்டதன்று. அநாதிகாலமாக ஸ்வாதந்த்ரியத்தை நான் அநுபவித்துக்கொண்டு வருவதால், அநுபவமே ப்ரபல ப்ரமாணமாகையால் இதனால் உன்னுடைய வேதம் அடிபட்டொழிந்தது என்றான். உலகத்திலும் ஒரு க்ருஹம் ஒருவனுடையதென்று சாஸனபத்திரங்கள் இருந்தாலும் நெடுநாளாக அந்த க்ருஹத்தை வேறொருவன் அநுபவித்துவந்தால் அவனே அதற்குச் சொந்தக்காரனாய்விடுவன் என்றும், உண்மையான உடையவன் இழந்துபோய்விடுவான் என்றும் காண்கிறோம். அதுபோல், எம்பெருமானே உடையவனென்று சாஸநமிருப்பினும் அநாதியான அநுபவம் ஸம்ஸாரியினுடையதாகையாலே அந்த சாஸநம் துர்பலமாக இவனால் நிரூபிக்கப்பட்டது: ஸம்ஸாரியும் க்ரமமான வழியிலேயே வழக்காடுகிறான் போலும்.

ஸோபி ஸாக்ரோச ஏவ—(அதற்கு எம்பெருமானுடைய பதில் இது.) சேதநா! நெடுங்காலமாக உனக்கு ஸ்வாதந்த்ரிய அநுபவம் உண்டென்பது உண்மையே; அதை நான் அ

லபிக்கவில்லை. ஆனால் அந்த அநுபவம் நிராக்ஷேபமாக இருந்தாலன்றோ செல்லும். அப்படியில்லையே. உனது அநுபவம் ஆக்ஷேபத்தோடு கூடியதாயிற்றே! அதனை நீ சொல்லிக்கொள்வதனால் உனக்கு லாபமில்லையே என்றானெம்பெருமான். உலகத்திலும் ஒரு க்ருஹத்தைப் பிறன் ஒருவன் நெடுநாளைய அநுபவத்தில் வைத்துக் கொண்டிருந்தாலும் அந்த அநுபவத்தை அடிக்கடி சொந்தக்காரன் ஆக்ஷேபித்துக் கொண்டிருந்ததாகப் புலப்பட்டு விட்டால் அவ்வநுபவம் செல்லமாட்டாதென்பது ப்ரஸித்தம்.

ஆக்ரோச: க்வ? கஸ்ய ஆக்ரோச:?—(இது ஸம்ஸாரியின் வினா) என்னுடைய ஸ்வாதந்திரியாநுபவம் ஆக்ஷேபத்தோடு கூடியதென்று நீ சொன்னாய்; அப்படிச் சொல்லிவிட்டால் போதுமா? ஆக்ஷேபம் செய்திருப்பது யார்? ஆக்ஷேபம் எவ்விடத்தில் செய்யப்பட்டிருக்கிறது? அதையெல்லாம் விசதமாகச் சொன்னாலல்லவோ உன்னுடைய வாதம் ஏறும்.

கீதாஸு மம விதித:— (இது எம்பெருமானுடைய மறுமொழி.) க்வ என்று கேட்டதற்கு ‘கீதாஸு’ என்பது பதில். கஸ்ய என்று கேட்டதற்கு ‘மம’ என்பது பதில். சேதநா! பகவத்கீதை முதலானவற்றிலே (உன் ஸமூஹத்தில் தலைவனான அர்ஜுனனென்றொருவனை வைத்துக்கொண்டு) சேதநஸ்வாதந்திரியத்தை நான் ஆக்ஷேபித்திருக்கிறேனென்பதை நாடு நகரமும் நன்கறியும். என்றைக்கோ ஒருநாள் ஏதோவொரு மூலையிலே நீ ஆக்ஷேபித்திருந்தால் அது செல்லுமோவென்று ஸம்ஸாரி சொல்லுவதற்கு இடமில்லாதபடி ‘விதித:’ எனப்பட்டது. இதை நடையாடாத இடமில்லை; இதற்கு ப்ரசாரமில்லாத காலமுமில்லை;. இதனைத் தெரிந்து கொள்ளாத வ்யக்தியுமில்லை என்ற அபிப்ராயங்கள் இச்சொல்லில் பொதிந்துள.

அத்ர க: ஸாக்ஷீ—(இது ஸம்ஸாரியின் கேள்வி.) வ்யவஹாரம் என்று வந்துவிட்டால் ஸாக்ஷிவிசாரணை இருந்தே தீரவேண்டும். எத்தனை சாஸநபத்திரங்கள் இருந்தாலும் ஸாக்ஷிகளைக்கொண்டு நிரூபிக்கவேண்டியது முறைமை. உனக்கு ப்ரமாணமான வேதங்களும் கீதை முதலியனவும் கிடக்கட்டும். பெட்டியின்மீது ஏறிச் சொல்லுவதற்கு ஒரு ஸாக்ஷி வேணுமே. யார் ஸாக்ஷி? என்கிறான் ஸம்ஸாரி. எம்பெருமான் தவிர மற்ற எல்லாச் சேதநர்களும் ஸம்ஸாரிகளே யாதலால், 'அவர்களும் அஹம்மே என்றிருப்பவர்களேயாதலால் இவனுக்கு ஸாக்ஷிகள் எங்ஙனம் கிடைக்கப் போகிறார்களென்பது சேதநனுடைய எண்ணம். எம்பெருமானுடைய பாக்யத்தாலே ஸம்ஸாரிகளினிடையே முமுக்ஷுக்களும் சிலர் இருப்பதால் அவர்கள் தனக்கு ஸாக்ஷிகளாக இருக்கத் தகுதியுடையார் என்றெண்ணின எம்பெருமான் ஸாக்ஷீ: ஸ்யாத் என்றான். ஞானிகளெல்லாரும் என்பக்ஷத்தில் ஸாக்ஷிகளாக நிற்கக்கூடும் என்றபடி. (ஸாக்ஷீ: என்பதை ஜாத்யேகவசநமாகக் கொள்க.) அஸ்தி என்று உறுதியாகச் சொல்லாமல் ஸ்யாத் என்று சொன்னது ஏனெனில், இவ்விருள் தருமா ஞாலமானது ப்ரஹ்லாதாழ்வானையு முட்பட எதிரம்பு கோக்கப் பண்ணின தாகையாலே ஞானிகளும் ஸமயத்திலே நம்மைக் கைவிடும்படி நேர்ந்துவிடுமோ என்னவோ என்கிற அதிசங்கை தோன்றி அதை ஸ்யாத் என்பதனால் காட்டினனென்க. “விண்ணுளார் பெருமாற்கு அடிமை செய்வாரையும் செறும் ஐம்புலனிவை” ஆதலால் யாரையும் நம்புவதற்கில்லையே என்றெண்ணினான் போலும்.

ஹந்த! த்வத்பக்ஷபாதீ ஸ:—(இது ஸம்ஸாரியின்பதில்.) ஸாக்ஷிகள் மத்யஸ்தர்களாக இருக்கவேண்டும். உறவினர்களையே கொண்டு சொல்லுவிக்கப்படுகிற ஸாக்ஷியம் உபயோகப்படாது. ஞானிகளை ஸாக்ஷியாகச் சொன்னது பொருந்துமோ? “ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்” என்று கீதையில் நீயே சொல்லியிருக்கிறாயே; உனது உயிர் நிலையாகவன்றோ ஞானிகள் இருப்பது. வாதியே ஸாக்ஷி என்று சொன்னதாகத் தேறிற்றேயல்லது பிறனொருவன் ஸாக்ஷியாகக் கூறப்பட்டானில்லையே என்றான் ஸம்ஸாரி.

இதற்குமேல் எம்பெருமான் என்ன செய்வான்! ஸம்ஸாரிகள் யாவரும் பிரதிவாதிகளாக ஆய்விட்டபடியால் அவர்களில் ஒருவரும் ஸாக்ஷிகளாக இல்லார். முமுக்ஷுக்களோ

இவ்வகையாகப் பார்க்குமிடத்தில் ஆனி என்கிற தமிழ் மாதப் பெயர்க்கு மூலமான வடசொல் ஏது? என்று ஆராயவேணும். வடமொழியில் வைசாக மென்றதற்கு அடுத்த படியாக ஜ்யேஷ்ட மென்றே வழங்கப்பட்டு வருகிறது. அச்சொல்லுக்கும் ஆனி யென்கிற சொல்லுக்கும் ஒரு ஸம்பந்தமும் காண முடியாது. மற்ற பதினொரு மாதங்களின் பெயர்களும் ஒத்திருக்க, இவ்வொரு மாதத்தின் பெயர் மாத்திரம் ஒத்திராமற் போனது ஏன்? எதைக் கொண்டு ஆனி யென்று பெயர் வழங்கி வருகின்றது? என்று ஆராயப் புகுந்தேன்.

வடமொழி வியாகரணத்தில் ஆதேச மென்று ஒன்றுண்டு; ஒரு பதத்தைத் தள்ளி அதன் ஸ்தானத்தில் மற்றொரு பதம் (ஸம்பந்த மின்றியே) வந்து நிற்கும். ஒன்று காண்மின். ப்ராக்ருத பாஷை யென்பது ஸம்ஸ்க்ருத பாஷையின் சிதைவு தான். வடமொழியில் ஏகம் என்பது ப்ராக்ருதத்தில் எக்கம் என்றாகும். ஈஷத் என்பது இஸி என்றாகும். ஏவ என்பது எவ்வ என்றாகும். இங்ஙனேயாவது தவிர, ஸம்ஸ்க்ருதத்தோடு ஸம்பந்தமே யில்லாமல் ஆதேசமாக வேறொரு பதம் வந்து நிற்பதுமுண்டு. நீலோத்பலம் என்கிற வடசொல்லுக்கு ப்ராக்ருதத்தில் (கந்தோட்டம்) என்பது ஆதேசமாம். ஜாநகீபரிணய நாடகத்தில்—(கந்தோட்ட ஸாமளங்கோ) என வருதல் காண்க. நீலோத்பலச்யாமலாங்க: என்றபடி. நீலோத்பல மென்னும் சொல்லுக்கும் கந்தோட்ட மென்னும் சொல்லுக்கும் என்ன சேர்த்தியென்றால் ஒன்றுமில்லை. அவ்வண்ணமாகவே பிராகிருதத்திலும் ஜ்யேஷ்ட மென்கிற வடசொல்லுக்கு ஆனி யென்கிற தமிழ்ச்சொல் ஆதேசமாக வந்ததாயிருக்கும் போலும் என்று எண்ணினேன். ஆனாலும் மனம் த்ருப்தி பெறவில்லை. ஆழ்ந்து ஆராய்ந்ததில் த்ருப்திகரமாகத் தோன்றினபடியை விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன்;

ஆனி மாதத்திற்கு ஜ்யேஷ்ட மாஸ மென்று வடமொழிவழக்கு என்பது ஸாம்ப்ரதாயிகம். ஜ்யேஷ்டா நக்ஷத்ர மென்கிற கேட்டை நக்ஷத்ரமும் பௌர்ணமாஸியும் கூடி வரப் பெற்ற மாஸம் ஜ்யேஷ்ட மாஸ மென்றபடி. ஒவ்வொரு மாதப் பெயர்களும் இவ்வண்ணமாகவே வ்யுத்பத்தி பெறுகின்றன. சித்திரை யென்கிற நக்ஷத்ரமும் பௌர்ணமாஸியும் கூடுகிற மாஸம் சைத்ரம். விசாகமும் பௌர்ணமாஸியும் கூடும் மாஸம் வைசாகம். ஆஷாடா நக்ஷத்ரமும் பௌர்ணமாஸியும் கூடும் மாஸம் ஆஷாடம். ......திஷ்யமென்கிற புஷ்ய நக்ஷத்ரமும் பௌர்ணமாஸியும் கூடும் மாஸம் தைஷ்யம், அல்லது பௌஷம்......... இப்படியே கண்டுகொள்வது. இந்தரீதியில், ஜ்யேஷ்டா நக்ஷத்ரமும் பௌர்ணமாஸியும் கூடும் மாஸம் ஜ்யேஷ்டமாஸம் என்பது நிர்விவாதம். ஜ்யேஷ்டா நக்ஷத்ரத்திற்கு அக்நி நக்ஷத்ர மென்கிற பெயருமுண்டு. திருவாய்மொழியில் *ஆராவமுதே என்னும் பதிகத்தில் (பாசுரம்-7.) "எரியே பவளக்குன்றே" என்ற விடத்திற்கு ஈடு முப்பத்தாறாயிரப்படியில் "எரி—கேட்டை நக்ஷத்ரம்" என்று அருளிச் செய்யப்பட்டிருப்பதும் காண்க. இதனால் ஜ்யேஷ்ட மாஸத்தை வடமொழியில் 'ஆக்நீ' என்றும் வழங்கி வந்ததுண்டு என்று அறியலாம். அதன் சிதைவாகவே ஆனி யென்கிற தமிழ் வழக்கு விளைந்தது என்று அடியேனுக்குத் தோற்றுகிறது. ஆனி யென்பது ஒரு வடசொல்லோடு இயைந்ததாக இருந்தே தீரவேண்டு மென்கிற நிர்ப்பந்தத்தை யுட்கொண்டு இங்ஙனம் ஆலோசிக்கப்பட்டது.

## 29. பெரியாழ்வார்

இவ்வாழ்வார் பாண்டிய நாட்டில் ஸ்ரீ வில்லிபுத்தூரில் ஆனிமாதத்து ஸ்வாதி நக்ஷத்திரத்தில் வேயர் குலத்திலவதரித்து விஷ்ணுசித்த ரென்று திருநாம முடையவராய் வடபெருங்கோயிலுடையானுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்தாலே எம்பெருமானுக்குத் தொண்டுபூண்டு அமுதமுண்கையே இயல்வாகவுடையராய், 'எம்பெருமான் திருவுள்ளத்துக்கு எந்த கைங்கர்யம் உகப்போ, அதுவே நாம் செய்யத்தக்கது' என்று உறுதி கொண்டு ஆராய்ந்து பார்த்தவளவில், ஸ்ரீ கிருஷ்ணாவதாரபகவான் கம்ஸனுக்குப் பணிசெய்துகொண்டிருந்த மாலாகாரருடைய மனையிலே எழுந்தருளிப் பூமாலையை இரந்து பெற்று அணிந்து கொண்டானென்கிற

கதையை அநுஸந்தித்துப் புஷ்பம் ஸமர்ப்பிக்கையே எம்பெருமான்றனக்கு உவப்பு' என்று நிச்சயித்துத் திருநந்தவனஞ் செய்து வடபெருங்கோயிலுடையானுக்குத் திருமாலை கட்டிச் சாத்திக் கொண்டிருந்தார்.

இவ்வாறிருக்கையில் பாண்டிய குலத்திற் பிறந்த ஸ்ரீ வல்லபதேவனென்னும் மன்னன் மதுரையிலிருந்து செங்கோல் செலுத்தி அரசாட்சி புரிந்து கொண்டிருக்குங் காலத்தில் ஒரு நாளிரவில் நகர சோதனைக்காக மாறுவேடத்துடன் திரியும்போது ஒரு வீட்டுத் திண்ணையின் மேல் ஒருவன் படுத்திருக்கக் கண்டு அவனை எழுப்பி 'நீ யார்' என்று கேட்க, 'நான் ஒரு பிராமணன்; கங்கை நீராடி மீண்டு வருகிறேன்' என்று அவன் சொல்ல; 'உனக்கு ஏதாவது நீதி தெரிந்திருந்தால் சொல்லு கேட்போம்' என்று அரசன் சொல்ல; அந்த அந்தணன்—

*** வர்ஷார்த்தமஷ்டௌ ப்ரயதேத மாஸாந் நிசார்த்தமர்த்தம் திவஸம் யதேத.**
**வார்த்தக்யஹேதோர் வயஸா நவேந பரத்ரஹேதோரிஹ ஜந்மநா ச. ***

என்ற ச்லோகத்தைச் சொன்னான். [இதன் பொருள் - மழை காலத்தில் வேண்டியவற்றுக்காக மற்ற எட்டு மாதங்களில் முயற்சி செய்ய வேண்டியது; இராக் காலத்துக்கு வேண்டியதற்காகப் பகலில் முயற்சி செய்ய வேண்டியது. கிழத்தனத்தில் வேண்டியவற்றுக்காக யௌவனத்தில் முயற்சி செய்ய வேண்டியது; பரலோகபோகத்திற்காக இப்பிறவி முழுவதும் முயற்சி செய்ய வேண்டியது என்பதாம்.]

அரசன் விவேகியாகையாலே இந்த ச்லோகத்தைக் கேட்டதும் "நமக்கோ இஹலோகத்தில் போகங்களுக்கு ஒரு குறையில்லை. இனிப் பரலோக நற்கதிக்கு முயல வேண்டும். இதற்கு என்ன வழி?" என்று அன்றிரவு முழுதும் இதுவே சிந்தையாயிருந்து, பொழுது விடிந்தவுடனே தன்னுடைய புரோஹிதரான செல்வநம்பியை வரவழைத்து 'நால்வகைப் புருஷார்த்தங்களையும் அளிக்கவல்ல பரதத்துவம் இன்னதென்று நிச்சயிப்பதற்கு என்ன உபாயம்?' என்று கேட்க; வித்வான்களைத் திரட்டி அவர்களைக் கொண்டு இதனை நிர்ணயிக்கவேணும் என்று அவர்சொல்ல; ராஜாவும் அப்படியே நல்லதென்று இசைந்து அளவற்ற பொருள்களை ஒரு சீலையில் முடிந்து அந்தப்பொற்கிழியை வித்யா சுல்கமாக வித்யாமண்டபத்தின் முன்னிலையில் உயரக் கட்டுவித்துப் "பரப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை வைதிக ப்ரமாணங்களால் நிர்ணயித்துச் சொல்லுகிறவர் இந்தப் பொற்கிழியைப் பெறுதற்கு உரியர்" என்று பலவிடங்களிலும் பிரசுரப் படுத்தினவளவில், அத்தேசத்திலும் மற்றும் பல தேசங்களினின்றும் பலவகை மதத்துப் பல பண்டிதர்கள் வந்து திரண்டனர்.

அப்போது ஸ்ரீவில்லிபுத்தூரெம்பெருமான் ஸ்ரீவிஷ்ணுசித்தரைக்கொண்டு வேதாந்த ஸித்தமான பரதத்வத்தைப் பிரகாசப்படுத்தி உலகத்தை வாழ்விக்க வேணுமென்று திருவுள்ளங்கொண்டு அந்த அடியவருடைய கனவிலே எழுந்தருளி 'நீர் மதுரைக்கு விரைந்து சென்று பாண்டிய ராஜனுடைய பண்டித ஸபையிற் சேர்ந்து ஸ்ரீமந்நாராயணனே பரம்பொருளென்று ஸ்தாபித்துப் பொற்கிழியை அறுத்துக்கொண்டுவாரும்' என்று நியமனம் தந்தருள, அதற்கு அவர் 'சிறிதும் சாஸ்த்ரஜ்ஞானமில்லாத அடியேன் எங்ஙனம் இதனைச் செய்ய வல்லேன்?' என்ன, எம்பெருமான், 'அதைப்பற்றி உமக்கென்னகவலை? அந்த பாரம் நம்முடையதன்றோ?' என்றருளிச்செய்து மறைந்தான்.

அநந்தரம் விஷ்ணுசித்தர் எழுந்து ஆச்சரியப்பட்டு எம்பெருமானது நியமனப்படியே நடக்க நிச்சயித்து உடனே புறப்பட்டுப் பாண்டியராஜ பண்டிதஸபையிலெழுந்தருளினவளவிலே, அவரைக்கண்ட அரசனுக்கும் புரோஹிதர்க்கும் 'இவரிடத்தில் ஏதோ விசேஷமிருக்கிறது' என்று தம்மில் தோன்றினபடியால் பரமகௌரவத்துடனே எதிர்கொண்டழைத்தல் திருவடி தொழுதல் முதலியவற்றால் உபசரித்து ஸபைநடுவே சிரியசிங்காசனத்தில் வீற்றிருக்கச் செய்தனர். இவர்கள் இப்படி பஹுமானித்ததைக்கண்டு மற்றுள்ள

கதையை அநுஸந்தித்துப் புஷ்பம் ஸமர்ப்பிக்கையே எம்பெருமான் றனக்கு உவப்பு' என்று நிச்சயித்துத் திருநந்தவனஞ் செய்து வடபெருங்கோயிலுடையானுக்குத் திருமாலை கட்டிச் சாத்திக் கொண்டிருந்தார்.

இங்ஙனிருக்கையில் பாண்டிய குலத்திற் பிறந்த ஸ்ரீ வல்லபதேவனென்னு மரசன் மதுரையில் தர்மிஷ்டனாய் அரசாட்சி புரிந்து கொண்டிருக்குங் காலத்தில் ஒரு நாளிரவில் நகர சோதனை செய்து திரியும்போது ஒரு தெருத்திண்ணையின் மேல் ஒருவன் படுத்திருக்கக் கண்டு அவனை யெழுப்பி 'நீ யார்' என்று கேட்க, 'நான் ஒரு பிராமணன்; கங்கை நீராடி மீண்டு வருகிறேன்.' என்று அவன் சொல்ல; 'உனக்கு ஏதாவது நீதி தெரிந்திருந்தால் சொல்லு பார்ப்போம்' என்று அரசன் சொல்ல; அந்த அந்தணன்—

* வர்ஷார்த்தமஷ்டௌ ப்ரயதேத மாஸாந் நிசார்த்தமர்த்தம் திவஸம் யதேத.
வார்த்தக்யஹேதோர் வயஸா நவேந பரத்ரஹேதோரிஹ ஜன்மநா ச. *

என்ற ச்லோகத்தைச் சொன்னான். [இதன் பொருள் - மழை காலத்தில் வேண்டியவற்றுக்காக மற்ற எட்டு மாதங்களில் முயற்சி செய்ய வேண்டியது; இராக் காலத்துக்கு வேண்டியதற்காகப் பகலில் முயற்சி செய்ய வேண்டியது. கிழத்தனத்தில் வேண்டியவற்றுக்காக யௌவனத்தில் முயற்சி செய்ய வேண்டியது; பரலோகபோகத்திற்காக இப்பிறவி முழுவதும் முயற்சி செய்ய வேண்டியது என்பதாம்.]

அரசன் விவேகியாகையாலே இந்த ச்லோகத்தைக் கேட்டதும் "நமக்கோ இஹலோகத்தில் போகங்களுக்கு ஒரு குறையில்லை. இனிப் பரலோக நற்கதிக்கு முயல வேண்டும். இதற்கு என்ன வழி?" என்று அன்றிரவு முழுதும் இதுவே சிந்தையாயிருந்து, பொழுது விடிந்தவுடனே தன்னுடைய புரோஹிதரான செல்வ நம்பியை வரவழைத்து 'நால்வகைப் புருஷார்த்தங்களையும் அளிக்கவல்ல பரதத்துவம் இன்னதென்று நிச்சயிப்பதற்கு என்ன உபாயம்?' என்று கேட்க; வித்வான்களைத் திரட்டி அவர்களைக் கொண்டு இதனை நிர்ணயிக்கவேணும் என்று அவர்சொல்ல; ராஜாவும் அப்படியே நல்லதென்று இசைந்து அளவற்ற பொருள்களை ஒரு சீலையில் முடிந்து அந்தப்பொற்கிழியை வித்யா சுல்கமாக ஸபாமண்டபத்தின் முன்னிலையில் உயரக் கட்டுவித்துப் "பரப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை வைதிக ப்ரமாணங்களால் நிர்ணயித்துச் சொல்லுகிறவர் இந்தப் பொற்கிழியைப் பெறுதற்கு உரியர்" என்று பலவிடங்களிலும் பிரசுரப் படுத்தினவளவில், அத்தேசத்திலும் மற்றும் பல தேசங்களினின்றும் பலவகை மதத்துப் பல பண்டிதர்கள் வந்திரண்டனர்.

அப்போது ஸ்ரீவில்லிபுத்தூரெம்பெருமான் ஸ்ரீவிஷ்ணு சித்தரைக்கொண்டு வேதாந்த ஸித்தமான பரதத்துவத்தைப் பிரகாசப்படுத்தி உலகத்தை வாழ்விக்க வேணுமென்று திருவுள்ளங்கொண்டு அந்த அடியவருடைய கனவிலே எழுந்தருளி 'நீர் மதுரைக்கு விரைந்து சென்று பாண்டிய ராஜனுடைய பண்டித ஸபையிற் சேர்ந்து ஸ்ரீமந்நாராயணனே பரம்பொருளென்று ஸ்தாபித்துப் பொற்கிழியை அறுத்துக்கொண்டுவாரும்' என்று நியமனம் தந்தருள, அதற்கு அவர் 'சிறிதும் சாஸ்த்ரஜ்ஞானமில்லாத அடியேன் எங்ஙனம் இதனைச் செய்ய வல்லேன்?' என்ன, எம்பெருமான், 'அதைப்பற்றி உமக்கென்ன கவலை? அந்த பாரம் நம்முடையதன்றோ?' என்றருளிச்செய்து மறைந்தான்.

அநந்தரம் விஷ்ணுசித்தர் எழுந்து ஆச்சரியப்பட்டு எம்பெருமானது நியமனப்படியே நடக்க நிச்சயித்து உடனே புறப்பட்டுப் பாண்டியராஜ பண்டிதஸபையிலெழுந்தருளினவளவிலே, அவரைக்கண்ட அரசனுக்கும் புரோஹிதர்க்கும் 'இவரிடத்தில் ஏதோ விசேஷமிருக்கிறது' என்று தம்மில் தோன்றினபடியால் பரமகௌரவத்துடனே எதிர்கொண்டழைத்தல் திருவடி தொழுதல் முதலியவற்றால் உபசரித்து ஸபைநடுவே சீரியசிங்காசனத்தில் வீற்றிருக்கச் செய்தனர். இவர்கள் இப்படி பஹுமானித்ததைக்கண்டு மற்றுள்ள

வித்வான்களெல்லோரும் பொறாமைகொண்டு 'அளவற்ற வேத சாஸ்த்ரங்களைப் பயின்றுள்ள எங்கட்கெல்லாம் அகௌரவமுண்டாகுமாறு ஒன்றுந்தெரியாத வொருவரை இப்படி கௌரவிப்பது அயுக்தம்' என்று சொல்லி ஆக்ஷேபிக்க, செல்வநம்பி அவர்களை அடக்கி விஷ்ணுசித்தரை நோக்கி 'தேவரீர் பரமகிருபையுடன் பரதத்வநிர்ணயம் செய்தருளவேணும்' என்று ப்ரார்த்திக்க; அந்த விஷ்ணுசித்தர் கனவில் காட்சிதந்த கமலைகேள்வனுடைய கருணையைக் கனக்கநம்பி யிருந்தபடியால் எம்பெருமானைச் சிந்தைசெய்ய; அவ்வளவிலே பகவத்க்ருபையாலே அவர்க்கு ஸகலசாஸ்த்ரார்த்தங்களும் கைகொள் நெல்லிக்கனியாக இலங்கின. இங்ஙனம் எம்பெருமானின்னருளால் ஸர்வஜ்ஞரான விஷ்ணுசித்தர் அப்போது ச்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்களிலிருந்து பலவாக்கியங்களைப் பிரமாணமாக எடுத்துக் காட்டி அவற்றின் அர்த்தங்களையும் தாமே ஆக்ஷேப ஸமாதானங்களோடு யுக்தி யுக்தமாக வெளியிட்டு இதரமதக்கொள்கைகளை யெல்லாம் கண்டித்து ஸ்ரீவைஷ்ணவ மதமே ப்ராமாணிகமென்றும், ஸ்ரீமந்நாராயணனே பரம புருஷனென்றும், அவனைச் சரணமடைவதே சிறந்த மார்க்கமென்றும் பரக்க உபந்யஸித்துப் பரதத்வ ஸ்தாபநம் பண்ணின வளவிலே முன்பு பொறாமையாலே தூஷித்த வித்வான்களெல்லாரும் ஒன்றும் வாய்திறக்க வழியில்லாமல் வெள்கித் தலைகவிழ, வல்லபதேவனும் செல்வநம்பியும் அவருடைய ஞான வைபவத்தைக்கண்டு கொண்டாடி ஸாஷ்டாங்கமாக விழுந்து ஸேவித்தனர். முன்பு அரசனால் ஒருகம்பத்தி னுச்சியிற்கட்டி நிறுத்தப்பட்ட பொற்கிழி தானாகவே ஆழ்வார் முன்னே தாழவிழ, இதுவும் ஒரு பகவத் க்ருபையென்று உவந்து ஆழ்வார் அதனை அறுத்துக் கொண்டருளினார்.

அதைக்கண்ட அரசனும் புரோஹிதரும் மற்றும் பலபண்டிதர்களும் ஆழ்வாரை பஹுமானித்து மிகப்புகழ்ந்து அவரைப் பட்டத்து யானையின்மேலேற்றிக் குடை [illegible] மகர தோரணம் முதலியவற்றைத் தாங்களே பணிமாறிக்கொண்டு கூடவேயிருந்து திருவீதிகளில் மஹோத்ஸவம் செய்வித்தார்கள். அக்காலத்தில் அவர் பண்டிதர்களனைவர்க்குந் தலைமைபெற்றிருந்தமையால் ராஜா அவர்க்குப் பட்டர்பிரான் என்று திருநாமம் சாத்தி பல விருதாவளிகளைக் கோஷிக்க, திருச்சின்னம் ஒலிசெய்ய, வெற்றிச் சங்கமெடுத்தூத, இப்படிப்பட்ட வைபவத்துடனே ஆழ்வார் மஹோத்ஸவம் கண்டருள்வதைப் பார்த்து ஆநந்திக்க விரும்பிய பரமபத நாதன் பிராட்டியுடனே பெரிய திருவடியின் மீதேறி ஆகாசத்தில் வந்து தோன்றினான்.

மகனுடைய மஹோத்ஸவத்தைக் காணவரும் மாதாபிதாக்களைப்போலே தம்முடைய உத்ஸவத்தைக் காணவந்த திருமாலைக் கண்ட ஆழ்வார் சிறிதும் செருக்குக் கொள்ளாமல் அந்த தேவாதி தேவனுடைய ஸர்வஜ்ஞத்வம் முதலிய திருக்குணங்களை முதலிய திருக்குணங்களை அநுஸந்திப்பதற்கு முன்னே ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களிற் கண் செலுத்தி அவற்றையே ஸேவித்து ஈடுபட்டு ஆழ்ந்து பக்தி பரவசராய் அதனால் தம்முடைய நிலைமையையும் எம்பெருமானுடைய நிலைமையையும் மறந்து "காலம் நடையாடாத பரமபதத்திலே இருக்கும் பரமபுருஷன் காலம் நடையாடுகிற இந்த லோகத்தில் வந்து நிற்கிறானே. இவனுக்கு என்னதீங்குவருமோ!" என்று மிகவும் அஞ்சி இந்த திவ்யமங்கள விக்ரஹத்துக்கு எவ்விதமான அவத்யமும் நேரிடாதிருக்கவேணும் என்று மங்களாசாஸநம் பண்ணுகிறவராய் யானையின் மணிகளையே தாளமாகக்கொண்டு திருப்பல்லாண்டு என்னும் திவ்ய ப்ரபந்தத்தைப் பாடினார்.

பிறகு ஆழ்வார் தம்மைச் சரணமடைந்த பாண்டிய குலபதியைக் குளிரக்கடாக்ஷித்துப் பாகவத கோஷ்டியில் ஒருவனாக்கிவிட்டு ஸ்ரீ வில்லிபுத்தூர்க்கெழுந்தருளி, கிழியிற் கிடைத்தபொருள்களை யெல்லாம் வடபெருங்கோயிலுடைய பெருமாள் திருமுன்பே வைத்துத் தெண்டன் ஸமர்ப்பித்து அந்தப்பொருளால் அங்கே கோபுரம் கட்டுவித்துப் பழையபடி நந்தவன கைங்கர்யமே நடத்திவருகையில், க்ருஷ்ணாவதாரத்திலே மிகவும் ஈடுபட்டு ஆழ்ந்தவராகையால் அவ்வவதார சரிதைகளையே பிரதானமாகப்பாராட்டி அநுபவித்து அவ்வநு

வித்வான்களெல்லோரும் பொறாமைகொண்டு 'அளவற்ற வேத சாஸ்த்ரங்களைப் பயின்றுள்ள எங்கட்கெல்லாம் அகௌரவமுண்டாகுமாறு ஒன்றுந்தெரியாத வொருவரை இப்படி கௌரவிப்பது அயுக்தம்' என்று சொல்லி ஆக்ஷேபிக்க, செல்வநம்பி அவர்களை அடக்கி விஷ்ணுசித்தரை நோக்கி 'தேவரீர் பரமக்ருபையுடன் பரதத்வநிர்ணயம் செய்தருளவேணும்' என்று ப்ரார்த்திக்க; அந்த விஷ்ணுசித்தர் கனவில் காட்சிதந்த கமலைகேள்வனுடைய கருணையைக் கனக்கநம்பி யிருந்தபடியால் எம்பெருமானைச் சிந்தைசெய்ய; அவ்வளவிலே பகவத்க்ருபையாலே அவர்க்கு ஸகலசாஸ்த்ரார்த்தங்களும் கைகொள் நெல்லிக்கனியாக இலங்கின. இங்ஙனம் எம்பெருமானின்னருளால் ஸர்வஜ்ஞரான விஷ்ணுசித்தர் அப்போது ச்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்களிலிருந்து பலவாக்கியங்களைப் பிரமாணமாக எடுத்துக் காட்டி அவற்றின் அர்த்தங்களையும் தாமே ஆக்ஷேப ஸமாதானங்களோடு யுக்தி யுக்தமாக வெளியிட்டு இதரமதக்கொள்கைகளை யெல்லாம் கண்டித்து ஸ்ரீவைஷ்ணவ மதமே ப்ராமாணிகமென்றும், ஸ்ரீமந்நாராயணனே பரம புருஷனென்றும், அவனைச் சரணமடைவதே சிறந்த மார்க்கமென்றும் பரக்க உபந்யஸித்துப் பரதத்வ ஸ்தாபநம் பண்ணினவளவிலே முன்பு பொறாமையாலே தூஷித்த வித்வான்களெல்லாரும் ஒன்றும் வாய்திறக்க வழியில்லாமல் வெள்கித் தலைகவிழ, வல்லபதேவனும் செல்வநம்பியும் அவருடைய ஞானவைபவத்தைக்கண்டு கொண்டாடி ஸாஷ்டாங்கமாக விழுந்து ஸேவித்தனர். முன்பு அரசனால் ஒருகம்பத்தி னுச்சியிற்கட்டி நிறுத்தப்பட்ட பொற்கிழி தானாகவே ஆழ்வார் முன்னே தாழவிழிய, இதுவும் ஒரு பகவத் க்ருபையென்று உவந்து ஆழ்வார் அதனை அறுத்துக் கொண்டருளினர்.

அதைக்கண்ட அரசனும் புரோஹிதரும் மற்றும் பண்டிதர்களும் ஆழ்வாரை யடிபணிந்து மிகப்புகழ்ந்து அவரைப் பட்டத்து யானையின்மேலேற்றிக் குடை சாமரம் மகர தோரணம் முதலியவற்றைத் தாங்களே பணிமாறிக்கொண்டு கூடவேயிருந்து திருவீதிகளிலே மஹோத்ஸவம் செய்வித்தார்கள். அக்காலத்தில் அவர் பண்டிதர்களனைவர்க்கும் தலைவராய் விளங்கினமையால் ராஜா அவர்க்குப் பட்டர்பிரான் என்று திருநாமம்சாத்திப் பல விருதாவளிகளைக் கோஷிக்க, திருச்சின்னம் ஒலிசெய்ய, வெற்றிச் சங்கமெடுத்தூத, இப்படிப்பட்ட வைபவத்துடனே ஆழ்வார் மஹோத்ஸவம் கண்டருள்வதைப் பார்த்து அநுபவிக்க விரும்பிய பரமபத நாதன் பிராட்டியுடனே பெரிய திருவடியின் மீதேறி எதிரில் வந்து தோன்றினன்.

மகனுடைய மஹோத்ஸவத்தைக் காணவரும் மாதாபிதாக்களைப்போலே தம்முடைய உத்ஸவத்தைக் காணவந்த திருமாலைக் கண்ட ஆழ்வார் சிறிதும் செருக்குக் கொள்ளாமல் அந்த தேவாதி தேவனுடைய ஸர்வஜ்ஞத்வம் முதலிய திருக்குணங்களை முதலிய திருக்குணங்களை அநுஸந்திப்பதற்கு முன்னே ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களிற் கண் செலுத்தி அவற்றையே ஸேவித்து ஈடுபட்டு ஆழ்ந்து பக்தி பரவசராய் அதனால் தம்முடைய நிலைமையையும் எம்பெருமானுடைய நிலைமையையும் மறந்து "காலம் நடையாடாத பரமபதத்திலே இருக்குமிப் பரமபுருஷன் காலம் நடையாடுகிற இந்த லோகத்தில் வந்து நிற்கின்றனனே. இவனுக்கு என்னதீங்குவருமோ!" என்று மிகவும் அஞ்சி இந்த திவ்யமங்கள விக்ரஹத்துக்கு எவ்விதமான அவத்யமும் நேரிடாதிருக்கவேணும் என்று மங்களாசாஸநம் பண்ணுகிறவராய் யானையின் மணிகளையே தாளமாகக்கொண்டு திருப்பல்லாண்டு என்னும் திவ்ய ப்ரபந்தத்தைப் பாடினார்.

பிறகு ஆழ்வார் தம்மைச் சரணமடைந்த பாண்டிய குலபதியைக் குளிரக்கடாக்ஷித்து அப் பாகவத கோஷ்டியில் ஒருவனாக்கிவிட்டு ஸ்ரீ வில்லிபுத்தூர்க்கெழுந்தருளி, கிழியிற் கிடைத்தபொருள்களை யெல்லாம் வடபெருங்கோயிலுடைய பெருமாள் திருமுன்பே வைத்துத் தெண்டன் ஸமர்ப்பித்து அந்தப்பொருளால் அங்கே கோபுரம் கட்டுவித்துப் பழையபடி நந்தவன கைங்கர்யமே நடத்திவருகையில், க்ருஷ்ணாவதாரத்திலே மிகவும் ஈடுபட்டு ஆழ்ந்தவராகையால் அவ்வவதார சரிதைகளையே பிரதானமாகப்பாராட்டி அநுபவித்து அவ்வநு

பவத்தாலுண்டான ஆனந்தம் உள்ளடங்காமற் பெருகவே அதைப் பிரபந்த முகமாக வெளியிடத்தொடங்கிப் பெரியாழ்வார் திருமொழி யென்னும் திவ்யப்பிரபந்தத்தையும் அருளிச்செய்தார். [ஆழ்வார்களைப்பற்றின குறுநுபவம் இவ்வாழ்வாரோடு முடிவுபெற்றது.]

## 30. வடக்குத்திருவீதிப்பிள்ளை.

பெரியாழ்வாருடைய திருவவதார நன்னாளிலேயே இப்பேராசிரியரும் திருவவதரித்தார். ஸ்ரீவசநபூஷணம் முதலிய அஷ்டாதச ரஹஸ்யங்களையருளிச்செய்த பிள்ளைலோகாசாரியர்க்கும், ஆசார்யஹ்ருதய மருளிச்செய்த அழகியமணவாளப் பெருமாள்நாயனார்க்கும் திருத்தகப்பனார் இவர். இவருடைய நிஜநாமதேயம் ஸ்ரீக்ருஷ்ண மஹாகுருவென்பதாம். இந்தத்திருநாமமே பெரியவாச்சான் பிள்ளையென்கிற மற்றோராசிரியர்க்கு மிருந்ததனால் நம்பிள்ளை திருவடிகளில் ஆச்ரயித்திருந்த விவர்களுக்கு வாசிதெரிவதற்காக இவர் வடக்குத்திருவீதிப்பிள்ளையென வழங்கப்பட்டுவந்தார். கோயிலில் வடக்குத்திருவீதியில் இவர்வாழ்ந்துவந்ததுவே இத்திருநாமத்திற்குக்காரணம். * ஸ்ரீக்ருஷ்ணபாதபாதாப்ஜே நமாமி சிரஸா ஸதா, யத்ப்ரஸாத ப்ரபாவேந ஸர்வஸித்திரபூந்மம* என்பது இவருடைய தனியன்.

பகவத் விஷயமென வழங்கப்படுகின்ற [திருவாய்மொழி வியாக்கியானமான] ஈடு முப்பத்தாறாயிரப்படியை இவ்வாசிரியரே பட்டோலை கொண்டவர். உபதேச ரத்தினமாலையில் * தெள்ளியதா நம்பிள்ளை செப்பு நெறிதன்னை, வள்ளல் வடக்குத் திருவீதிப்பிள்ளை இந்த நாடறிய மாறன் மறைப்பொருளை நன் குரைத்தது, ஈடு முப்பத்தாறாயிரம் * என்றுள்ள பாசுரம் இங்கே அநுஸந்திக்கத்தகும். இவ்வாசிரியர்க்கு மணவாளமாமுனிகள் வள்ளல் என்று விசேஷண மிட்டருளினார். [உதாரர் என்றபடி.] ஔதார்யம் மிக்கவர்கள் உலகில் பலர் புகழ் பெற்றிருந்தாலும் இவரொருவருடைய ஔதார்யமே உண்மையில் கொண்டாடத் தகுந்ததும் ஒப்புயர்வற்றதுமாம். நம்பிள்ளை சோதிவாய் திறந்து கங்கா ப்ரவாஹம் போலருளிச் செய்த அர்த்த விசேஷங்களை இவ்வாசிரியர் பட்டோலை கொண்ட மாத்திரமே யானாலும் இதுவன்றோ உலகுக்குப் பரமோபகாரமாய் விளங்காநின்றது. எற்கெனவே ஆறாயிரப்படி யென்கிற [திருக்குருகைப்பிரான் பிள்ளானருளிச் செய்த] வியாக்கியானமும், ஒன்பதினாயிரப்படி யென்கிற [நஞ்சீயரருளிச் செய்த] வியாக்கியானமுமிருந்தாலும் அவை மிகவும் ஸங்க்ஷிப்தங்களாகையாலே அநுபவரஸிகர்களுக்குப் பரிபூர்ண த்ருப்தியை விளைக்கப் போதாதவை. * நம்பிள்ளை தம்முடைய நல்லருளால் ஏவிவிடப் பெரிய வாச்சான் பிள்ளை யருளிச் செய்த இருபத்தினாலாயிரப்படி வியாக்கியானம் அவைபோலே ஸங்க்ஷிப்த மன்றிக்கே சிறிது விரிவாகவே யிருந்தாலும் ஈடு முப்பத்தாறாயிரப்படி திருவவதரித்த பின்பு அதுவும் ஸங்க்ஷிப்தமே யென்னும்படியாயிற்று. அனேகஸ்தலங்களில் இருபத்தினாலாயிரப்படி பங்க்திகளும் ஈட்டுப் பங்க்திகளும் ஒற்றுமைப்பட்டிருக்கையாலே முன்னமவதரித்ததான அந்த வியாக்கியானத்தைத்துணைகொண்டே ஈடு எழுதியருளப்பட்டதெனத் தெரிகின்றது. ஆயினும் ஸ்ரீஸூக்திகாம்பீர்யமும் அர்த்த பௌஷ்கல்யமும் ஈட்டுக்கு அஸாதாரணமாயிருக்குமென்பது அநுபவரஸிகர்கட்கே அறிய நிலமானது.

ஸ்ரீராமாயணம்முதலிய இதிஹாஸபுராணங்களிலிருந்து மேற்கோளாக ஆங்காங்குப் பலச்லோகங்களையெடுத்து. இனிமையே வடிவெடுத்ததாக வியாக்கியானஞ் செய்தருளுமழகு ஈட்டுக்குச் சிறந்த அணிகலன். இரண்டொருச் லோகங்களின் வியாக்கியானங்களை (ஈட்டிலிருந்து) மேலேயெடுத்துக் காட்டுவோம். ஸ்ரீராமாயணத்தில் யுத்தகாண்டத்தில்—

*மரணாந்தாநி வைராணி நிர்வ்ருத்தம் ந: ப்ரயோஜநம்;
க்ரியதாமஸ்ய ஸம்ஸ்காரோ மமாப்யேஷ யதா தவ. * (114—102)

என்கிற ச்லோகம் விபீஷணாழ்வானை நோக்கிப் பெருமாளருளிச் செய்வது. இராவணன் மாண்டபின்பு "இந்தமஹாபாபிக்குநான் உத்தரக்கிரியை [ஈமக்கடன்] செலுத்தமாட்டேன்" என்று ஒருங்கிநின்ற விபீஷணாழ்வானைநோக்கிப் பெருமாளருளிச் செய்த ச்லோகமிது.

பவத்தாலுண்டான ஆனந்தம் உள்ளடங்காமற் பெருகவே அதைப் பிரபந்த முகமாக வெளியிடத்தொடங்கிப் பெரியாழ்வார் திருமொழி யென்னும் திவ்யப்பிரபந்தத்தையும் அருளிச்செய்தார். [ஆழ்வார்களைப்பற்றின குருநுபவம் இவ்வாழ்வாரோடு முடிவுபெற்றது.]

### 30. வடக்குத்திருவீதிப்பிள்ளை.

பெரியாழ்வாருடைய திருவவதார நன்னாளிலேயே இப்பேராசிரியரும் திருவவதரித்தார். ஸ்ரீவசநபூஷணம் முதலிய அஷ்டாதச ரஹஸ்யங்களையருளிச்செய்த பிள்ளைலோகாசாரியர்க்கும், ஆசார்யஹ்ருதயமருளிச்செய்த அழகியமணவாளப் பெருமாள்நாயனார்க்கும் திருத்தகப்பனார் இவர். இவருடைய நிஜநாமதேயம் ஸ்ரீக்ருஷ்ண மஹாகுருவென்பதாம். இந்தத்திருநாமமே பெரியவாச்சான் பிள்ளையென்கிற மற்றோராசிரியர்க்கு மிருந்ததனால் நம்பிள்ளை திருவடிகளில் ஆச்ரயித்திருந்த விவர்களுக்கு வாசிதெரிவதற்காக இவர் வடக்குத்திருவீதிப்பிள்ளையென வழங்கப்பட்டுவந்தார். கோயிலில் வடக்குத்திருவீதியில் இவர்வாழ்ந்துவந்ததுவே இத்திருநாமத்திற்குக்காரணம். * ஸ்ரீக்ருஷ்ணபாத பாதாப்ஜே நமாமி சிரஸா ஸதா, யத்ப்ரஸாத ப்ரபாவேந ஸர்வஸித்திரபூந்மம * என்பது இவருடைய தனியன்.

பகவத் விஷயமென வழங்கப்படுகின்ற [திருவாய்மொழி வியாக்கியானமான] ஈடு முப்பத்தாறாயிரப்படியை இவ்வாசிரியரே பட்டோலை கொண்டவர். உபதேச ரத்தினமாலையில் * தெள்ளியதா நம்பிள்ளை செப்பு நெறிதன்னை, வள்ளல் வடக்குத் திருவீதிப்பிள்ளை இந்த நாடறிய மாறன் மறைப்பொருளை நன் குரைத்தது, ஈடு முப்பத்தாறாயிரம் * என்றுள்ள பாசுரம் இங்கே அநுஸந்திக்கத்தகும். இவ்வாசிரியர்க்கு மணவாளமாமுனிகள் வள்ளல் என்று விசேஷண மிட்டருளினார். [உதாரர் என்றபடி.] ஔதார்யம் மிக்கவர்கள் உலகில் பலர் புகழ் பெற்றிருந்தாலும் இவ்வொருவருடைய ஔதார்யமே உண்மையில் கொண்டாடத் தகுந்ததும் ஒப்புயர்வற்றதுமாம். நம்பிள்ளை சோதிவாய் திறந்து கங்கா ப்ரவாஹம் போலருளிச் செய்த அர்த்த விசேஷங்களை இவ்வாசிரியர் பட்டோலை கொண்டதின் திறமே யாவரும் இதுவன்றோ உலகுக்குப் பரமோபகாரகமாய் விளங்காநின்றது. முன்னமேயே ஆறாயிரப்படி யென்கிற [திருக்குருகைப்பிரான் பிள்ளானருளிச் செய்த] வியாக்கியானமும், ஒன்பதினாயிரப்படி யென்கிற [நஞ்சீயருளிச் செய்த] வியாக்கியானமுமிருந்தாலும் அவை மிகவும் ஸம்க்ஷிப்தங்களாகையாலே அநுபவரஸிகர்களுக்குப் பரிபூர்ண த்ருப்தியை விளைக்கப் போதாதவை. * நம்பிள்ளை தம்முடைய நல்லருளால் ஏவியிடப் பெரிய வாச்சான் பிள்ளை யருளிச் செய்த இருபத்தினாலாயிரப்படி வியாக்கியானம் அவைபோலே ஸம்க்ஷிப்த மன்றிக்கே சிறிது விரிவாகவே யிருந்தாலும் ஈடு முப்பத்தாறாயிரப்படி திருவவதரித்த பின்பு அதுவும் ஸம்க்ஷிப்தமே யென்னும்படியாயிற்று. அனேக ஸ்தலங்களில் இருபத்திநாலாயிரப்படி பங்க்திகளும் ஈட்டுப் பங்க்திகளும் ஒற்றுமைப்பட்டிருக்கையாலே முன்னமவதரித்திருந்த அந்த வியாக்கியானத்தைத் துணைகொண்டே ஈடு எழுதியருளப்பட்டதெனத் தெரிகின்றது. ஆயினும் ஸ்ரீஸூக்திகாம்பீர்யமும் அர்த்த பௌஷ்கல்யமும் ஈட்டுக்கு அஸாதாரணமாயிருக்குமென்பது அநுபவரஸிகர்கட்கே அறிய நிலமானது.

ஸ்ரீராமாயணம்முதலிய இதிஹாஸபுராணங்களிலிருந்து மேற்கோளாக ஆங்காங்குப் பலச்லோகங்களெடுத்து இனிமையே வடிவெடுத்ததாக வியாக்கியானஞ் செய்தருளுமழகு ஈட்டுக்குச் சிறந்த அணிகலன். இரண்டொருச் லோகங்களின் வியாக்கியானங்களை (ஈட்டிலிருந்து) மேலேயெடுத்துக் காட்டுவோம். ஸ்ரீராமாயணத்தில் யுத்தகாண்டத்தில்—

*மரணாந்தானி வைராணி நிர்வ்ருத்தம் ந: ப்ரயோஜநம்,
க்ரியதாமஸ்ய ஸம்ஸ்காரோ மமாப்யேஷ யதா தவ. * (114—102)

என்கிற ச்லோகம் விபீஷணாழ்வானை நோக்கிப் பெருமாளருளிச் செய்வது. இராவணன் மாண்டபின்பு "இந்தமஹாபாபிக்குநான் உத்தரக்கிரியை [ஈமக்கடன்] செலுத்தமாட்டேன்" என்று ஒருநிலைநின்ற விபீஷணாழ்வானைநோக்கிப் பெருமாளருளிச் செய்த ச்லோகமிது.

ஸாதாரணமாக வடமொழிபயின்ற அனைவரும் ஸ்ரீராமாயணத்தில் இறங்கி அர்த்தம் சொல்லப் புகப்படுவது வழக்கமாதலால், அப்படிப்பட்டவர்கள் இதற்குக் கூறும் பொருள் எங்ஙனே யென்னில்; உலகத்தில் ஒருவனிடத்து ஒருவனுக்குப் பகை மரண பர்யந்தமேயாதலால், இந்த ராவணன் மாண்டொழிந்த பின்பும் இவனிடத்து நாம் பகை வைப்பது எதுக்கு? இவனை வதைசெய்வதும் பிராட்டியைக் கைக்கொள்வதுமே நமக்குப் ப்ரயோஜனமாதலால் அது நிறைவேறப்பெற்ற பின்பும் இவன்மீது நாம் பகைபாராட்டலாகுமோ? பகையை மறந்து இனி இவனுக்குச் செய்யவேண்டியதைச் செய்—என்று பெருமாள் கூறுவதாக.

இப்பொருள் பொருத்தமுடையதன்றென்றும் இது இராமபிரானுடைய திருவுள்ளத்திற்கு ஒவ்வாதென்றும் நம்பிள்ளை திருவுள்ளம்பற்றிப் பணித்தருளின பொருளை இன்சுவைமிக வியாக்கியானம் செய்தருளியுள்ளார் ஈட்டில்.

இதுவரையில் பெருமாள்மீது இராவணன் பகைபாராட்டி யிருந்தானே யல்லது இராவணன்மீது பெருமாள் சிறிதும் பகைபாராட்டியிருந்ததில்லை. "விபீஷணோ வா ஸுக்ரீவ! யதி வா ராவணஸ் ஸ்வயம்" என்றருளிச்செய்த பெருமாளுடைய திருவுள்ளத்திற்கும் இணங்கவல்ல பொருளன்றோ பணிக்கவேணும். அதை நம்பிள்ளைதானே பணிக்கவல்லவர். இங்கு வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் அமுதமயமேயாதலால் அவற்றை அப்படியே யெடுத்துக் காட்டிவிட்டுப் பிறகு விவரிக்கிறோம். ஈட்டு ஸ்ரீஸூக்தி வருமாறு:—

"[மரணாந்தாநி வைராணி] ரிஷிகளின் குடியிருப்பையழித்து மைதிலியைப் பிரித்து, நம் உயிர்நிலையிலே நலிந்தாப்போலே ஸ்ரீ ஜடாயு மஹாராஜரை நலிந்தவையெல்லாம் செய்யமாட்டானே இவன் இனி.

[நிர்வ்ருத்தம் ந: ப்ரயோஜநம்] இவன் ஜீவிக்கிற நாளிலே நாம் செய்யும் நன்மையை இவன் விலக்காதொழிய வேணுமென்று இத்தனையே எண்ணியிருந்தோம்; அது அந்நாளில் பெற்றிலோம். நாம் தேடியிருந்த அது முந்துறமுன்னம் ஸித்திக்கப் பெற்றோமிறே.

[க்ரியதாம் அஸ்ய ஸம்ஸ்கார:] இவன், நாம் செய்யும் நன்மை விலக்காதானளவு பிறந்தவின்றும் நாம் இழக்கவேணுமோ? வேண்டுவன செய்யப் பாரும்.

[மமாபி ஏஷ யதா தவ] நீர் இருப்பத்திருந்தீராகில், குடல்துடக்குடையாரிலே ஒருவன் செய்யுமித்தனையன்றோ: நாம் இவனுக்கு வேண்டுவன செய்ய, நீர் பின்னைக் கடக்க நில்லீர்."—என்று.

இந்த திவ்ய ஸூக்திகளின் தாத்பர்ய ஸாரமாவது—விபீஷணா! இவ்விராவணன் ஜீவித்திருக்கும் நாளிலேயே இவனுக்குச் சில நன்மைகள் நான் செய்யக் கருதியிருந்தேன்; அவை ஈடேறுதபடிக்கு இவன் பலவகையான த்வேஷ காரியங்களை இயற்றினானாதலால் நம்முடைய மனோரதம் நிறைவேற வழியில்லையாகிறதே யென்று வருந்தத்தடனேயே நான் காலங்கழிக்க நேர்ந்தது. இப்போது இவன் மரணமடைந்து விட்டானாதலால் இனி ஒருவிதமான த்வேஷ காரியமும் இவன் பண்ண ப்ரஸக்தி யில்லையே. நாம் இவனுக்குச் செய்யநினைத்த நன்மைகளுக்கு இவன் ஆபிமுக்யம் பண்ணுதொழிந்தாலும் இவற்றைத் தடைசெய்யமாட்டாத நிலைமைக்கு இப்போது வந்திட்டானன்றோ சேதநர்களிடத்தில் இவ்வளவுதானே நான் எதிர்பார்த்திருப்பது. [பகவத் ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி போருமே.] இதுவோ இப்போது கைபுகுந்துவிட்டது. அவனுடைய உயிருக்கு நன்மைசெய்ய நினைத்திருந்தேன்; அது செய்ய ப்ராப்தியில்லாமே இழந்த குறைதீர இவனது உடலுக்காவது சில நன்மைகளைச் செய்யாய். நீ செய்யப் பின்வாங்கினாயாகில் இதோ நான் செய்யக் காத்திருக்கிறேன். நீ எப்படி எனக்கு ஆப்தனோ அப்படி உன் உறவினனான இவனும் எனக்கு ஆப்தன்தானே—என்பதாம்.

இந்த ச்லோகத்தில் "வைரம்" என்று ஏகவசனமாக அன்றிக்கே வைராணி என்று பஹுவசநமாக இருந்ததையே முக்கியமாக நம்பிள்ளை குறிக்கொண்டு ரஸமயமான வியாக்கியானம் செய்தருளினாரென்றுணர்க. வைராணி என்றது—வைரகார்யாணி என்றபடி.

ஈடு முதலிய வியாக்கியானங்களை ஊக்கத்தோடு ஸேவித்து வருகையில் பல ஆராய்ச்சிகள் தோன்றுவதுண்டு. அவற்றுள் ஓர் ஆராய்ச்சி இங்கு விவரிக்கப்படுகின்றது.

## அருளிச்செயலில் ஆராய்ச்சி.

### [ காசினி வேந்தா? காய்சின வேந்தா? ]

ஆழ்வார்திருநகரியைச் சார்ந்து நவ திருப்பதிகளென்று வழங்கப் பெறுகின்ற திவ்ய தேசங்களுள் திருப்புளிங்குடி என்பது ஒரு தலம். இத்தலத்தைக் குறித்து நம்மாழ்வார் திருவாய்மொழியில் ஒரு பதிகம் அருளிச் செய்துள்ளார். * பண்டை நாளாலே நின் திருவருளும் * என்பதாம் அது. (9-பத்து, 2-திருவாய்மொழி.)

அப்பதிகத்தில் * காய்சினப் பறவை யூர்ந்து * என்கிற ஆறுவது பாசுரத்தின் மூன்றுமடியை நோக்கி இப்போது ஒரு விசாரம் ப்ராப்தமாயிருக்கின்றது. "காய்சின வேந்தே கதிர்முடியானே! கலிவயல் திருப்புளிங்குடியாய்!" என்பது மூன்றாமடி. இங்கு, காய்சின வேந்தே" என்று ப்ரதீகமெடுத்து இருபத்தினாலாயிரப்படியிலும் ஈடு முப்பத்தாறாயிரப்படியிலும் பொருள் அருளிச்செய்திருப்பதாவது—

"[காய்சின வேந்தே!] திருநாமம். காயும் சினத்தையுடைய நிர்வாஹகனே!" என்பதாம்.

இப்படியிருக்க, இதற்கு மாறாக உலகவழக்கு இருக்கின்றது. இத்தலத்து எம்பெருமானுடைய திருநாமம் 'காசினி வேந்து' என வழக்கி வருகின்றார்கள். காசினியென்று பூமிக்குப் பெயராதலால், பூமிபாலன் என்னும் பொருளில் 'காசினி வேந்து' என்று ஆழ்வார்மங்களாசாஸனம் என்கிறார்கள். இதற்கு ஆதாரமாக ஒரு ச்லோகமும் காட்டுகின்றார்கள்; நவ திருப்பதியெம்பெருமான்களையும் சேர்த்து ஒரு ச்லோகம் வழங்கி வருவதில் "வைகுண்டநாதவிஜயாஸந பூமிபால" என்றுள்ளது. இதில் (பூமிபால) என்றது திருப்புளிங்குடியெம்பெருமானை நோக்கியே யாதலால், காசினி வேந்து என்று திருநாமமிருந்தாலொழிய இது சேராது—என்கிறார்கள். இந்த ச்லோகம் பூர்வாசார்ய க்ரந்தங்களில் உபாத்தமாகக் காணவிடினும் பூர்வாசார்யர்களால் அநுஸந்திக்கப்பட்ட ச்லோகமேயிது என்கிறார்கள்.

திருவாய்மொழி வியாக்கியானங்களில் பெரியவாச்சான்பிள்ளையும் வடக்குத் திருவீதிப்பிள்ளையும் அருளிச் செய்திருப்பதற்கு விருத்தமாக 'காசினி வேந்து' என்று பாடத்தைத் திருத்திப் பொருளையும் வேறாக்கி ஒரு பூருவாசார்யர் ச்லோகமியற்றியிருப்பாரா? என்று மனத்து சங்கை வர்த்தியாநின்றது. நஞ்சீயர் அருளிச் செய்த ஒன்பதினாயிரப்படியிலும், வாதிகேஸரி பணித்த பன்னீராயிரப்படியிலும், "காய்சின வேந்தே" என்கிற பாடமும் அதற்குரிய பொருளும் காணப்படுகின்றதேயன்றி, காசினி வேந்தே! என்கிற பாடமாவது, பூமிபாலனே! என்கின்ற பொருளாவது ஒரு ஆசிரியராலும் அருளிச் செய்யப்பட்டிருக்கவில்லை. 'காசினிவேந்து' என்கிற வ்யவஹாரம் நூதனமென்று சொல்வதற்குமில்லை. திருப்புளிங்குடியெம்பெருமானை நெடுநாளாகவே பலபெரியார்களும் காசினிவேந்து பெருமாளென்றே வழங்கி வருவதாகத் தெரிகின்றது. ஆனால் இவ்வழக்கு பூருவாசாரியர்களின் திருவுள்ளத்திற்கு இணங்காதது என்பதில் ஒருவர்க்கும் ஸந்தேஹமிருக்க இடமில்லை.

ஆராய்ச்சி செய்யுமளவில் இங்கு எமக்குத் தோன்றுவது என்னவென்றால், 'காய்சின வேந்தே' என்கிற அருளிச் செயலை 'காசினி வேந்தே' என்று தவறுதலான பாடமாக ஓதி வந்தவர்கள் பூருவாசாரிய வியாக்கியானங்களைப் பாராமல் பூமி பாலன் என்று பொருள் செய்துகொண்டு அப்படியே ச்லோகமியற்றிவிட்டார்கள் போலும்.

ஸ்ரீவில்லிபுத்தூர் ஸமீபத்தில் '**திருத்தண்கால்**' என்பது ஒரு திருப்பதி. இதற்கு வடமொழிப் பெயரிட்டவர்கள் **தங்கால** க்ஷேத்ரமென்றிட்டு அப்படியே ச்லோகங்கள் செய்து வெளியிட்டிருக்கிறார்கள். அவை மஹர்ஷிகள் பணித்த ச்லோகமென்றும் சொல்லுகிறார்கள். தண்காலுக்கும் **தங்காலத்**துக்கும் பொருட் பொருத்தம் யாதோ அறிகின்றிலோம்.

பிற்பட்டவர்கள் யாராவது ஒருச்லோகமியற்றினால் அதைப் பூருவர்கள் தலையில் ஏற்றுவதும் வழக்கத்திலுள்ளதே. மற்றொன்றும் நிரூபிக்கிறோம். நவ திருப்பதி யெம்பெருமான்களுக்கு ஒரு கோர்வை ச்லோகம் ஏற்பட்டிருப்பது போலவே திருநாங்கூர்ப் பதினொரு திருப்பதி யெம்பெருமான்களுக்கும் ஒரு கோர்வை ச்லோகம் ப்ரஸித்தமாக வழங்கி வருகின்றது. அதாவது—"***நந்தாதீபகடப்ரணர்த்தக**" இத்யாதியாம். இதைச்சொல்லுகிறவர்களெல்லாரும் பூருவாசார்ய ஸ்ரீஸூக்தியாகவே சொல்லிவருகிறார்கள். அப்படியிருக்க நியாயமுண்டா என்பதை விவேகிகள் சிறிது விமர்சிக்கவேணும். இந்த ச்லோகம் (**நந்தாதீப**) என்று ஆரம்பம் பெற்றிருக்கின்றது. திருநாங்கூரைச் சேர்ந்த மணிமாடக் கோயில் நாராயணப் பெருமாளுக்கு '**நந்தாவிளக்கு**' என்று திருமங்கையாழ்வார் இட்ட திருநாமமாதலால் அந்தத் தமிழ்த் திருநாமத்தை (**நந்தாதீப**) என்று ஸம்ஸ்க்ருதமாக்கியிருப்பதாக ஸ்பஷ்டமாகிறது. விளக்கு என்பதற்கு தீபமென்று மொழி பெயர்ப்பாக ஆய்விட்டாலும், **நந்தா** என்றிருப்பதானது மிகவும் விமர்சிக்கத்தக்கது. இது சுத்தமான தமிழ்ச்சொல். இதை அப்படியே ஸம்ஸ்க்ருத ச்லோகத்தில் புகவிடுவது பாஷையின் நாடியை அறியாதவர்களின் பணியாக இருக்குமேயல்லது, ஸர்வஜ்ஞர்களான பூருவர்களின் பணியாக இருக்கத் தகுதியில்லை. இங்கு **நந்தா** என்பது தமிழ்ச் சொல்லன்று என்றும், "**நந்தச்சாஸௌ ஆதீபச்ச நந்தாதீப:**" என்று வ்யுத்பத்தி கொண்டு ஸம்ஸ்க்ருத பதமாகவே கொள்ளத்தக்கதென்றும் கூறுவாருமுளரேனும், இதெல்லாம் பிராமாணிக பண்டிதர்களின் கோஷ்டியில் பாராட்டத் தகுந்த பேச்சல்ல என்பது திண்ணம். அந்த ச்லோகத்தைப் பற்றின உண்மை எப்படியாவது இருக்கட்டும். பிரகிருதம் நாம் எடுத்துக்கொண்ட காசினிவேந்து விசாரத்தில் நம்பிள்ளை முதலான பூருவாசாரியர்களின் திருவுள்ளத்திற்கு இணங்க ஸமந்வயப்படுத்த முடியுமாவென்று பார்க்கவேணும்.

மற்றொரு விசாரமும் குறிக்கொள்ள வேணும். நவ திருப்பதிகளில் 'தென் திருப்பேரை' என்பது ஒரு ப்ரஸித்தமான பெரிய திவ்யதேசம். '**பேராபுரீ**' என்று ஸம்ஸ்க்ருதத்தில் உள்ளதாகவும், அதை யநுஸரித்துப் பேரை யெனத் தமிழ்வழக்கு வந்ததாகவும் அத்தலத்திலுள்ள பெரியார் கூறுகின்றார்கள்.

மணவாள மாமுனிகள் திருவாய்மொழி நூற்றந்தாதியில் இந்த திவ்ய தேச விஷயமான திருவாய்மொழிப் பதிகத்திற்காக அருளிச் செய்த பாசுரத்தில் (வெள்ளிய காமங்கோட்டு (68) என்பதில்) இரண்டாமடி—"தெள்ளியமால் தென்திருப்பேர் சென்று புக." என்று ஓதப்பட்டு வருகின்றது. இங்கே 'தென்திருப்பேர்' என்பது ஆராயத்தக்கது. சோழநாட்டில் அப்பக்குடத்தான் ஸந்நிதியென்று வழங்கப்பெற்று வருகின்ற திவ்ய தேசத்திற்கே 'தென் திருப்பேர்' என்று பெயராதலாலும், பாண்டி நாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றான தென் திருப்பேரை அதனில் வேறுபட்டதேயாதலாலும் தென் திருப்பேரை விஷயமான இப்பாசுரத்தில் 'தென் திருப்பேர்' என்றிருக்க நியாயமில்லை. சிலர் "தென் திருப்பேரை சென்று புக" என்று திருத்துகின்றார்கள். அப்பாடத்தில் வெண்டளை பிறழுமாதலால் அதுவும் ஆதரிக்கத் தகுந்த பாடம் அன்று. "தெள்ளியமால் தென் பேரை சென்று புக" என்பது சில பெரியார் ஆதரிக்கும் பாடமென்று கேள்வி.

இங்கே நன்கு ஆராயவேண்டும்.

இந்த திவ்ய தேசத்தை நம்மாழ்வார் அருளிச்செய்யுமிடத்து "வெள்ளைச் சுரி சங்கொடாழி யேந்தி" என்கிற திருவாய்மொழியில் ஒரு பாசுரத்திலாவது (தென் திருப்பேரை) என்று அருளிச் செய்திருப்பதாகக் காணவில்லை. (தென் திருப்பேரையில்) என்றே காண்கிறது. தென் திருப்பேரை என்கிற சொல்லின்மேல் (இல்) என்பது ஏழாம் வேற்

ஸ்ரீவில்லிபுத்தூர் ஸமீபத்தில் '**திருத்தண்கால்**' என்பது ஒருதிருப்பதி. இதற்கு வடமொழிப் பெயரிட்டவர்கள் தங்கால க்ஷேத்ரமென்றிட்டு அப்படியே ச்லோகங்கள் செய்து வெளியிட்டிருக்கிறார்கள். அவை மஹர்ஷிகள் பணித்த ச்லோகமென்றும் சொல்லுகிறார்கள். தண்காலுக்கும் தங்காலத்துக்கும் பொருட் பொருத்தம் யாதோ அறிகின்றிலோம்.

பிற்பட்டவர்கள் யாராவது ஒருச்லோகமியற்றினால் அதைப் பூருவர்கள் தலையில் ஏற்றுவதும் வழக்கத்திலுள்ளதே. மற்றொன்றும் நிரூபிக்கிறோம். நவ திருப்பதி யெம்பெருமான்களுக்கு ஒரு கோர்வை ச்லோகம் ஏற்பட்டிருப்பது போலவே திருநாங்கூர்ப்பதினொரு திருப்பதி யெம்பெருமான்களுக்கும் ஒரு கோர்வை ச்லோகம் ப்ரஸித்தமாக வழங்கி வருகின்றது. அதாவது—"**நந்தாதீபகடப்ராணார்த்தக**" இத்யாதியாம். இதைச்சொல்லுகிறவர்களெல்லாரும் பூருவாசார்ய ஸ்ரீஸூக்தியாகவே சொல்லிவருகிறார்கள். அப்படியிருக்க நியாயமுண்டா என்பதை விவேகிகள் சிறிது விமர்சிக்கவேணும். இந்த ச்லோகம் (**நந்தாதீப**) என்று ஆரம்பம் பெற்றிருக்கின்றது. திருநாங்கூரைச் சேர்ந்த மணிமாடக் கோயில் நாராயணப் பெருமானுக்கு '**நந்தாவிளக்கு**' என்று திருமங்கையாழ்வார் இட்ட திருநாமமாதலால் அந்தத் தமிழ்த் திருநாமத்தை (**நந்தாதீப**) என்று ஸம்ஸ்க்ருதமாக்கியிருப்பதாக ஸ்பஷ்டமாகிறது. விளக்கு என்பதற்கு தீபமென்று மொழி பெயர்ப்பாக ஆய்விட்டாலும், **நந்தா** என்றிருப்பதானது மிகவும் விமர்சிக்கத்தக்கது. இது சுத்தமான தமிழ்ச்சொல். இதை அப்படியே ஸம்ஸ்க்ருத ச்லோகத்தில் புகவிடுவது பாஷையின் நாடியை அறியாதவர்களின் பணியாக இருக்குமேயல்லது, ஸர்வஜ்ஞர்களான பூருவர்களின் பணியாக இருக்கத் தகுதியில்லை. இங்கு **நந்தா** என்பது தமிழ்ச் சொல்லன்று என்றும், "**நந்தச்சாஸௌ ஆதீபச்ச நந்தாதீப:**" என்று வ்யுத்பத்தி கொண்டு ஸம்ஸ்க்ருத பதமாகவே கொள்ளத்தக்கதென்றும் கூறுவாருமுளரேலும், இதெல்லாம் பிராமாணிக பண்டிதர்களின் கோஷ்டியில் பாராட்டத் தகுந்த பேச்சல்ல என்பது திண்ணம். அந்த ச்லோகத்தைப் பற்றின உண்மை எப்படியாவது இருக்கட்டும். பிரகிருதம் நாம் எடுத்துக்கொண்ட காரினி வேந்து விசாரத்தில் நம்பிள்ளை முதலான பூருவாசாரியர்களின் திருவுள்ளத்திற்கு இணங்க ஸமன்வயப்படுத்த முடியுமா வென்றுபார்க்கவேணும்.

மற்றொரு விசாரமும் குறிக்கொள்ள வேணும். நவ திருப்பதிகளில் 'தென் திருப்பேரை' என்பது ஒரு ப்ரஸித்தமான பெரிய திவ்யதேசம். '**பேராபுரீ**' என்று ஸம்ஸ்க்ருதத்தில் உள்ளதாகவும், அதை யதாஸ்ரித்துப் பேரை யெனத் தமிழ்வழக்கு வந்ததாகவும் அக்குலத்திலுள்ள பெரியார் கூறுகின்றார்கள்.

மணவாள மாமுனிகள் திருவாய்மொழி நூற்றந்தாதியில் இந்த திவ்ய தேச விஷயமான திருவாய்மொழிப் பதிகத்திற்காக அருளிச் செய்த பாசுரத்தில் (வெள்ளியகாமங்கோட்டு (68) என்பதில்) இரண்டாமடி—"தெள்ளியமால் தென்திருப்பேர் சென்று புக." என்று ஓதப்பட்டு வருகின்றது. இங்கே 'தென்திருப்பேர்' என்பது ஆராயத்தக்கது. சோழநாட்டில் அப்பக்குடத்தான் ஸந்நிதியென்று வழங்கப்பெற்று வருகின்ற திவ்ய தேசத்திற்கே 'தென் திருப்பேர்' என்று பெயராதலாலும், பாண்டி நாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றான தென் திருப்பேரை அதனில் வேறுபட்டதேயாதலாலும் தென் திருப்பேரை விஷயமான இப்பாசுரத்தில் 'தென் திருப்பேர்' என்றிருக்க நியாயமில்லை. சிலர் "தென் திருப்பேரை சென்று புக" என்று திருத்துகின்றார்கள். அப்பாடத்தில் வெண்டளை பிறழுமாதலால் அது ஆதரிக்கத் தகுந்த பாடம் அன்று. "தெள்ளியமால் தென் பேரை சென்று புக" என்பது சில பெரியார் ஆதரிக்கும் பாடமென்று கேள்வி. இங்கே நன்கு ஆராயவேண்டும்.

இந்த திவ்ய தேசத்தை நம்மாழ்வார் அருளிச்செய்யுமிடத்து "வெள்ளைச் சுரி சங்கொடாழி யேந்தி" என்கிற திருவாய்மொழியில் ஒரு பாசுரத்திலாவது (தென் திருப்பேரை) என்று அருளிச் செய்திருப்பதாகக் காணவில்லை. (தென் திருப்பேரையில்) என்றே காண்கிறது. தென் திருப்பேரை என்கிற சொல்லின்மேல் (இல்) என்பது ஏழாம் வேற்

றுமையுருபாக ஏறியிருக்கிறதத்தனை யென்று சிலர் நினைக்கக்கூடும். ஒவ்வொரு பாசுரத்தையும் உற்று நோக்கி வந்தால் இந்த நினைவு தவறு என்று புலப்படும். "தென் திருப்பேரையில் சேர்வன் நானே" "தென் திருப்பேரையில் வீற்றிருந்த" "தென் திருப்பேரையில் சேர்வன் சென்றே" இத்யாதி பாசுரங்களில் 'பேரையில் என்பது ஏழாம் வேற்றுமை போல் தோன்ற நின்றாலும், 5, 6, 7, 9 பாசுரங்களைக் கொண்டு ஆராய்ச்சி செய்யுமளவில் "பேரெயில்" என்பதே இத்தலத்தின் பெயர் என்ன வேண்டியதாகின்றது. (பேர் × எயில் = பேரெயில்.) ஒன்பதாவது பாசுரத்தின் ஸகல வியாக்கியானங்களிலும் பேர் எயில் என்பதே தலத்தின் திருநாமமாக ஸ்பஷ்டமாய்க் காண்கிறது. சொல் வடிவத்தில் மாறுபாடு எப்போது விளைந்ததென்று அறியமுடியவில்லை. பிராமாணிகர்களான மஹான்கள் ஸாஹஸமின்றிக்கே விமர்சிக்க வேண்டிய விஷயங்கள் இவை. நமது திவ்யார்த்த தீபிகை காண்க.

# 10. ஆடி மாதம்.

## 32. ஆண்டாள்.

முன்பு திரேதாயுகத்திலே விதேஹ தேசத்தில் மிதிலைமாநகரில் ஜநக மஹாராஜன் யாகசாலை அமைத்தற் பொருட்டுக் கலப்பைகொண்டு பூமியை உழுகையில், அவ்வுழுபடைச் சாலிலே ஸ்ரீதேவியின் அம்சமான ஒருமகள்தோன்ற, அவளை அவ்வரசன் தன்புத்திரியாகப் பாவித்துச் சீதையென்று திருநாமஞ்சாத்தி வளர்த்து வந்தான். அதுபோலவே பின்பு கலியுகத்திலே பாண்டியநாட்டில் ஸ்ரீவில்லிபுத்தூரிலே பெரியாழ்வார் திருத்துழாய்ப் பாத்தியமைத்தற் பொருட்டுக் களைக்கொட்டுக்கொண்டு திருநந்தவனத்தைக் கொத்துகையில் அக்கொத்தின நிலத்தில் ஸ்ரீதேவிபூதேவிகளின் அம்சமான ஒருமகள் ஆடிமாசத்துப் பூர்வபல்குநி நாளிலேதோன்ற, அவளை அவ்வாழ்வார் தமது மகளாகப் பாவித்துக் கோதை என்று நாமகரணஞ்செய்து வளர்க்கலானார். நுகரப்படும் பொருள் ஒருசிறிதுமில்லாத வறியவனொருவன் பெருநிதியைக் கண்டாற்போல, அப்பெண்ணருங்கலத்தைக் கண்டவளவிலே பெருங்களிப்புக்கொண்டு மிக அருமையாகச் சீராட்டிப் பாராட்டித் தாலாட்டிப் பாலூட்டிப் பாவித்துவந்த பட்டர்பிரான், அவளுக்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்களைச் செய்து பரமஞானத்தைப் போதித்தனர்.

தந்தை முதலியோர் கண்டு வியக்கும்படி இளமை தொடங்கி எம்பெருமான் பக்கலிலே பக்திப் பெருவேட்கைகொண்டு அவனையேதான் மணஞ்செய்துகொள்ளக் கருதி, அப்பிரானது மஹிமைகளையே எப்பொழுதும் சிந்தித்தல் துதித்தல் முதலியனசெய்து நிற்கிற அச்சுரிகுழற்கோதை நாடோறும்விஷ்ணுசித்தர் வடபெருங் கோயிலுடையானுக்குச் சாத்துதற்காகக் கட்டிவைத்த திருமாலையை அவரில்லாத ஸமயம் பார்த்து எடுத்துத் தன் குழலில் தரித்துக்கொண்டு, 'அப்பெருமானுக்கு நான் நேரொத்திருக்கின்றேனோ இல்லையோ' என்று சிறந்த ஆபரணங்களை அணிந்து உயர்ந்த பட்டாடையை உடுத்துத் தன்னை அலங்கரித்து அவ்வொப்பனையழகைக் கண்ணாடியிலே கண்டு தந்தையார் வருவதற்குமுன் மலர்மாலையைக்களைந்து முன்போலவே செண்டாகச்சுற்றிப் பூங்கூடையிலுள்ளே நலங்காமல் வைத்துவந்தாள். ரஹஸ்யமாக நடக்கிற அச்செய்தியை உணராமல் ஆழ்வார் அம்மாலையைக் கொண்டுபோய் ஸ்வாமிக்குச் சாத்திவர; பெருமானும் ப்ரீதியுடன் ஏற்றருளினன்.

இங்ஙனம் பலநாள் கழிந்தபின் ஒருநாள், வெளியிற்சென்ற ஆழ்வார் விரைவில் மீண்டு வந்தபொழுது, பூமாலையைக் கோதை சூடியிருக்கலைப்பார்த்துக் கோபங்கொண்டு பெண்ணே! நீசெய்த இது மிக்க அபசாரமான காரியம்: இனி இவ்வாறுசெய்தற்கு நினைப்

புக்கொள்ளாதே' என்று தங்கைக்கு நற்புத்தி சொல்லிவிட்டு அன்று வடபத்திர சாயிக்கு மாலை சாத்தாமல் திருப்பணிக்கு முட்டுப்பாடு நேர்ந்ததற்கு மனம் வருந்தியிருந்தார். அன்று ராத்திரியில் ஆலிலைத்துயில்வோன் ஆழ்வாரது கனவில்தோன்றி, 'இன்று நீ நமக்கு மாலை கொண்டு வாராதிருந்தது ஏன்?' என்று வினவியதற்கு, அவர்தம் திருமகளாரது பொருந்தாச் செய்கையை விண்ணப்பஞ்செய்ய, அதுகேட்டு அப்பெருமான், அவள் சூடிக்கொடுத்த மாலையின் நறுமணமிக்கு நமது உள்ளத்துக்கு நனி உகப்பாவது; ஆதலின் இனி அத்தகைமைத்தான தொடையலையே நமக்குக் கொண்டுவருவாய்' என்று அருளிச்செய்தனன். உடனே கண்விழித்த விஷ்ணுசித்தர் அம்மங்கையை மலர் மங்கையென்றே எண்ணி அவளிடத்து அளவற்ற அன்பு கொண்டு அனைத்துலகத்துக்கும் அன்னையாய் அவற்றை ஆண்டு வருகிற இலக்குமியின் அவதார விசேஷமென்ற காரணந்தால், அவளுக்கு 'ஆண்டாள்' என்றும் பெருமானுக்குரிய மலர்மாலையைத் தான் சூடிக்கொண்டு பின்பு கொடுத்தது காரணமாகச் 'சூடிக்கொடுத்த நாச்சியார்' என்றும் திருப்பெயரிட்டு அழைத்துவந்தார்.

அந்நாச்சியார் தனது பருவம் வளருந்தோறும் ஞானபக்திகளும் உடன் வளர்ந்து வரப்பெற்று, தனக்கு ஏற்ற காதலனாகக் கருதிய கடல்வண்ணன் விஷயமான வேட்கை மிஞ்சியவளாகி, இனி அவனை ஒரு நொடிப்பொழுதும் கூடாதிருக்கப்பொறாமல், கண்ணனது பிரிவை ஆற்றாத ஆயர்மங்கைகள்போலத் தானும் நோன்புநோற்று உயிர்தரிப்பவளாய் அவ்வபிப்பிராயத்தைத் திருப்பாவை நாச்சியார்திருமொழி என்ற திவ்வியப் பிரபந்தங்களின் மூலமாகப் பகவத் ஸந்நிதியிலே விண்ணப்பஞ்செய்து வாழ்ந்திருந்தாள்.

இப்படி யிருக்கையில், இவட்கு விவாஹத்துக்கு ஏற்றபருவம் வந்ததைக்கண்டு தந்தையார் இவளுக்கு ஏற்றகொழுநனைக்காணப்பெறாது கவலைப்பட்டு இவளையழைத்து நீ யார்க்கு வாழ்க்கைப்பட விரும்புகின்றாய் என்று வினவ, ஆண்டாள் "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்றுசொல்ல, பட்டர்பிரான் பின்னை எங்ஙனம் நிகழ்வது என்று கேட்க, சூடிக்கொடுத்தாள் 'பெருமானுக்கே உரியவளாக விருக்கிறேன்' என்று கட்டுரைத்தாள்.

அதுகேட்டு விஷ்ணுசித்தர் நூற்றெட்டுத்திருப்பதிகளிலுள்ள எம்பெருமான்களுள் யார்க்கு வாழ்க்கைத்துணைவியாகத் துணிகின்றாய்? என்று விசாரித்தலும், கோதை 'அவ்வெம் பெருமான்களுடைய வைபவத்தை விளங்க எடுத்துக்கூறி யருளவேண்டும்' எனவேண்ட, பெரியாழ்வாரும் அவ்வாறே எடுத்து அருளிச்செய்து வருகையில், ஆண்டாள் வடமதுரையில் எழுந்தருளியுள்ள கண்ணபிரானது வரலாற்றைக் கேட்ட வளவிலே மயிர் சிலிர்ப்பும், திருவேங்கட முடையானது வரன்முறையைச் செவியுற்றபொழுது முகமலர்ச்சியும், திருமாலிருஞ்சோலைமலையழகரது வடிவழகை அறிந்த மாத்திரத்தில் மனமகிழ்ச்சியும் பெற்று ஸ்ரீரங்கநாதனது மஹிமை செவிப்பட்டவுடனே அளவற்ற ஆனந்த மடைந்து நிற்க, அப்பொழுது அந்தந்தத் திருப்பதி யெம்பெருமான்க ளெல்லாரும் இவளது ஸுயம்வரத்தை யுத்தேசித்து ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு எழுந்தருளி இவளது ஞானக்கண்ணுக்கு விஷயமாக, இவள் அவர்களுள் ரங்கநாதனிடத்தே மனத்தைச் செலுத்தி அவனுக்கே தன்னை மணமகளாக நிச்சயித்து அவ்வமலனையே ஸர்வகாலமும் சிந்தித்திருந்தாள்.

அந்நிலையறிந்த ஆழ்வார் 'நம்பெருமான் இவளைக் கடிமணம் புரிதல் கைகூடுமோ' என்று சிந்தித்திருக்கையில். திருவரங்கச் செல்வன் இவருடைய ஸ்வப்நத்திலே யெழுந்தருளி உமது திருமகளைக் கோயிலுக்கு அழைத்துக்கொண்டு வாரும். அவளை யாம் அங்கீகரிப்போம் என்று அருளிச்செய்ய, அதனால் விஷ்ணுசித்தர் வியாகுலம் நீங்கி மனமகிழ்ந்திருந்தனர். பின்பு ஸ்ரீரங்கநாதன் ஸ்தாநிகர் முதலிய கோயிற் பரிஜனங்களுடைய கனவிலே தோன்றி 'நீங்கள் ஸகல மங்களவாத்தியங்களோடும் சத்திர சாமராதிகளோடும் நமது நவரத்தினப் பல்லக்கையும் உடன்கொண்டு வில்லிபுத்தூர்க்குச்சென்று ஆண்டாளைப் பல்லக்கிலேற்றி அழைத்துவாருங்கள்' என்றுகட்டளையிட்டான். அவ்வாறே எல்லாப்பரி

புங்கொள்ளாதே’ என்று நங்கைக்கு நற்புத்தி சொல்லிவிட்டு அன்று வடபத்திர சாயிக்கு மாலை சாத்தாமல் திருப்பணிக்கு முட்டுப்பாடு நேர்ந்ததற்கு மனம் வருந்தியிருந்தார். அற்றை நாளிரவில் ஆலிலைத்துயில்வோன் ஆழ்வாரது கனவில்தோன்றி, ‘இன்று நீ நமக்கு மாலை கொண்டு வாராதிருந்தது என்?’ என்று வினவியதற்கு, அவர் தம் திருமகளாரது பொருந்தாச் செய்கையை விண்ணப்பஞ்செய்ய, அதுகேட்டு அப்பெருமான், ‘அவள் சூடிக்கொடுத்த மாலையின் நறுமணமிக்கு நமது உள்ளத்துக்கு நனி உகப்பாவது; ஆதலின் இனி அத்தன்மைத்தான தொடையலையே நமக்குக் கொண்டுவருவாய்’ என்று அருளிச்செய்தனன். உடனே கண்விழித்த விஷ்ணுசித்தர் அம்மங்கையை மலர் மங்கையென்றே எண்ணி அவள்திறத்து அளவற்ற அன்பு கொண்டு அனைத்துலகத்துக்கும் அன்னையாய் அவற்றை ஆண்டு வருகிற இலக்குமியின் அவதார விசேஷமென்ற காரணத்தால், அவளுக்கு ‘ஆண்டாள்’ என்றும் மாதவனுக்குரிய மலர்மாலையைத் தான் சூடிக்கொண்டு பார்த்துப் பின்புகொடுத்தது காரணமாகச் ‘சூடிக்கொடுத்த நாச்சியார்’ என்றும் திருப்பெயரிட்டு அழைத்துவந்தார்.

அந்நாச்சியார் தனது பருவம் வளருந்தோறும் ஞானபக்திகளும் உடன் வளர்ந்து வரப்பெற்று, தனக்கு ஏற்ற காதலனாகக் கருதிய கடல்வண்ணன் விஷயமான வேட்கை விஞ்சியவளாகி, இனி அவனை ஒரு நொடிப்பொழுதும் கூடாதிருக்கப்பொறாமல், கண்ணனது பிரிவை ஆற்றாத ஆயர்மங்கைகள்போலத் தானும் நோன்புநோற்று உயிர்தரிப்பவளாய் அவ்வபிப்பிராயத்தைத் திருப்பாவை நாச்சியார்திருமொழி என்ற திவ்வியப் பிரபந்தங்களின் மூலமாகப் பகவத் ஸந்நிதியிலே விண்ணப்பஞ்செய்து வாழ்ந்திருந்தாள்.

இப்படி யிருக்கையில், இவட்கு விவாகத்துக்கு ஏற்றபருவம் வந்ததைக்கண்டு தந்தையார் இவளுக்கு ஏற்றகொழுநனைக்காணப்பெறாது கவலைப்பட்டு இவளையழைத்து நீ யார்க்கு வாழ்க்கைப்பட விரும்புகின்றாய் என்று வினவ, ஆண்டாள் “மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்” என்றுசொல்ல, பட்டர்பிரான் பின்னை எங்ஙனம் நிகழ்வது என்று கேட்க, சூடிக்கொடுத்தாள் ‘பெருமானுக்கே உரியவளாக விருக்கிறேன்’ என்று கட்டுரைத்தாள்.

அதுகேட்டு விஷ்ணுசித்தர் நூற்றெட்டுத்திருப்பதிகளிலுள்ள எம்பெருமான்களுள் யார்க்கு வாழ்க்கைத்துணைவியாகத் துணிகின்றாய்? என்று விசாரித்தலும், கோதை ‘அவ்வப் பெருமான்களுடைய வைபவத்தை விளங்க எடுத்துக்கூறி யருளவேண்டும்’ எனவேண்ட, வேயர்குலத்தலைவரும் அவ்வாறே எடுத்து அருளிச்செய்து வருகையில், ஆண்டாள் வடமதுரையில் எழுந்தருளியுள்ள கண்ணபிரானது வரலாற்றைக் கேட்ட வளவிலே மயிர்ச்சிலிர்ப்பும், திருவேங்கட முடையானது வான்முறையைச் செவியுற்றபொழுது முகமலர்ச்சியும், திருமாலிருஞ்சோலைமலையழகரது வடிவழகை அறிந்த மாத்திரத்தில் மனமகிழ்ச்சியும் பெற்று ஸ்ரீரங்கநாதனது மஹிமை செவிப்பட்டவுடனே அளவற்ற ஆனந்த மடைந்து நிற்க, அப்பொழுது அந்தந்தத் திருப்பதி யெம்பெருமான்க ளெல்லாரும் இவளது சுயம்வரத்தை யுத்தேசித்து ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு எழுந்தருளி இவளது ஞானக்கண்ணுக்கு விஷயமாக, இவள் அவர்களுள் ரங்கநாதனிடத்தே மனத்தைச் செலுத்தி அவனுக்கே தன்னை மணமகளாக நிச்சயித்து அவ்வமலனையே ஸர்வகாலமும் சிந்தித்திருந்தாள்.

அதனையறிந்து ஆழ்வார் ‘நம்பெருமான் இவளைக் கடிமணம் புரிதல் கைகூடுமோ’ என்று சிந்தித்திருக்கையில், திருவரங்கச் செல்வன் இவருடைய ஸ்வப்நத்திலே யெழுந்தருளி உமது திருமகளைக் கோயிலுக்கு அழைத்துக்கொண்டு வாரும். அவளை யாம் அங்கீகரிப்போம் என்று அருளிச்செய்ய, அதனால் விஷ்ணுசித்தர் வியாகுலம் நீங்கி மனமகிழ்ந்திருந்தனர். பின்பு ஸ்ரீரங்கநாதன் ஸ்தாநிகர் முதலிய கோயிற் பரிஜனங்களுடைய கனவிலே தோன்றி ‘நீங்கள் ஸகல மங்களவாத்தியங்களோடும் சத்திர சாமராதிகளோடும் நமது நவரத்தினப் பல்லக்கையும் உடன்கொண்டு வில்லிபுத்தூர்க்குச்சென்று ஆண்டாளைப் பல்லக்கிலேற்றி அழைத்துவாருங்கள்’ என்றுகட்டளையிட்டான் அவ்வாறே எல்லாப்பரி

காத்தாரும் சென்று பெரியாழ்வாரையடுத்து நம்பெருமாளது அருளப்பாட்டை விண்ணப் பஞ்செய்ய, கர்ணாம்ருதமான அவ்வார்த்தையைச் செவியாரக் கேட்டுச் சந்தோஷித்து, கோதைதாதை, வடபெருங்கோயிலுடையானுடைய ஸந்நிதியிலே ஸ்ரீரங்கநாதனது நியமனத்தை விண்ணப்பஞ்செய்து அநுமதி பெற்றுப் பிரயாணமாயினர். அச்செய்தியைக் கேள்வியுற்று ஸ்ரீவல்லபதேவன் அக்கல்யாண மஹோத்ஸவத்தைத் தானும் உடனிருந்து விசேஷமாக நடத்திக்கொண்டு களிகூர்ந்து க்ருதார்த்தனாகக் கருதித் தன் ஏவலாளரைக்கொண்டு ஸ்ரீவில்லிபுத்தூரையும் ஸ்ரீரங்கநகரத்தையும் இவ்விரண்டுக்கும் நடுவிலுள்ள நெடுவழியையும் தண்ணீர் தெளித்தும் பூப்பந்தலிட்டும் தோரணங்கட்டியும் வாழைகமுகு நாட்டியும் நன்றாக அலங்கரிப்பித்துக் கஜதுரங்காதி சதுரங்க பலத்துடனே ஆழ்வார்பக்கல்வந்து சேர்ந்தான். அப்பால் பட்டர்பிரான் ஆண்டாளை மணிச்சிவிகையில் எழுந்தருளப்பண்ணி மங்களவாத்திய கோஷத்துடனே 'ஆண்டாள் வந்தாள்! சூடிக்கொடுத்த சுடர்க்கொடிவந்தாள்! சுரும்பார் குழற்கோதை வந்தாள்! திருப்பாவை பாடிய செல்விவந்தாள்! பட்டர்பிரான் புதல்விவந்தாள்! வேயர் குலவிளக்கு வந்தாள்! என்று பலசின்னங்கள் பணிமாற, மெய்காப்பாளர் உடன் சூழ்ந்து நிற்க, தாமும் அரசனுமாக இருபுறத்தும் இடைவிடாதிருந்து அழைத்து வந்து திருவரங்கம் பெரியகோயிலை யடைந்து பெரியபெருமாளுடைய முன்மண்டபத்திலே அப்பிராட்டியை நிறுத்திப் பெருமாளைச் சேவிக்கப் பண்ணுவிக்கையில், அத்திருமாலின் திவ்யஸௌந்தர்யம் இரும்பைக் காந்தம் இழுக்கின்றவாறுபோல ஆண்டாளைக் கவரத் தொடங்கியதனால், சூடிக்கொடுத்த நாச்சியார் சிலம்பார்க்கச் சீரார்வளையொலிப்பக் கொடியேரிடையாடக் காதளவுமோடிக் கயல்போல் மிளிருங்கடைக்கண் பிறழ அன்னமென்னடை கொண்டு அருகிற்சென்று ஆநந்தக்கடலில் ஆழ்ந்து திருவரங்கன்திருவடி வருடக் கருதி நாகபர்யங்கத்தை மிதித்தேறி நம்பெருமாள் திருமேனியிலே ஐக்கியமாயினள். ... *

## 33. ஆளவந்தார்.

ஆடிமாதம் உத்தராடத்தில் இப்பரமாசார்யரின் திருவவதாரம். நம்முடைய தர்சனத்தில் ஆளவந்தாரைப்போன்ற வித்வத் ஸார்வபௌமர் இதற்குமுன்பு தோன்றினதுமில்லை, இனித் தோன்றப் போகிறதுமில்லையென்று திண்ணமாகச்சொல்லலாம். * ஸ்வயம் உபாஸ்து கேவலம் ஸ்வயம் கேவலதந்த்ரபாரகா: * என்று இவர்தாமே யருளிச் செய்தபடி கவித்திறத்தில் வந்தாலும் 'நாநாசாஸ்த்ர வைதுஷ்யத்தில் வந்தாலும் ஒத்தாரும் மிக்காருமின்றிக்கே அத்விதீயரான வ்யக்தி இவரொருவரே. ஸ்வாமி எம்பெருமானார் இவ்வாசிரியரை நேரில் ஸேவித்து இவர் திருவடிகளிலே பரிசர்யைகளைப் பண்ணி அர்த்த விசேஷங்களை அறிய ப்ராப்தியற்றவரானாலும் "ஆம் முதல்வனிவன்" என்று இவர் விசேஷ கடாக்ஷம் செய்தருளினதே ஹேதுவாக அவர் விளக்கில்கொளுத்தின தீவட்டிபோல மஹாதேஜஸ்வியாக விளங்கி உலகுக்கு ஒருயிராகி நின்றார். இவ்விஷயத்தை ஸ்வாமி தாமே தம்முடைய திருவாக்கினால் ஒருவாறு காட்டியருளினார். கீதாபாஷ்யத்தின் உபக்ரமத்தில் * யத்பதாம்போருஹத்யாந வித்வஸ்தாசேஷகல்மஷ:, வஸ்துதாமுபயாதோஹம் யாமுநேயம் நமாமி தம் * என்றருளிச் செய்த ச்லோகம் இங்கு அநுஸந்திக்கவுரியது. இதில், ஆளவந்தார் தம்மைக் கடாக்ஷித்தருளினதுதானே ஹேதுவாகத் தாம் சீர்மை பெற்றதாக அருளிச் செய்யாமல், தாம் அவருடைய திருவடித் தாமரைகளையே சிந்தித்து அதனால் சீர்மை பெற்றதாகச் சொல்லியிருக்கிறார்; இதனுடைய உட்கருத்து யாதெனில், ஆளவந்தார் என்னைக் கடாக்ஷித்தருளினதன் பயனாகவே நான் அவரது திருவடிமலரைச் சிந்திக்கும் பாக்கியம் பெற்றேனென்பதாம். *குருபாதாம்புஜம் த்யாயேத் * என்கிற சாஸ்த்ரவிதியைப் பின்பற்றியருளிச் செய்தவாறு.

ஸ்வாமி ஆளவந்தாரிடத்தில் நேரில் அர்த்த விசேஷங்கள் கேட்கப்பெறாத குறைதீர அவருடைய திருவடிகளில் ஆச்ரயித்த உயர்ந்தவர்களெல்லாரையும் தாம் ஆச்ரயித்து ஒவ்வொருவரிடத்திலும் அர்த்த விசேஷங்களை யதிகரித்து * பஞ்சாசார்யபதாச்ரித: * என்னும் விருதுபெற்றார். "ஆளவந்தாரோடு நான் கூடியிருந்தேனாயின் பரமபதத்திற்குப் படிகட்-

டியிருப்போன" என்று ஸ்வாமி ஸாதித்ததாக ப்ரஸித்தமான வார்த்தையே இவருடைய ஒப்புயர்வற்ற பெருமையை விளக்காநின்றது. நித்ய விபூதியும் லீலாவிபூதியும் சேர்ந்து ஒரு விபூதியாகவே ஆய்விட்டால் உபயவிபூதிநாதனென்று தான் வஹிக்கும் விருதுக்குக் குறை விளைந்திடுமேயென்கிற எண்ணத்தினாலேயே எம்பெருமான் இவ்வாசிரியர்களைக் கூட்டி வைக்கவில்லைபோலும்.

உபய வேதாந்த ரஹஸ்ய ப்ரஸ்தாநங்களில் இப்போது நாம் அநுபவித்து வரும் அர்த்த விசேஷங்களுக்கெல்லாம் ஆகரம் ஆளவந்தாரேயென்பதில் அதிசயோக்தியில்லை. இவரருளிச் செய்த ஸித்தித்ரயம் முதலான உத்துங்க சாஸ்த்ர க்ரந்தங்கள் இருக்கட்டும். ஆளவந்தார் ஸ்தோத்ரம் என்று வழங்குகின்ற ஸ்தோத்ர க்ரந்தமானது மஹாவித்வான்களுக்கும் பக்தர்களுக்கும் * எனக்குத் தேனே பாலே கன்னலே அமுதே * என்று உள் குழைந்து பேசும்படியாக அமைந்து, உட்புகுந்து நோக்க நோக்க உபய வேதாந்த ரஹஸ்யார்த்தங்களனைத்தையும் அழகாகவும் எளிதாகவும் கொள்ளலாம்படி மஹோபகாரம் செய்திருக்கிற மாண்பு வாசாமகோசரம். இதற்கு ஸ்தோத்ர ரத்நம் என்று திருநாமம் சாத்தியுள்ளார்கள். ஸம்ப்ரதாயம் வல்ல பெரியார்கள் மூன்று ரத்னங்கள் என வழங்குகிறார்கள். (1) ஸ்ரீ விஷ்ணுபுராணத்தைப் புராணரத்நமென்பர்கள். [இது ஆளவந்தார் ஸ்தோத்ரத்தில் நான்காவது ச்லோகத்தில் காணத்தக்கது.] (2) த்வயம் என்கிற மந்த்ரத்தை மந்த்ரரத்நமென்பர்கள். [இது ஸ்ரீ வரவரமுநி திநசர்யையில் * மந்த்ரரத்நாநுஸந்தாந ஸந்தத ஸ்புரிதாதரம் * என்பதில் காணத்தக்கது.] இனி மூன்றாவது ரத்னம் ஸ்தோத்ரரத்நமென்று வழங்கப்படுகிற இவருடைய ஸ்தோத்ரமேயாகும். இதன் எளிமையும் இனிமையும் வாசாமகோசரம். ஆழ்வான் பட்டர் முதலான ஆசார்யர்கள் பணித்த ஸ்தவங்களுக்கு இந்த ஸ்தோத்ரரத்நமே வழிகாட்டியாயிருந்தாலும் இதனுடைய போக்யதை மற்று எதற்கும் அமையவில்லை. ஆளவந்தாருடைய நியமனத்தினால் எம்பெருமானாரை மீட்படுத்திக்கொள்வதற்காகக் காஞ்சீபுரத்திற் கெழுந்தருளின பெரிய நம்பி, சாலக்கிணற்றில் நின்றும் திருமஞ்சன தீர்த்த மெழுந்தருளப் பண்ணிக்கொண்டு போராநின்ற அவரை (எம்பெருமானாரை)ச் சார்ந்து பின்புறத்திலே இந்த ஸ்தோத்ரரத்நத்தில் ஒரு ச்லோகத்தைச் செவிக்கினிதாக அநுஸந்தித்து வருகையில், எம்பெருமானார் திரும்பிப்பார்த்து 'இது யாருடைய திவ்ய ஸூக்தி?' என்று நம்பியை நோக்கிக் கேட்க, அவரும் 'இது ஆளவந்தாருடைய திவ்ய ஸூக்தி' என்றுரைக்க 'ஆகில் அவரை அடியேன் ஸேவிக்கவேணுமே' என்று எம்பெருமானார் கூற, 'ஆகலாம், நம்மோடே வந்து ஸேவிக்கலாம்' என்று பெரிய நம்பி பணிக்க, அப்போதே திருக்கச்சி நம்பியிடம் விடைபெற்றுக்கொண்டு பெரிய நம்பிகளுடன் கோயிலுக்குப் புறப்பட்டருளினதாகக் காண்கிறது. இப்படி எம்பெருமானார் திருவுள்ளத்தைக் கொள்ளைகொண்ட ஸ்ரீஸூக்தியின் பெருமையை நாமோ பகர்வது!.

ஆளவந்தார் திருவடிகளே சரணம்.

# 11. ஆவணி மாதம்.

இம்மாதத்தில் ஆழ்வார்களில் ஒருவரும் அவதரித்திலர். "ஈச்வரன் தானும் ஆசார்யத்வத்தை பாசைப்பட்டிருக்கும்" என்று ஸ்ரீவசனபூஷணத்திலருளிச் செய்தபடி ஆசார்யத்வத்தை யாசைப்பட்டு கீதாசார்யனென்று பேர்பெற்ற கண்ணபிரானும் பெரியவாச்சான் பிள்ளையும் இம்மாதத்தில் திருவவதரித்தவர்கள். இருவருடைய நக்ஷத்திரமும் ரோஹிணியே. இவ்விருவருடையவும் பெருமைக் கடலில் சிலதிவலைகளை இங்கு அநுபவிப்போம்.

## 33. கண்ணபிரான்.

ஸ்ரீக்ருஷ்ணனுடைய திவ்யசரிதம் ஸ்ரீவிஷ்ணுபுராணம் ஸ்ரீபாகவதம் ஹரிவம்சம் மஹாபாரதம் முதலானவற்றில் அபரிமிதமாக இருந்தாலும் நம்முடைய ஆழ்வார்கள் தமது

ஸ்தானங்களை அடையலாயினர். அக்காலத்தில் மதுராநகரத்தில் யதுவம்சத்தாரில் உக்ரஸேநன் என்னுமொருதார்மிகன் அரசனாயிருந்தான்; அவனது மகன் கம்ஸனென்பான். இக்கஞ்சன் துஷ்டர்களில் தலைவனாயிருந்துகொண்டு பெரியோர்கட்குத் தீமையும் புல்லியர்கட்கு நன்மையும் செய்துகொண்டு தன் பலத்தினால் தனது தந்தையாகிய உக்ரஸேநனைச் சிங்காதனத்தினின்று தள்ளிவிட்டுத் தான் அரசாண்டு வருங்காலத்து; கம்ஸன் தனது உடன்பிறந்தவளாகிய யுக்தவயதுவாய்ந்த தேவகியை வஸுதேவருக்கு விவாஹம் செய்வித்து அவ்விவாகம் முடிந்தபின் அவளை வஸுதேவர்மாளிகையிற் கொண்டு விடுகைக்காகத் தேரேற்றிக்கொண்டு தான் தேவகியிடத்தில் மிக்க அன்பு ஆதரத்துடன் ஸாரதியாயிருந்து தேரைநடத்திக்கொண்டு வரும்போது, ஆகாயத்தில், “அறிவுகேடனே! நீ யாரிடத்தில் அன்பு பூண்டிருக்கின்றனையோ, அத்தேவகியின் எட்டாவது கர்ப்பம் உன்னைக் கொல்லப்போகிறது’ என்று அசரீரவாக்குப் பிறக்க, அதனைக்கேட்ட கம்ஸன் மிகவும் திடுக்கிட்டு, ‘இனி நாம் தப்பவழி யாது?’ என்று யோசித்து, ‘இவள் பிழைத்திருந்தாலன்றோ இவளது எட்டாவது பிள்ளை நம்மைக் கொல்லப்போகிறது; இப்போதே இவளைக் கொன்று விடுவோம்’ என்றுறுதியிட்டுக் கத்தியை உருவிக்கொண்டு தேவகியைக் கொலைசெய்யப்புக, வசுதேவர் அவனுக்குப் பல தருமங்களையும் காலத்தியையும் பார்க்க உபதேசிக்கவும் அவன் அதை மதியாமல் ஓரே பிடிவாதமாய் நிற்க பின்பு வஸுதேவர் தந்திரோபாயமாக ‘அப்பா! உனக்கு இவள்கையால் சாவு இல்லையே; இவளுடைய பிள்ளையினாலல்லவோ சாவுநேரிடப்போகிறது; இவளுக்குப் பிள்ளை பிறந்தவுடன் அப்பிள்ளைகளை உன்னிடம் கொடுத்துவிடுகிறேன், நீ அவற்றைக் கொன்றுவிடு’ என்று சொல்ல; கம்ஸன் அதை யுக்தமென்று கொண்டு அத்தம்பதிகளை விலங்கிட்டுச் சிறையிலடைத்திட்டான்.

திருமால் தேவகியிடம் எட்டாவது கர்ப்பத்தில் [ஆவணி மாதம் க்ருஷ்ணாஷ்டமி கூடிய ரோஹிணீ நக்ஷத்திரத்தில் இரவு விருஷபலக்கினத்தில்] ஸ்ரீக்ருஷ்ணனாய் அவதரிக்க, அப்போதே வசுதேவ தேவகிகளின் கால்விலங்கு இற்று முறிந்து விழுந்தொழிந்தது. அப்போதே வஸுதேவர் கண்ணபிரானைக்கொண்டு சென்று திருவாய்ப்பாடியில் நந்தகோபர் திருமாளிகையில் ஸுகஸ்திதனாயிருக்கும்படி விட்டுவந்தார்.

## பேய்ச்சிமுலை சுவைத்து அவள்மாள உயிருண்டது.

ஒருத்திமகனாய்ப்பிறந்து ஓரிரவிலோருத்திமகனாயொளித்துவளர்கின்ற ஸ்ரீக்ருஷ்ண சிசுவை நாடியுணர்ந்து கொல்லும்பொருட்டுக் கஞ்சன் பல அசுரர்களை ஏவ அவர்களில் ஒருத்தியான பூதனையென்னும் ராக்ஷஸி நல்ல பெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்கு வந்து, அங்குத் தூங்கிக்கொண்டிருந்த க்ருஷ்ண சிசுவையெடுத்துத் தனது நஞ்சு தீற்றிய முலையைக் கொடுத்துக் கொல்லமுயல, பகவானாகிய குழந்தை அவ்வரக்கியின் ஸ்தனங்களைக் கைகளால் இறுகப்பிடித்துப் பாலுண்கிற பாவனையிலே அவளுயிரையும் உறிஞ்சி அவளைப் பேரிரைச்சலிட்டுக் கதறி உடம்பு நரம்புகளின் கட்டெல்லாம் நீங்கி விழுந்து இறக்கும்படி செய்தருளினன்.

## தாளைநிமிர்த்துச் சகடுமுறித்தது.

நந்தகோப க்ருஹத்தில் ஒரு வண்டியின் கீழ்ப்புறத்திலே கண்ணனைத் தொட்டிலிலிட்டுக் கண்வளர்த்தி யசோதை யமுனை நீராடப்போனாள். கம்ஸனால் ஏவப்பட்ட அசுரனொருவன் அச்சகடத்தில் வந்து ஆவேசித்து ஸ்ரீக்ருஷ்ண சிசுவின்மேலே விழுந்து கொல்லமுயன்றதை அறிந்த அப்பகவான், பாலுக்கு அழுகிற பாவனையிலே தன் சிறிய திருவடிகளை மேலேதூக்கி உதைத்தருள, அவ்வுதைபட்ட மாத்திரத்தில் அச்சகடு திருப்பப்பட்டுக் கீழேவிழுந்து அசுரனுட்பட அழிந்தது.

## இரட்டைமருதமரங்களை முறித்தது.

குழந்தைப் பருவமுள்ள கண்ணன் துன்பப்படுத்துகின்ற பல விளையாடல்களைச் செய்யக்கண்டு கோபித்த யசோதை க்ருஷ்ணனைத் திருவயிற்றிற் கயிற்றினாற் கட்டி ஓருரலிலே பிணித்து விட, கண்ணன் அவ்வுரலை இழுத்துக் கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை மருதமர [யமளார்ஜுனம]த்தின் நடுவே எழுந்தருளியபொழுது அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும் முறிந்து விழுந்தவளவில், முன் நாரதர் சாபத்தால் அம்மரங்களாய்க்கிடந்த நளகூபரன் மணிக்ரீவன் என்னும் குபேர புத்திரர் இருவரும் சாபந்தீர்ந்து சென்றனர்.

## கண்ணன் வாயினில் வையமேழுங்கண்டது.

ஒருநாள் கண்ணன் வீதியில் விளையாடிக் கொண்டிருக்கையில் பலராமன் வந்து ‘அம்மா! க்ருஷ்ணன் மண்ணைத்தின்கின்றான்’ என்று சொல்லக்கேட்ட யசோதை ஓடிப்போய்க் கண்ணனை வாரியெடுத்

தும்கொண்டு உள்ளே வந்து என் மண்ணைத்தின்றாய் ? என்று வெருட்ட, அதற்குக் கண்ணன் 'அம்மா நான் மண்ணைத்தின்னவில்லை ; பலராமன் என்மேல் வீணுகக் கோள் சொல்லுகிறான். வேணுமாகில் என் வாயைப்பார்' என்று தன் வாயைத்திறந்து காட்ட, யசோதை அவ்வாய் வழியாக அவனுடைய திருவயிற்றில் ஏழு குலபர்வதங்களையும் ஏழு கடல்களையும் ஏழு தீவுகளையுமுடைய இப்பூமி முழுவதையுங் கண்டு " இவன் ஆயர் புத்திரனல்லன் ஒரு தெய்வம் " என்று நிர்ணயித்துப் பின்னையும் சிறிதுநேரத்தில் அந்த புத்திமாறித் தன்னுடைய பிள்ளையென்றெண்ணிக் கண்ணனை யெடுத்து முத்தமிட்டாள்.

## காளியனுச்சியில் நட்டம்பாய்ந்தது.

இப்படி யிருக்கையில் ஒருநாள் கிருஷ்ணன் கன்றுகளை ஓட்டிக்கொண்டு ஒருவரும் ஸஞ்சரியாத வழியே போகத்தொடங்க, மற்ற இடைப்பிள்ளைகள் அழைத்து 'க்ருஷ்ணா ! அவ்வழி போகவேண்டா ; அவ்வழியிற் சென்றால், யமுநாநதியில் ஓர் மடுவில் இருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்கினியால் கொதிப்பண்டத்த நீருள்ளதாய்ப் பானத்துக்கு அனர்ஹமாம்படி செய்த காளிய னென்னும் கொடிய ஐந்தலைநாகம் குடும்பத்தோடும் வாஸஞ்செய்துகொண்டு அணுகினவர்களனைவரையும் பிணமாக்கி விடுதலால் நாங்கள் அஞ்சுகின்றோம்' என்ன ; அதைக்கேட்ட கண்ணபிரான் உடனே அக்காளிய நாகத்தைத் தண்டிக்கவேண்டுமென்ற திருவுள்ளங்கொண்டு அம்மடுவிற்குச் சமீபத்திலுள்ளதொரு கடம்ப மரத்தின் மேலேறி அம்மடுவிற் குதித்து, கொடிய அந்நாகத்தின் படங்களின் மேல் ஏறித் துவைத்து நர்த்தனஞ்செய்து கன்று வலியடக்குகையில், மாங்கலிய பிக்ஷை இட்டருளவேண்டுமென்று தன்னை வணங்கிப் பிரார்த்தித்த நாக கன்னிகைகளின் விண்ணப்பத்தின்படி அந்தக் காளியனை உயிரோடு கடலிற்சென்று வாழும்படி விட்டருளினன்.

## தேனுகனென்னுங் கழுதையைக் கொன்றது.

ஒருநாள் கண்ணபிரான், பலராமனோடும் ஆயர் சிறுவர்களோடும் ஆநிரை மேய்த்துக் கொண்டு பழங்கள் அழகாக மிகுதியாய்ப் பழுத்து வாஸனை வீசிக்கொண்டிருந்த ஒரு பனங்காட்டையடைந்து அப் பனம்பழங்களை விரும்பி உதிர்த்துக்கொண்டு வருகையில், அவ்வனத்துக்குத் தலைவனும் கம்ஸன் பரிவாரத்தில் ஒருவனுமாகிய கழுதைவடிவங்கொண்ட தேநுகாஸுரன் கோபமூண்டு ஓடிவந்து எதிர்த்துப் போர்செய்ய, உடனே கண்ணன் அதிலாகவமாய்ப் பின்னங்காலிரண்டையும் பற்றி அவ்வசுரக் கழுதையைச் சுழற்றி உயிரிழக்கும்படி பனைமரத்தின் மேல் எறிந்து அழித்தனு, பிறகு எல்லாருமாய் அங்குள்ள இனிய கனிகளை அருந்திப் பொழுதுபோனவாறே வீடுபோய்ச் சேர்ந்தனர்.

## அரிஷ்டநேமியென்னும் எருதையழித்தது.

ஒருநாள் கம்ஸனுலேவப்பட்ட அசுரர்களில் அரிஷ்டனென்பவன் எருது வடிவங்கொண்டு பசுக்களையெல்லாம் முட்டி இடைச்சேரியைப் படப்படுத்திக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனது திருவயிற்றின்மேற் கண்வைத்துக் கொம்புகளை நீட்டிப் பாய்ந்துவர, கண்ணபிரான் அவனைக் கொம்புகளிற்பிடித்து அசையவொட்டாமற் செய்து தன்காலினால் அவன் வயிற்றிலே ஓரிடி இடித்து அவன் கழுத்தைப் பிடித்துக் கசக்கி அவனுடைய கொம்புகளில் ஒன்றைப்பறித்து அதனாலேயே அவனை அடித்துக்கொன்றனன்.

## கொக்கின்வாயைக் கிழித்தெறிந்தது.

ஒருநாள் பகன் என்னும் ஓர் அஸுரன் கொக்குவடிவங்கொண்டு கண்ணபிரானைக் கொல்வதாக நெருங்கிவர, அப்பொழுது கண்ணன் அப்பறவையின் வாயலகுகளை இருகையாலும் பிடித்துக்கிழித்து அதனை அழித்தனன்.

## குருந்தமரமொசித்தது

ஒருநாள் வேறொரு அஸுரன், கண்ணபிரான் மலர்கொய்வதற்பொருட்டு விரும்பியேறுங் குருந்தமரத்திற் பிரவேசித்து அப்பெருமான் வந்து தன்மீது ஏறும்போது தான் முறிந்து வீழ்ந்து அவனை வீழ்த்திக்கொல்லக் கருதியபோது, மாயவனான கண்ணபிரான் அம்மரத்தைக் கைகளாற் பிடித்துத் தன் வலிமை கொண்டு முறித்து அழித்தனன்.

## கன்றினால் விளாங்கனி வீழ்த்தது.

கம்ஸனுலேவப்பட்ட அசுரர்களில் கபித்தாசுரன் விளாமரத்தின் வடிவமாய், கண்ணன் தன் கீழ் வரும்பொழுது மேல்விழுந்து கொல்வதாக எண்ணிவந்து நிற்க, அதனையறிந்து கிருஷ்ணபகவான் அவ்வாறே தன்னை முட்டிக்கொல்லும் பொருட்டுக் கன்றின் வடிவங்கொண்டு வந்த வத்ஸாஸுரனைப் பின்னிரண்டு கால்களையும் பிடித்து எடுத்துச் சுழற்றி விளாமரத்தின்மேல் எறிய, இருவரும் சிதைந்து தமது அசுரவடிவத்துடனே விழுந்து இறந்தன. (இது முள்ளைக்கொண்டே முள்ளைக் களைவது போலாம்.)

## இந்திரனுக்கிட்ட சோற்றைத் தானே அமுதுசெய்ததும் குன்றெடுத்துக் கோநிரைகாத்ததும்.

கண்ணபிரானுடைய அதிமாநுஷ சீலவ்ருத்த வேஷங்களைக் கண்டு ஆயர்களனைவரும் 'இவனே நம் குலக்கொழுந்து, இவன் கட்டளைப்படியே நாம் ஒழுகவேண்டும்' என்று அறுதியிட்டனர். இந்நிலைமையில் சரத்ருது வந்தது. அப்போது இடையர்கள் வருஷந்தோறும் நடத்திவருவதுபோல் வழக்கப்படி இந்திரனுக்குப் பூஜைசெய்யப் பற்பல வண்டிகளில் சோறும் தயிரும் நெய்யும் காய்கறிகளும் மற்றுமுள்ள பூஜாத்ரவ்யங்களுமாகிய இவைகளைச் சேகரிப்பதைக்கண்டு க்ருஷ்ணன் 'பெரியோர்களே! நாமும் நம்முடைய பசுக்களும் எதனால் ஜீவிக்கிறோமோ அதற்கே பூஜைசெய்வது தகுதி; இக்கோவர்த்தனகிரியே பசுக்களுக்குப் புல்லும் தண்ணீரும் கொடுத்துக் காப்பாற்றுகின்றது; இந்திரனால் நமக்கு என்ன பயனுண்டு? ஒன்றுமில்லை, ஆகையால் நீங்கள் இப்பூஜையனைத்தையும் இம்மலைக்கே இடுங்கள்' என்ன, இடையர்கள் இதைக்கேட்டு அங்ஙனமே செய்ய, கண்ணபிரான் தானே ஒரு தேவதைரூபங்கொண்டு அவற்றை முற்றும் அமுதுசெய்தருள, அவ்விந்திரன் கோபத்தோடு புஷ்கலாவர்த்தம் முதலிய பல மேகங்களை ஏவி, கண்ணன் விரும்பி மேய்க்கிற கன்றுகளுக்கும் பசுக்களுக்கும் கண்ணனுக்கு இஷ்டரான இடையர்களுக்கும் இடைச்சியர்க்கும் தீங்குதரும்படி கல் மழையை ஏழுநாள் இடைவிடாது பெய்வித்தபொழுது, கண்ணன் கோவர்த்தனமலையை யெடுத்துக் குடையாகப் பிடித்து மழையைத் தடுத்து எல்லாவுயிர்களையும் காத்தருளினன்.

## ஆய்ச்சியரது துகில்களையும் வளைகளையுங் கொள்ளைகொண்டது.

திருவாய்ப்பாடியிலுள்ள கோபஸ்த்ரீகள் கண்ணபிரானிடங்கொண்ட வேட்கைமிகுதியினால் அவன் தம்மிடம் காதல் மிஞ்சுமாறு நோன்புநோற்று அந்நோன்பின் முடிவில் யமுனைநதியிலே நீராட அப்போது அவர்கள் இடைச்சாதியொழுக்கத்தின்படி கரையில் அவிழ்த்து வைத்துவிட்டுப்போன ஆடைகளையெல்லாம் கண்ணன் ரஹஸ்யமாகவந்து எடுத்துக்கொண்டு அருகிலிருந்ததொரு மரத்தின்மேலேறியிருந்து சிறிதுபோது அவர்களை அலைக்கழித்துப்பின்பு அவர்கள் கைகூப்பி வணங்கி மிகவும் கெஞ்சிக் கேட்டுக்கொண்டதனால் அவர்களுக்கு அத்துகில்களை அளித்தருளினன்.

## ஆய்ச்சியரோடு குரவைகோத்தது.

மற்றொருகால், கண்ணபிரான் தன்னிடத்து விருப்பமுற்ற ஆயர்மாதருடைய ஆவலைத் தீர்க்கக் கருதி சரத்காலத்தில் ஓரிரவில் யமுனைக்கரையில் நின்று வேணுநாதம் செய்ய, அதனைக்கேட்ட இடைப்பெண்களெல்லாரும் மாமியார் மாமனார் முதலியோரையும் மதியாமல் காவல் கடந்து புறப்பட்டுச் சென்று க்ருஷ்ணனைக் கோஷ்டியில் அணைய, அன்றிரவு அவர்களுடன் பரமபோக்யமாகக் குரவைக் கூத்தாடினன். [குரவையாவது—ஒவ்வொரு ஆய்ச்சியின் பக்கத்தில் ஒவ்வொரு கண்ணனாகப் பலவுருவெடுத்து நின்று கைகோத்தாடும் ராஸக்ரீடை.] அப்பொழுது கோபிமார்கள் பரமாநந்தத்தில் எல்லையிலே மிதப்பதுகண்ட கண்ணபிரான் 'இது வெள்ளக்கேடாக வொண்ணாது; இந்த கர்வத்தைப் போக்கவேணும்' என நினைத்து அவ்வாயர்மங்கையரை விட்டுப் பிரிந்துபோய் ஒளிக்க, கோபிகள் கண்ணனைத் தேடிக் காணாமல் காதல் மீதூர்ந்து அப்பிரானைக் காணுமளவும் தாங்கள் உயிர்தரித்திருக்கைக்காக, ஒருத்தி க்ருஷ்ணனாகவும் மற்றொருத்தி காளியனாகவும் வேறொருத்தி வேறொன்றாகவும் பாவனைசெய்துகொண்டு க்ருஷ்ணனுடைய செயல்களையெல்லாம் அநுகரித்துத் தரித்திருக்கையில்; "தாஸாமாவிரபூச் சௌரி: ஸ்மயமாநமுகாம்புஜ: பீதாம்பரதர: ஸ்ரக்வீ ஸாக்ஷாந் மந்மதமந்மத:" என்றபடி—புன்முறுவல்செய்து பீதகவாடை யுடுத்துப் பரமவிலக்ஷணமான திருக்கோலத்துடனே எழுந்தருளி அவர்களுக்கு ஸேவைஸாதித்து அப்பொழுதே அவர்களது தாபமெல்லாம் ஆறும்படி பலவித லீலைகளைச்செய்து ஆநந்தப்படுத்தினன்.

## குடக்கூத்தாடினது.

குடக்கூத்து—ப்ராஹ்மணர்க்குச் செல்வம் மிகுதியினால் யாகஞ்செய்வதுபோல, இடையர்க்குச் செல்வம் மிகுதியினால் அதனாலுண்டாகுஞ் செருக்குக்குப்போக்கு வீடாக அவர்களாடுவதொரு கூத்து; இதனை, தலையிலே அடுக்குக் குடமிருக்க இருதோள்களிலும் இருகுடங்களிருக்க இருகையிலும் குடங்களையேந்தி ஆகாசத்திலே யெறிந்து ஆடுவதொரு கூத்து—என்பர்; இதனைப் பதினோராடலிலொன்றெனும் அறுவகைக் கூத்திலொன்றென்றுங்கூறி, "குடந்தாடல் குன்றெடுத்தோனாடலதனுக், கடைக்குடமைந்துருப்பாய்ந்து" என்று மேற்கோளுங் காட்டினர் சிலப்பதிகாரவுரையில் அடியார்க்குநல்லார்.

## இந்திரனுக்கிட்ட சோற்றைத் தானே அமுதுசெய்ததும் குன்றெடுத்துக் கோநிரைகாத்ததும்.

கண்ணபிரானுடைய அதிமாநுஷ சேஷ்டித வேஷங்களைக் கண்டு ஆயர்களனைவரும் 'இவனை நம் குலக்கொழுந்து, இவன் கட்டளைப்படியே நாம் ஒழுகவேண்டும்' என்று அறுதியிட்டனர். இங்ஙனமிருக்கையில் சரத்ருது வந்தது. அப்போது இடையர்கள் வருஷந்தோறும் நடத்துவதுபோல் வழக்கப்படி இந்திரனுக்குப் பூஜைசெய்யப் பற்பல வண்டிகளில் சோறும்தயிரும் நெய்யும் காய்கறிகளும் மற்றுமுள்ள பூஜாத்ரவ்யங்களுமாகிய இவைகளைச் சேகரிப்பதைக்கண்டு கிருஷ்ணன் 'பெரியோர்களே! நாமும் நம்முடைய பசுக்களும் எதனால் ஜீவிக்கிறோமோ அதற்கே பூஜைசெய்வது தகுதி; இக்கோவர்த்தனகிரியே பசுக்களுக்குப் புல்லும் தண்ணீரும் கொடுத்துக் காப்பாற்றுகின்றது; இந்திரனால் நமக்கு என்ன பயனுண்டு? ஒன்றுமில்லை. ஆகையால் நீங்கள் இப்பூஜான்னத்தையும் இம்மலைக்கே இடுங்கள்' என்ன, இடையர்கள் இதைக்கேட்டு அங்ஙனமே செய்ய, கண்ணபிரான் தானே ஒரு தேவதாரூபங்கொண்டு அவற்றை முற்றும் அமுதுசெய்தருள, அவ்விந்திரன் கோபத்தோடு புஷ்கலாவர்த்தம் முதலிய பல மேகங்களை ஏவி, கண்ணன் விரும்பி மேய்க்கிற கன்றுகளுக்கும் பசுக்களுக்கும் கண்ணனுக்கு இஷ்டரான இடையர்களுக்கும் இடைச்சியர்க்கும் தீங்குதரும்படி கல் மழையை ஏழு நாள் இடைவிடாது பெய்வித்தபொழுது, கண்ணன் கோவர்த்தனமலையை யெடுத்துக் குடையாகப் பிடித்து மழையைத் தடுத்து எல்லாவுயிர்களையும் காத்தருளினன்.

## ஆய்ச்சியரது துகில்களையும் வளைகளையுங் கொள்ளைகொண்டது.

திருவாய்ப்பாடியிலுள்ள கோபஸ்த்ரீகள் கண்ணபிரானிடத்துக்கொண்ட வேட்கைமிகுதியினால் அவன் தம்மிடம் காதல் விஞ்சுமாறு நோன்புநோற்று அந்நோன்பின் முடிவில் யமுனாநதியிலே நீராட அப்போது அவர்கள் இடைச்சாதியொழுக்கத்தின்படி கரையில் அவிழ்த்து வைத்துவிட்டுப்போன ஆடைகளையெல்லாம் கண்ணன் ரஹஸ்யமாகவந்து எடுத்துக்கொண்டு அருகிலிருந்ததொரு மரத்தின்மேலேயிருந்து சிறிதுபோது அவர்களை அலைக்கழித்துப்பின்பு அவர்கள் கைகூப்பி வணங்கி மிகவும் கெஞ்சிக் கேட்டுக்கொண்டதனால் அவர்களுக்கு அத்துகில்களை அளித்தருளினன்.

## ஆய்ச்சியரோடு குரவைகோத்தது.

மற்றொருகால், கண்ணபிரான் தன்னிடத்து விருப்பமுற்ற ஆயர்மாதருடைய ஆவலைத் தீர்க்கக் கருதி சரத்காலத்தில் இரவில் யமுனைக்கரையில் நின்று வேணுநாதம் செய்ய, அதனைக்கேட்ட இடைப்பெண்களெல்லாரும் மாமியார் மாமனார் முதலியோரையும் மதியாமல் காவல் கடந்து புறப்பட்டுச் சென்று க்ருஷ்ண கோஷ்டியில் அந்வயிக்க, அன்றிரவு அவர்களுடன் பரமபோக்யமாகக் குரவைக் கூத்தாடினன். [குரவையாவது—ஒவ்வொரு ஆய்ச்சியின் பக்கத்தில் ஒவ்வொரு கண்ணனாகப் பலவடிவெடுத்து நின்று மண்டலித்தாடும் ராஸக்ரீடை.] அப்பொழுது கோபிமார்கள் பரமாநந்தத்தின் எல்லையிலே இருப்பதைக்கண்ட கண்ணபிரான் 'இது வெள்ளக்கேடாக வொண்ணாது; இந்த மதத்தை மாற்றவேணும்' என நினைத்து அவ்வாயர்மங்கையரை விட்டுப் பிரிந்துபோய் ஒளிக்க, கோபிகள் கண்ணனைத்தேடிக் காணாமல் காதல் மீதூர்ந்து அப்பிரானைக் காணுமளவும் தாங்கள் உயிர்தரித்திருக்கைக்காக, ஒருத்தி க்ருஷ்ணனாகவும் மற்றொருத்தி காளியனாகவும் வேறொருத்தி வேறொன்றாகவும் பாவனைசெய்துகொண்டு கிருஷ்ணனுடைய செயல்களையெல்லாம் அநுகரித்துத் தரித்திருக்கையில்; "தாஸாமாவிரபூச் சௌரி: ஸ்மயமாந முகாம்புஜ: —பீதாம்பரதர: ஸ்ரக்வீ ஸாக்ஷாந் மந்மதமந்மத:." என்றபடி—புன்முறுவல்செய்து பீதகவாடை யுடுத்துப் பரமவிலக்ஷணமான திருக்கோலத்துடனே எழுந்தருளி அவர்களுக்கு ஸேவைஸாதித்து அப்பொழுதே அவர்களது தாபமெல்லாம் ஆறும்படி பலவித லீலைகளைச்செய்து ஆநந்தப் படுத்தினன்.

## குடக்கூத்தாடினது.

குடக்கூத்து—ப்ராஹ்மணர்க்குச் செல்வம் விஞ்சினால் யாகஞ்செய்வதுபோல, இடையர்க்குச் செல்வம் விஞ்சினால் அதனாலுண்டாகுஞ் செருக்குக்குப்போக்கு வீடாக அவர்களாடுவதொரு கூத்து; இதனை, தலையிலே அடுக்குக் குடமிருக்க இருதோள்களிலும் இருகுடங்களிருக்க இருகையிலும் குடங்களையேந்தி ஆகாசத்திலே யெறிந்து ஆடுவதொரு கூத்து—என்பர்; இதனைப்பதினோராடலிலொன்றென்றும் அறுவகைக் கூத்திலொன்றென்றுங்கூறி, "குடத்தாடல் குன்றெடுத்தோனாடலதனுக், குடைக்குப வைத்துறுப்பாய்த்து" என்று மேற்கோளுங் காட்டினர் சிலப்பதிகாரவுரையில் அடியார்க்குநல்லார்.

### ஏழ்விடை செற்றுப் பின்னைதோள் புணர்ந்தது.

கும்பனென்னும் இடையர் தலைவனது மகளாயும் நீளாதேவியின் அம்சமாகப் பிறந்ததனால் நீளா என்ற பெயரால் வழங்கப்பட்டு வருபவளுமான நப்பின்னைப்பிராட்டியை மணஞ்செய்து கொள்ளுதற்காக அவள் தந்தை கன்யாசுல்கமாகக் குறித்தபடி யாவருக்கும் அடங்காத அஸுராவேசம் பெற்ற ஏழு எருதுகளையுங் கண்ணபிரான் ஏழு திருவுருக்கொண்டு சென்று வலியடக்கி அப் பிராட்டியை மணஞ்செய்து கொண்டனன்.

### கேசியென்னுங் குதிரையைக் கொன்றது.

ஒருநாள் கம்ஸனாலேவப்பட்ட கேசி என்பானோர் அஸுரன் குதிரையினுருவத்தோடு ஆயர்கள் அஞ்சி நடுங்கும்படி கனைத்துத் தாவிக்கொண்டு கண்ணபிரான்மேற் பாய்ந்துவர, அப்பெருமான் தன் திருக்கையை நன்றாகப் பெருக்கி நீட்டி அதன் வாயிற்கொடுத்துத் தாக்கிப் பற்களையுதிர்த்து உதட்டைப் பிளந்து அதனுடம்பையும் இருபிளவாக வகிர்ந்து தள்ளினன்.

### கூனிகூன் நிமிர்த்தது

கம்ஸனால் வில்விழவுக்கென்று அக்ரூரரையிட்டு அழைக்கப்பட்ட கண்ணபிரான் பலராமனோடு வடமதுரையெழுந்தருளும்போது ராஜவீதியில் சந்தனக்கிண்ணத்தைக் கையிலேந்தி வருகிற மங்கைப் பருவமுண்டான ஒரு கூனியைக்கண்டு 'நங்காய்! யாருக்கு நீ இந்தப் பூச்சுக் கொண்டு போகிறாய்?' என்று விலாஸத்தோடு கேட்டருள, அந்தக் கூனி இவ்வாறு காதலுடையவன்போலக் கண்ணன் அருளிச்செய்ததைக் கேட்டு அவனது திருக்கண்களினாலே மனமிழுக்கப்பட்டவளாய் ''அழகனே! நான் நைகவக்ரை யென்பவளென்றும் கம்ஸனாலே சந்தனாதிப் பூச்சுக்கள் வித்தஞ்செய்யும்வேலையில் வைக்கப்பட்டவளென்றும் நீ அறியாயோ?'' என்ன; கண்ணன் 'எங்கள் திருமேனிக்கு ஏற்ற வெகு கோர்த்தியான இந்தப் பூச்சை எங்கட்குக் கொடுக்கவேண்டும்' என்று சொன்னவுடனே, அவள் 'அப்படியே திருவுள்ளம் பற்றுங்கள்' என்று மிக்க அன்போடு ஸமர்ப்பிக்க, அப்பூச்சைத் திருமேனியில் அணிந்து ஸ்ரீ க்ருஷ்ணன் இவளிடத்தில் மிகவும் ப்ரஸந்நனாய், நடுவிரலும் அதன் முன்விரலுங் கொண்ட நுனிக்கையினாலே அவளை மோவாய்க்கட்டையைப் பிடித்துத் தன் திருவடிகளினால் அவள் கால்களை அமுக்கி இழுத்துத் தூக்கிக் கோணல் நிமிர்த்து அவளை மகளிரிற்சிறந்த உருவினளாக்கியருளினன்.

### கம்ஸனதுவில்லை முறித்ததும், குவலயாபீட மதயானையைக்கொன்றொழித்ததும், மல்லர்களை மடித்ததும், கஞ்சனைக் கொன்றதும்.

பின்பு கம்ஸனுடைய படைச்சாலையை விசாரித்துக்கொண்டு அங்குச்சென்று அவனது வில்லை யெடுத்து முறித்தெறிந்து கம்ஸனது அரண்மனையை நோக்கிச் செல்லுகையில் வழியில் தம்மைக் கொல்லும்படி அவனால் ஏவி நிறுத்தப்பட்ட குவலயாபீடமென்னும் மதயானை கோபித்துவர: அவ்யாதவவீரர் அதனை எதிர்த்து அதன் தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியை எடுப்பதுபோல எளிதிற்பறித்து அவற்றையே ஆயுதமாகக்கொண்டு அவற்றால் அடித்து அவ்யானையை உயிர் தொலைத்துவிட்டு உள்ளே செல்லுகையில், அவர்களை எதிர்த்துப் பொருது கொல்லும்படி கம்ஸனால் ஏவப்பட்ட சாணூரன் முஷ்டிகன் முதலிய பெருமல்லர்கள் சிலர்வந்து எதிர்த்து உக்ரமாகப் பெரும்போர் செய்ய, அவர்களை யெல்லாம் அவ்யாதவவீரர் இருவரும் மற்போரினாலேயே கொன்றுவென்றிட்டுப் பிறகு மஞ்சத்தின்மீது வீற்றிருந்த கம்ஸன்மேல் வேகமாக எழும்பி அவனது கிரீடம் கழன்று கீழே விழும்படி அவனைத் தலைமயிர்பிடித்துத் தரையில் தள்ளி அவன்மேல் தான்விழுந்து அவனைக்கொன்றிட்டனன் கண்ணபிரான்.

### பௌண்ட்ரகவாஸுதேவனைப் பரிசழித்தது.

பௌண்ட்ரகவாஸுதேவன் என்பானொரு அரசன் பிறந்திருந்தான்; பல மூடர்கள் திரண்டு 'நீதான் வாஸுதேவன்' என்று அவனைப் புகழ்ந்து கொண்டிருந்தார்கள். அதனால் அவனும் 'நானே வாஸுதேவன்' என்று மயங்கி மார்பு செறித்துச் சங்கு சக்கரம் கிரீடம் முதலியவற்றைச் செய்வித்துத் தானணிந்துகொண்டு, தூதனையழைத்து ''நீ க்ருஷ்ணனிடம் போய் என் பெயரைச் சொல்லி இன்னான் வாஸுதேவனாயிருக்க, நீ அவனுடைய சங்கு சக்கரங்களைத் தரிக்கக்கூடாது! இன்று முதல் விட்டுவிட வேண்டியது; இல்லையாகில் அவனோடு யுத்தஞ்செய்து அவனை வென்றாயாகில் தரிக்கலாம்' என்று சொல்ல வேண்டியது'' என்று சொல்லியனுப்ப, அங்ஙனமே அந்தத் தூதன் வந்து க்ருஷ்ணனிடம் அச்செய்தியைச் சொல்ல, கண்ணபிரான் சினமுற்றுப் பெரிய திருவடியின்மீதேறிச் சென்று போர் செய்து அப்பௌண்ட்ரகனைத் தனது திருவாழியினால் தலையறுத்துக் கொன்றொழித்தனன்.

### வாணன்தோள்களைத் துணித்ததும் வாணனுக்கு அருள்புரிந்ததும்.

பலிசக்ரவர்த்தியின் வம்சத்திற்பிறந்த பாணாஸுரனுடைய பெண்ணாகிய உஷையென்பவள், ஒரு நாள் ஒரு புருஷனோடு தான் கூடியிருந்ததாகக் கனாக்கண்டு, முன் பார்வதி அருளியிருந்தபடி அவனிடத்தில் மிகுந்த ஆசைபற்றியவளாய், தன் உயிர்த்தோழியான சித்திரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்து, அவள்மூலமாய் அந்தப்புருஷன் க்ருஷ்ணனுடைய பௌத்திரனும் ப்ரத்யும்னனது புத்திரனுமாகிய அநிருத்தனென்று அறிந்துகொண்டு 'அவனைப் பெறுவதற்கு உபாயஞ்செய்யவேண்டும்' என்று அத்தோழியையே வேண்ட, அவள் தன் யோகவித்தை மகிமையினால் த்வாரகைக்குச் சென்று அநிருத்தனைத் தூக்கிக்கொண்டுவந்து அந்தப்புரத்திலே விட, உஷை அவனோடு போகங்களை அநுபவித்து வர, இச்செய்தியைக் காவலாளரால் அறிந்த அந்தப் பாணன் தன் சேனையுடன் அநிருத்தனை யெதிர்த்து [illegible] பொருது நாகாஸ்திரத்தினால் கட்டிப்போட்டிருக்க, த்வாரகையிலே அநிருத்தனைக் காணாமையினால் யாதவர்களெல்லாருங் கலங்கியிருக்கும்போது, நாரதமுனிவனால் நடந்த வரலாறு சொல்லக் கேட்ட ஸ்ரீக்ருஷ்ணபகவான், பெரிய திருவடியை நினைத்தருளி, உடனே வந்து நின்ற அக்கருடாழ்வானது தோள்மேலேறிக்கொண்டு பலராமன் முதலானவரோடுகூடப் பாணபுரமாகிய சோணிதபுரத்துக்கு எழுந்தருளும்போதே, அப்பட்டணத்தின் ஸமீபத்திற் காவல்காத்துக்கொண்டிருந்த சிவபிரானது பிரமதகணங்கள் எதிர்த்துவர, அவர்களையெல்லாம் அழித்து, பின்பு சிவபெருமானால் ஏவப்பட்டதொரு ஜ்வரதேவதை மூன்றுகால்களும் மூன்றுதலைகளுமுள்ளதாய் வந்து பாணனைக் காப்பாற்றும்பொருட்டுத் தன்னோடு யுத்தஞ்செய்ய, தானும் ஒரு ஜ்வரத்தை உண்டாக்கி, அதன் சக்தியினாலே அதனைத் துரத்திவிட்டபின்பு, சிவபிரானது அநுசாரகையாற் பாணாஸுரனது கோட்டையைச் சூழ்ந்துகொண்டு காத்திருந்த அக்நிதேவர் ஐவரும் தன்னோடு எதிர்த்துவர, அவர்களையும் நாசஞ்செய்து, பாணாஸுரனோடு போர்செய்யத்தொடங்க, அவனுக்குப் பக்கபலமாகச் சிவபெருமானும் ஸுப்ரஹ்மண்யன் முதலான பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப்போராட, கண்ணன் தான் ஜ்ரும்பணாஸ்திரத்தைப் ப்ரயோகித்துச் சிவனை ஒன்றுஞ்செய்யாமற் கொட்டாவிவிட்டுக்கொண்டு சோர்வடைந்துபோம்படி செய்து, ஸுப்ரஹ்மண்யனையும் கணபதியையும் உங்காரங்களால் ஒறுத்து ஓட்டி, பின்னர் அநேகமாயிரஞ் சூரியர்க்குச் சமானமான தனது சக்ராயுதத்தை யெடுத்துப் பிரயோகித்து, அப்பாணனது ஆயிரந்தோள்களையும் தாரைதாரையாய் உதிரமொழுக அறுத்து அவனுயிரையும் சிதைப்பதாகவிருக்கையில், பரமசிவன் அருகில்வந்து வணங்கிப் பலவாறு பிரார்த்தித்ததனால் அவ்வாணனை நான்கு கைகளோடும் உயிரோடும் விட்டருளி, பின்பு அவன் தன்னைத்தொழுது அநிருத்தனுக்கு உஷையைச் சிறப்பாக மணம்புரிவிக்க, அதன்பின் மீண்டுவந்தனன் என்ற வரலாறு அறியத் தக்கது.

### நரகாஸுரனை நாசஞ் செய்ததும் ஸத்யபாமைக்காகக் கற்பகத்தரு கொணர்ந்ததும்.

எம்பெருமான் வராஹாவதாரஞ் செய்து பூமியைக் கோட்டாற் குத்தியெடுத்தபொழுது எம்பெருமானுடைய ஸ்பர்சத்தால் பூமிதேவிக்குக் குமாரனாய்ப் பிறந்தவனும் அஸமயத்திற் சேர்த்துப் பெறப்பட்டதனால் அஸுரத்தன்மை பூண்டவனுமான 'நரக' னென்பவன் ப்ராக்ஜ்யோதிஷமென்னும் பட்டணத்திலிருந்துகொண்டு ஸகல ப்ராணிகளையும் வருத்து தேவஸித்த கந்தர்வாதிகளுடைய கன்னிகைகளையும் பற்பலரைப் பலாத்காரமாய் அபஹரித்துக் கொண்டுபோய்த் தான் மணம் புணர்வதாகக் கருதித் தன் மாளிகையிற் சிறைவைத்து, வருணனது குடையையும் மந்தரகிரி சிகரமான ரத்நபர்வதத்தையும் தேவர் தாயான அதிதி தேவியின் குண்டலங்களையும் கவர்ந்து போனதுமன்றி இந்திரனுடைய ஐராவத யானையையும் அடித்துக்கொண்டுபோகச் சமயம் பார்த்திருக்க, அஞ்சிவந்து பணிந்த இந்திரன் வேண்டுகோளால் கண்ணபிரான் கருடனை வரவழைத்துப் பூமிதேவியின் அம்சமான ஸத்யபாமையுடனே தான் கருடன்மேலேறி அந்நகரத்தை யடைந்து சக்ராயுதத்தைப் பிரயோகித்து அவனது மந்த்ரியான 'முரன்' முதலிய பல அஸுரர்களையும் இறுதியில் அந்த நரகாஸுரனையும் அறுத்துத் தள்ளி அழித்து அவன் பல திசைகளிலிருந்து கொண்டுவந்து சிறைப்படுத்தியிருந்த பதினாறாயிரத்தொரு நூறு கன்னிகைகளையும் ஆட்கொண்டு நரகனால் முன்பு கவரப்பட்ட (இந்திரன் தாயான அதிதி தேவியின்) குண்டலங்களை அவ்வதிதிதேவிக்குக் கொடுக்கும்பொருட்டு ஸத்யபாமையுடனே கருடன் தோள்மேலேறிக்கொண்டு தேவலோகத்துக்குச் செல்ல, அங்கு இந்திராணி ஸத்யபாமைக்கு ஸகல உபசாரங்களைச் செய்தும் தேவர்க்கே உரிய பாரிஜாதபுஷ்பம் மானிடப் பெண்ணாகிய இவளுக்குத் தகாதென்று ஸமர்ப்பிக்கவில்லையாதலின், அதனைக்கண்டு பாமை விருப்புற்றவளாய் நாதனை நோக்கி 'ப்ராணநாதனே! இந்தப் பாரிஜாத தருவைத் த்வாரகைக்குக் கொண்டுபோகவேண்டும்' என்று [illegible]தைக் கண்ணபிரான் திருச்செவி சாற்றி உடனே அந்த வ்ருக்ஷத்தை வேரோடு பெயர்த்துக் கருடன் தோளின்மேல் வைத்தருளி, அப்பொழுது இந்திராணி தூண்டிவிட்டதனால் வந்து மறித்துப் போர்

செய்த இந்திரனை ஸகல தேவஸைந்யங்களுடன் சக்கராதத்தினாலே பங்கப்படுத்தி, பின்பு பாரிஜாத மரத்தை த்வாரகைக்குக் கொண்டுவந்து ஸத்யபாமை வீட்டுப்புழைக்கடைத் தோட்டத்தில் நாட்டியருளினன்.

## காண்டவ வனத்தைத் தீமூட்டிவிட்டது.

ஒருநாள் அக்நிபகவான் ஒரு அந்தணவேடம் பூண்டு, அர்ஜுநனும் கண்ணபிரானும் கூடியிருக்குமிடத்திலே வந்துசேர, அவ்வந்தணனைக் கிருஷ்ணார்ஜுநர்கள் நன்கு உபசரிக்க, அவன் உணவு வேண்ட, 'வேண்டிய உணவை அளிப்போம்' என்று அவ்விருவரும் உறுதிமொழி கூற, உடனே அவ்வந்தணன் தான் இன்னானென்று உண்மை தெரிவித்துக் காண்டவவனத்தைத் தனக்கு இரையாக அளிக்குமாறு வேண்ட, அவர்களும், 'பல கொடிய அசுரர்களும் அரக்கர்களும் துஷ்டமிருகங்களும் நிரம்பியிருக்குமித்தக் காடு அழிந்தொழிவது நன்றே' என்று நிச்சயித்து அக்நிபகவானை நோக்கி 'அங்ஙனமே உண்பாயாக' என்று அநுமதிதந்ததின்பேரில் அக்நி அக்காடு முழுவதையும் ஆக்ரமித்துப் பூர்ணதிருப்தியாக உண்டனன் என்ற கதை மஹாபாரதத்தில் ஆதிபர்வத்தில் விரித்துரைக்கப்பட்டுள்ளது. மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தவனான கண்ணபிரான் தனது அன்பனான இந்திரன் வருந்தும்படி அவனது காட்டை யழிக்குமாறு அநுமதித்தது அவதாரப்ரயோஜனம் நிறைவேறுதற்காக வென்க; அக்காட்டிலுள்ள அளவற்ற துஷ்ட ஜந்துஸமூஹங்கள் தொலைந்தொழியும் முகத்தால் பூமியின் பாரத்தைக் குறைத்தருளினனென்றுணர்க. இவ்வனத்தின் தன்மையைப்பற்றி வில்லிபுத்தூராழ்வார் பாரதத்தில் காண்டவவனதகனச் சருக்கத்தில்—"மிடைந்த நால்வகை மிருகங்களு மெழு வெற்பினங்களுந் துன்றி, அடைந்த தானவராக்கர் பேருருக்காலயங்களுமாகிக், குடைந்துசோரி கொள்வாளுகிரி முதற்கொடு விலங்கினமிக்குக், கடைந்த கூரெயிற்றுரல் தக்ககனும் வாழ் கானமது கண்டார்" என்ற செய்யுள் இங்குக் குறிக்கொள்ளத் தக்கது.

## பாண்டவர்க்குத் தூது சென்றது.

பாண்டவர்களையும் கௌரவர்களையும் எவ்வகையினாலும் ஒருங்குவிட்டு வாழ்விக்கற் பொருட்டுக் கண்ணபிரான் துரியோதனனிடம் தூது சென்றது உலகப்பிரஸித்தம்.

## துரியோதனன் பொய்யாஸனமிட்டபோது விச்வரூபமெடுத்து மல்லரை முடித்தது.

கண்ணபிரான் பாண்டவர்கட்குத் தூதனாய்த் தன்னிடம் வரப்போகிறானென்பதை யறிந்த துரியோதனன் எவ்வகையினாலேனும் க்ருஷ்ணனை முடித்து விடுவதே கருமமென்று துணிந்து ரஹஸ்யமாகத் தனது ஸபாமண்டபத்தில் மிகப் பெரிய நிலவறையொன்றைத் தோண்டுவித்து அதில் அநேக மல்லர்களை ஆயுதபாணிகளாய் உள்ளே யிருக்கவைத்து அப்படுகுழியைப் பிறர் அறியவொண்ணாதபடி மூங்கிற் பிளப்புக்களால் மேலே மூடி அதன்மேற் சிறந்த ரத்நாஸநமொன்றை யமைத்து அவ்வாஸநத்தின்மீது கண்ணபிரானை வீற்றிருக்கச் சொல்ல, கண்ணன் அங்ஙனமே அதன்மேலேறின மாத்திரத்திலே மூங்கிற் பிளப்புக்கள் முறிபட்டு ஆஸனம் உள்ளிறங்கி நிலவறையிற் செல்லுமளவில் மல்லர்கள் எதிர்த்துவர, பெருமான் மிகப் பெரிதாக விச்வரூபமெடுத்துப் பல கைகளையும் கால்களையுங்கொண்டு எதிர்த்து அந்த மல்லர்களை மடிவித்தானென்ற வரலாறு அறியத்தக்கது.

## பார்த்தன் தேரில் பாகனாய் நின்றது.

கண்ணபிரான், பாண்டவர் துரியோதனாதியர் என்ற இருவகுப்பினரையும் ஸந்தி செய்விக்கைக்காகத் துரியோதனாதியரிடம் தூதாகச் சென்று 'பாண்டவர்களும் நீங்களும் பகைமை கொள்ள வேண்டாம்; ராஜ்யத்தில் இருவகுப்பினர்க்கும் பாகமுண்டு; ஆதலால் ஸமபாகமாகப் பிரித்துக்கொண்டு ஸமாதானமாக அரசாட்சி செய்து வாழுங்கள்;' என்று பலவாறாக அருளிச்செய்ய, அவர்கள் நல்வார்த்தைகட்குச் சிறிதும் உடன்படாமல் 'பராக்ரமமிருந்தால் போர் செய்து ஜயித்துக்கொள்ளட்டும்; இந்தப் பூமி வீரர்க்கே உரியது' என்று மிக்க செருக்குக் கொண்டு சொல்லவே, தான் பாண்டவபக்ஷபாதியாயிருந்து அவர்கட்கே வெற்றி யுண்டாக்கும் பொருட்டுப் பார்த்தன் தேரில் பாகனாய் நின்றனன்.

## ஆழியால் இரவியை மறைத்தது. (ஜயத்ரதனை மடித்தது.)

மஹாபாரத யுத்தத்திற் பதின்மூன்றாநாளிலே அர்ஜுநன் புத்திரனான அபிமன்யுவைத் துரியோதனனது உடன்பிறந்தவள் கணவனான ஸைந்தவன் கொன்றுவிட, அங்ஙனம் தன்மகனைக் கொன்ற அந்த ஜயத்ரதனை மற்றைநாள் ஸூர்யாஸ்தமனத்திற்குள் தான் கொல்லாவிடின் தீக்குதித்து உயிர்விடுவ

தாக அர்ஜுனன் சபதஞ்செய்ய, அதனையறிந்த பகைவர்கள் பதினான்காநாட் பகல் முழுவதும் ஜயத்ரதனை வெளிப்படுத்தாமல் ஸேனையின் நடுவே நிலவறையில் மறைத்து வைத்திருக்க, அர்ஜுனனது சபதம் பொய்த்துவிடுமேயென்று சிந்தித்த கண்ணபிரான் ஸூர்யனை அஸ்தமிப்பதற்குச் சில நாழிகைக்கு முன்னமே தன் சக்ராயுதத்தால் மறைத்துவிட, அப்பொழுது எங்கும் இருள் மிடைந்ததனால் அர்ஜுனன் அக்நிப்ரவேசஞ்செய்யத் தொடங்க, அதனைக்களிப்போடு காணுதற்குத் துரியோதனனுடனே ஜயத்ரதன் வந்து எதிர்நிற்க, அச்சமயத்திற் கண்ணன் திருவாழியை வாங்கிவிடவே, பகலாயிருந்ததனால் உடனே அர்ஜுனன் ஜயத்ரதனைத் தலைதுணித்தனன்.

## ஸாந்தீபிநி புத்திரனை மீட்டுக்கொடுத்தது.

ஸ்ரீக்ருஷ்ணன் கம்ஸனைக்கொன்று உக்ரஸேனனுக்கு முடிசூட்டியபின்பு, அவந்திநகரத்திலிருந்த ஸாந்தீபிநியென்னும் ப்ராஹ்மணோத்தமர் பக்கல் சென்று ஸகல சாஸ்த்ரங்களையும் அத்யயநம்பண்ணிப் பிறகு குருதக்ஷிணை ஸமர்ப்பிக்கப் பார்க்கிறவளவிலே, அவ்வாசிரியர் கண்ணனுடைய சக்திவிசேஷத்தை யறிந்தவராகையால் 'பன்னிரண்டு வருஷத்திற்குமுன்பு மேல்கடலில் ப்ரபாஸதீர்த்த கட்டத்திலே நீராடும்போது முழுகியிறந்துபோன என்புத்திரனைக் கொண்டுவந்து தரவேண்டும்' என்று அபேக்ஷிக்க, கண்ணபிரான் 'அப்படியே செய்கிறேன்' என்று சொல்லிக் கடற்கரை சேர்ந்து, சங்கினுருவங்கொண்டு ஸமுத்ர ஜலத்தில் வஸிக்கின்ற பஞ்சஜநனென்கிற அசுரனே அவ்வந்தணச்சிறுவனைக் கொண்டுபோயினனென்பதை அங்கு வருணன் சொல்லக்கேட்டுக் கடலில் ப்ரவேசித்து அவ்வஸுரனைக்கொன்று அவனுடலாகிய பாஞ்சஜந்யத்தையெடுத்து வாயில்வைத்து முழக்கிக்கொண்டே யமபட்டணத்திற்கு எழுந்தருளி, அங்கு யாதனையிற்கிடந்த அக்குமாரனைப் பூர்வதேஹத்தில் சிறிதும் பேதமில்லாதபடி கொணர்ந்து கொடுத்தருளினன்.

இடைப்பிள்ளையான கண்ணபிரான் ஸாந்தீபிநியிடத்தில் வேதமோதின னென்பதும் உபநயநஸம்ஸ்காரம் பெற்றானென்பதும் எங்ஙனே சேருமென்று சிலர் சங்கிப்பர்; * ஒருத்திமகனாய்ப்பிறந்து ஓரிரவிலொருத்திமகனா யொளித்து வளர்ந்தவனான கண்ணன் க்ஷத்ரிய ஜாதியிற் பிறந்தவன். ப்ராமணர் க்ஷத்ரியர் வைசியர் என்னும் மூன்று ஜாதியாரும் தேஹோத்பத்தியாகிய இயற்கைப் பிறப்புடனே செயற்கைப் பிறப்பாக உபநயநமென்கிற ஸம்ஸ்காரத்தாலாகும் ஜ்ஞாநஜந்மத்தையுங்கொண்டு இருபிறப்பாளராய் 'த்விஜர்' எனப்படுவரென்க.

## வைதிகன் பிள்ளைகளைக் கொணர்ந்து தந்தது.

ஒரு ப்ராமணனுக்கு முறையே பிறந்த மூன்றுபிள்ளைகள் பிறந்த அப்பொழுதே பெற்றவளது முற்பட முகத்தில் விழிக்கப்பெறாதபடி இன்னவிடத்திலே போயிற்றென்று தெரியாமல் காணவொண்ணாது போய்விடுகையாலே நான்காம் பிள்ளையை ஸ்திரீ ப்ரஸவிக்கப் போகிறவளவிலே அந்த அந்தணன் கண்ணபிரானிடம் வந்து 'இந்த ஒருபிள்ளையையாயினும் தேவரீர் பாதுகாத்துத் தந்தருளவேண்டும்' என்று ப்ரார்த்திக்க, ஸ்ரீக்ருஷ்ணன் 'அப்படியே செய்கிறேன்' என்று அநுமதிசெய்தபின்பு, யாகத்திலே தீக்ஷிதனாயுள்ள கண்ணபிரான் எழுந்தருளக் கூடாதென்பதுபற்றி அர்ஜுனன் 'நானேபோய் ரக்ஷிக்கிறேன்' என்று ப்ரதிஜ்ஞைபண்ணி, ப்ராஹ்மணனையுங் கூட்டிக்கொண்டுபோய், ப்ரஸவிக்கிற க்ருஹத்தைச் சுற்றும் காற்றுமுட்படப் ப்ரவேசிக்கவொண்ணாதபடி சரக்கூடங்கட்டிக் காத்துக்கொண்டு நிற்கையில் பிறந்த பிள்ளையும் வழக்கப்படியே பிறந்தவளவிற் காணவொண்ணாதே போய்விடவே, ப்ராம்மணன் வந்து அர்ஜுனனை மறித்து 'க்ஷத்ரியாதமா! உன்னாலேயன்றோ என் பிள்ளை போம்படியாயிற்று; க்ருஷ்ணன் எழுந்தருளிக் காப்பதை நீயன்றோ தடுத்தாய்!' என்று நிந்தித்துக் க்ருஷ்ணன் ஸந்நிதியிலே இழுத்துக்கொண்டுவர, கண்ணபிரான் கண்டு புன்சிரிப்புக்கொண்டு 'அவனை விடு; உனக்குப் பிள்ளைகளை நான் கொண்டுவந்து தருகிறேன்' என்றருளிச் செய்து, ப்ராஹ்மணனையும் அர்ஜுனனையும் தன்னுடன் கொண்டு தேரிலேறி, அர்ஜுனனைத் தேர்செலுத்தச் சொல்லி, அத்தேர்க்கும் அவர்கட்கும் திவ்யசக்தியைத் தனது ஸங்கல்பத்தால் கற்பித்து, இவ்வண்டத்துக்கு வெளியே நெடுந்தூரமளவுங் கொண்டுபோய், அங்கு ஓரிடத்தில் தேருடனே இவர்களை நிறுத்தி, தேஜோரூபமான பரமபதத்திலே தன்பெருமையாலே தானேபோய்ப் புக்கு, அங்கு நாச்சிமார் தங்கள் ஸ்வாதந்திரியங் காட்டுகைக்காகவும் கண்ணபிரானது திவ்ய ஸௌந்தர்யத்தைக் கண்டு களிக்கைக்காகவும் அழைப்பித்து வைத்த அந்தப் பிள்ளைகள் நால்வரையும் அங்குநின்றும் பூர்வரூபத்தில் ஒன்றுங்குலையாமற் கொண்டு வந்து கொடுத்தருளினன்.

கண்ணபிரானனுபவம் முற்றிற்று.

## 33. 2. பெரியவாச்சான் பிள்ளை.

கண்ணபிரானுடைய திருநக்ஷத்ரத்திலேயே இப்பேராசிரியரும் திருவவதரித்தருளினார். இவ்வாசிரியருடைய சரித்ரவிலாஸங்களைப்பற்றி இங்கு நாம் ஒன்றும் எழுதப் புகுகின்றிலோம். அது நமக்கு விசேஷமாகத் தெரியவும் தெரியாது. இவர் தம்மால் உலகுக்குவிளைந்த மஹோபகாரம் மிகப்பெரிது ஆதலால் அதைப்பற்றியே சிறிதுபேசியுகப்போம். ஆழ்வார்களின் அருளிச்செயல்களுக்கெல்லாம் மிகச் சிறந்த வியாக்கியானமும், ஸ்ரீராமாயணத்தில் பலபல ஸ்லோகங்களுக்கு இன்சுவையே வடிவெடுத்த வியாக்கியானமும், ஆளவந்தாருளிச்செய்த ஸ்தோத்ரரத்னத்திற்கும் எம்பெருமானாருளிச்செய்த கத்யத்ரயத்திற்கும் ஜிதந்தாஸ்தோத்ரத்திற்கும் உரைகளான வியாக்கியானமும், பரந்தரஹஸ்யம் முதலான சில ரஹஸ்யார்த்த க்ரந்தங்களும் இவர் அருளிச் செய்தவையாகும்.

நம்பிள்ளையென்கிற லோகாசார்யரின் திருவடிவாரத்தில் நெடுநாள் பரிசர்யைபண்ணிப் பெற்ற விசேஷார்த்தங்களையே இவ்வாசிரியர் தமது திவ்யக்ரந்தங்களில் அமைத்தருளினார். இவர்தாம் நம்பிள்ளையைப்பற்றி ஓரிடத்தில் அருளிச் செய்திருக்கும் ஸ்ரீஸூக்திகளை மீண்டும் இங்குக் குறிப்பிடுவோம்; பெரிய திருமொழியில் (5—8—7) "அந்தணனொருவன்" என்ற விடத்து வியாக்யானத்திலே—"முற்பட த்வயத்தைக்கேட்டு இதிஹாஸ புராணங்களையும் அதிகரித்து, பரபக்ஷப்ரதி க்ஷேபத்துக்குடலாக ந்யாயமீமாம்ஸைகளும் அதிகரித்து, போதுபோக்கும் அருளிச்செயலிலேயாம் பிள்ளையைப் போலே......" என்றருளிச் செய்தார். இதனால், நம்பிள்ளை ஸகல சாஸ்த்ரங்களையும் வரியடைவே அதிகரித்து அந்தப்பாண்டித்யம் முழுவதையும் அருளிச் செயற்பொருளுபந்யாஸங்களிலே உபயோகப்படுத்தி வந்தாரென்பது விளங்கும். அவ்வண்ணமாகவே இவ்வாசிரியரும் ஸகல சாஸ்த்ரஜ்ஞராகித் தமது ஞானவிளக்கத்தை வியாக்கியானங்களருளிச் செய்வதில் வெகு அழகாகச் செலுத்தி இவ்வுலகுக்கு மஹோபகாரகர்களில் ப்ரதமஸ்தானம் பெற்றருளினார்.

அருளிச் செயல்களுக்கு வியாக்கியான மிட்டருளும் திருப்பணியில் மற்றுஞ் சில ஆசாரியர்களும் கைவைத்ததுண்டு. ஆனால், பூர்த்தியாக நாலாயிரத்திற்கும் வியாக்கியானமிட்டருளினவர் என்னும் பெருமை இவ்வாசிரியரொருவர்க்கே அஸாதாரணமாக அமைந்ததாகும். இவ்விஷயம் உபதேசரத்தினமாலையில், "பிள்ளான் நஞ்சீயர் பெரியவாச்சான் பிள்ளை தெள்ளார்வடக்குத் திருவீதிப் பிள்ளை, மணவாளயோகி திருவாய் மொழியைக் காத்த குணவாளரென்று நெஞ்சே கூறு." "நஞ்சீயர்செய்த வியாக்கியைகள் நாலிரண்டுக்கு, எஞ்சாமை யாவைக்குமில்லையே— தஞ்சீரால் வையகுருவின் தம்பி மன்னுமணவாளமுனி செய்யுமவைதாமுஞ் சில," "பெரியவாச்சான் பிள்ளை பின்புள்ளவைக்கும் தெரிய வியாக்கியைகள் செய்வால்—அரிய அருளிச் செயல் பொருளை ஆரியர்கட்கிப் போது அருளிச் செயலாய்த் தறிந்து." என்ற பாசுரங்களினாலும் உணரத் தக்கது. பெரியாழ்வார் திருமொழியில் நானூறு பாசுரங்களுக்கு மாத்திரம் இவ்வாசிரியர் தம் வியாக்கியானம் இப்போது இருந்ததென்றும், மணவாளமாமுனிகள் பலருடைய பிரார்த்தனைக்கிணங்கி அக்குறையைத் தாம் நீக்கியருளின ரென்றும் ஸம்ப்ரதாயம் வல்ல பெரியோர் பகர்வர்.

"கலைகளும் வேதமும் நீதிநூலும் கற்பமும் சொற்பொருள் தானும், மற்றைநிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினாலருள் செய்து" என்கிறபடியே பரமகாருணிகனான ஸர்வேச்வரன் இவ்விருள் தருமா ஞாலத்துக்கு அணிவிளக்காக அனேகவிதமான சாஸ்த்ரங்களை உபகரித்தருளினான். அவற்றுள் வேதசாஸ்த்ரமே மூலப்ரமாணம். அது வடமொழி வேதமென்றும் தென்மொழி வேதமென்றும் பாகுபாடுற்றது. வடமொழி வேதத்திற்கு வித்யாரண்யஸ்வாமிகள் பலபல பண்டிதர்களை வைத்துக்கொண்டு பாஷ்யம் அவதரிப்பித்தார். அது வொரு மஹோபகாரம். அந்த வடமொழி வேதத்திற்காட்டிலும் பலவகையிலும் சிறப்புப்பெற்ற தமிழ்வேதத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை பரம ரஸபரிபூர்ணமான வியாக்கியானமிட்டருளினது யாவர்க்கும் கைம்மாறிலாத பேருதவியாகும்.

## 33 ? பெரியவாச்சான் பிள்ளை.

கண்ணபிரானுடைய திருநக்ஷத்ரத்திலேயே இப்பேராசிரியரும் திருவவதரித்தருளினார். இவ்வாசிரியருடைய சரித்திரவரலாறுகளைப்பற்றி இங்கு நாம் ஒன்றும் எழுதப் புகுகின்றிலோம். அதுபற்றி நமக்கு விசேஷமாகத் தெரியவும் தெரியாது. இவர் தம்மால் உலகுக்குவிளைந்த மஹோபகாரம் அபரிமிதமாதலால் அதைப்பற்றியே சிறிதுபேசியுகப்போம். ஆழ்வார்களின் அருளிச்செயல்களுக் கெல்லாம் மிகச் சிறந்த வியாக்கியானமும், ஸ்ரீராமாயணத்தில் பலபல ச்லோகங்களுக்கு இன்சுவையே வடிவெடுத்த வியாக்கியானமும், ஆளவந்தாருளிய ஸ்தோத்ர ரத்நத்திற்கும் எம்பெருமானாருளிச்செய்த கத்யத்ரயத்திற்கும் ஜிதந்தாஸ்தோத்ரத்திற்கும் உருக்கமான வியாக்கியானமும், பரந்தரஹஸ்யம் முதலான சில ரஹஸ்யார்த்த க்ரந்தங்களும் இவர் அருளிச் செய்தவையாகும்.

நம்பிள்ளையென்கிற லோகாசார்யரின் திருவடிவாரத்தில் நெடுநாள் பரிசர்யைபண்ணிப் பெற்ற விசேஷார்த்தங்களையே இவ்வாசிரியர் தமது திவ்யக்ரந்தங்களில் அமைத்தருளினார். இவர்தாம் நம்பிள்ளையைப்பற்றி ஓரிடத்தில் அருளிச் செய்திருக்கும் ஸ்ரீஸூக்திகளை மீண்டும் இங்குக் குறிப்பிடுவோம்; பெரிய திருமொழியில் (5—8—7) "அந்தணனொருவன்" என்ற விடத்து வியாக்கியானத்திலே—"மூற்பட த்வயத்தைக்கேட்டு இதிஹாஸ புராணங்களையும் அதிகரித்து, பரபக்ஷப்ரதி க்ஷேபத்துக்குடலாக ந்யாயமீமாம்ஸைகளும் அதிகரித்து, போதுபோக்கும் அருளிச்செயலிலேயாம் பிள்ளையைப் போலே......" என்றருளிச் செய்தார். இதனால், நம்பிள்ளை ஸகல சாஸ்த்ரங்களையும் வரியடைவே அதிகரித்து அந்தப்பாண்டித்யம் முழுவதையும் அருளிச் செயற்பொருளுபந்யாஸங்களிலே உபயோகப்படுத்தி வந்தாரென்பது விளங்கும். அவ்வண்ணமாகவே இவ்வாசிரியரும் ஸகல சாஸ்த்ரஜ்ஞராகித் தமது ஞானவிளக்கத்தை வியாக்கியானங்களருளிச் செய்வதில் வெகு அழகாகச் செலுத்தி இவ்வுலகுக்கு மஹோபகாரகர்களில் ப்ரதமஸ்தானம் பெற்றருளினார்.

அருளிச் செயல்களுக்கு வியாக்கியான மிட்டருளும் திருப்பணியில் மற்றுஞ் சில ஆசாரியர்களும் கைவைத்ததுண்டு. ஆனால், பூர்த்தியாக நாலாயிரத்திற்கும் வியாக்கியான மிட்டருளினவர் என்னும் பெருமை இவ்வாசிரிய ரொருவர்க்கே அஸாதாரணமாக அமைந்ததாகும். இவ்விஷயம் உபதேசரத்தினமாலையில், "பிள்ளான் நஞ்சீயர் பெரியவாச்சான் பிள்ளை தெள்ளார்வடக்குத் திருவீதிப் பிள்ளை, மணவாளயோகி திருவாய் மொழியைக் காத்த குணவாளரென்று நெஞ்சே கூறு." "நஞ்சீயர்செய்த வியாக்கியைகள் நாலிரண்டுக்கு, எஞ்சாமை யாவைக்குமில்லையே— தஞ்சீரால் வையகுருவின் தம்பி மன்னுமணவாளமுனி செய்யுமவைதாமுஞ் சில," "பெரியவாச்சான் பிள்ளை பின்புள்ளவைக்கும் தெரிய வியாக்கியைகள் செய்வால்—அரிய அருளிச் செயல் பொருளை ஆரியர்கட்கிப் போது அருளிச் செயலாய்த் தறிந்து." என்ற பாசுரங்களினாலும் உணரத் தக்கது. பெரியாழ்வார் திருமொழியில் நானூறு பாசுரங்களுக்கு மாத்திரம் இவ்வாசிரியர்தம் வியாக்கியானம் லுப்தமாயிருந்த தென்றும், மணவாளமாமுனிகள் பலருடைய பிரார்த்தனைக்கிணங்கி அக்குறையைத் தாம் தீக்கியருளின ரென்றும் ஸம்ப்ரதாயம் வல்ல பெரியோர் பகர்வர்.

"கலைகளும் வேதமும் நீதிநூலும் கற்பமும் சொற்பொருள் தானும், மற்றைநிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினாலருள் செய்து" என்கிறபடியே பரமகாருணிகனான ஸர்வேச்வரன் இவ்விருள் தருமா ஞாலத்துக்கு அணிவிளக்காக அனேகவிதமான சாஸ்த்ரங்களை உபகரித்தருளினான். அவற்றுள் வேதசாஸ்த்ரமே மூலப்ரமாணம். அது வடமொழி வேதமென்றும் தென்மொழி வேதமென்றும் பாகுபாடுற்றது. வடமொழி வேதத்திற்கு வித்யாரண்யஸ்வாமிகள் பலபல பண்டிதர்களை வைத்துக்கொண்டு பாஷ்யம் அவதரிப்பித்தார். அதுவொரு மஹோபகாரம். அந்த வடமொழி வேதத்திற்காட்டிலும் பலவகையிலும் சிறப்புப்பெற்ற தமிழ்வேதத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை பரம ரஸபரிபூர்ணமான வியாக்கியானமிட்டருளினது யாவர்க்கும் கைம்மாறிலாத பேருதவியாகும்.

இவ்வாசிரியரின் வியாக்கியானசைலி அநுபவிக்க அநுபவிக்க அனைவரையும் ஆனந்தக்கடலில் அமிழ்த்துவதாகும். மற்றையோர் பத்தெட்டு வாக்கியங்களினால் விரியவுரைக்கும் பொருளைச் சிறியதொரு வாக்கியத்தினால் மிக அழகாக அருளிச்செய்து வைக்குந் திறம் இவர்க்கு அஸாதாரணமானது.

கடல் ரத்நாகரமென்று பெயர் பெற்றிருத்தல் போல இவ்வாசிரியரது வியாக்கியானக் கடல் எண்ணிறந்த விசேஷார்த்தரத்ன நிதியாகப் புகழ்பெற்றுள்ளது. அவற்றுள் சில அர்த்த ரத்னங்களை ஈண்டெடுத்து விளக்குவாம்:—அதுவேஇங்கு இவருடைய குணாநுபவமாகும். ஆளவந்தார் எம்பெருமானார் பட்டர் நஞ்சீயர் முதலான பூருவாசாரியர்கள் அருளிச் செயல்களுக்கு ஆங்காங்கு அழகாக நிர்வஹித்துக் கொண்டிருந்த அர்த்தவிசேஷங்களை இவ்வாசிரியர் நமக்கு எடுத்துக்காட்டியிருக்கின்றாராதலால் அப்படிப்பட்ட அர்த்தங்களைச்சிறிது அநுபவிப்போம். திருமங்கையாழ்வாரருளிச் செயலான பெரிய திருமொழியின் வியாக்கியானத்திலிருந்து சிலவிஷயங்களைக் கொள்வோம்.

(1—2—10) “கரியமாமுகிற்படலங்கள் கிடந்து அவை முழங்கிட, களிறென்று பெரியமாசுணம் வரையெனப் பெயர்தருசிரி.” என்ற பாசுரத்தின் வியாக்கியானத்தில்—மலைப்பாம்புகளானவை யானைக்கு அஞ்சிப் புற்றிலேபுக்கொளிக்கும் என்று நஞ்சீயர் அருளிச் செய்தார்; அதைக்கேட்ட நம்பிள்ளை ‘இதுவோ இதுக்கு அருளிச் செய்யும்படி?’ என்று கேட்க; “நீர் இப்படிக்கேட்கும்போது ஒன்றை நினைத்தல்லது கேளீர்; அத்தைச் சொல்லும்” என்று ஜீயர் நியமிக்க, நம்பிள்ளை பணித்தபடி—பெயருகையாகிறது போக்கு வரத்து இரண்டுக்கும் ஸாதாரணமாயிருப்பது; இனித்தான் மலைக்குச் சிறப்புச் சொல்லுமவர்கள் மலைப்பாம்புகள் ஆனையை விழுங்கு மென்னக்கடவர்கள்; ஆகையாலே கரியமாமுகிற்படலங்கள் கிடந்து முழங்க, அவற்றைப்பெரிய மலைப்பாம்பானது ஆனையாக வெண்ணி ஆஹாரமாகக் கொள்ளக்கருதி மலைபெயர்க்காற்போலே கால்வாங்கிவந்து கிட்டா நிற்கும் என்று பொருள் கொள்ளலாம் போலிருக்கிறதே, என்று விஜ்ஞாபிக்க, ஜீயர் அதைக் கேட்டு ‘இப்படியேதான் பொருள்’ என்று போரக்கொண்டாடியருளினார்—என்கிற ஐதிஹ்யமுள்ளது.

இதனைச் சிறிது விவரிப்போம்: சில மலைப்பாம்புகள் யானையைப் பார்த்து அஞ்சி நடுங்கி ஓடிப்போய்விடுமென்றும், பலமலைப்பாம்புகள் யானையை அணுகி விழுங்கி விடுமென்றும் தமிழ்நூற்களால் தெரிகின்றது. ‘திரையன்பாட்டு’ என்ற ஓர் பழைய நூலில்—“கடுங்கண்யானை நெடுங்கை சேர்த்தி, திடங்கொண்டறைதல் நின்னமென்றஞ்சிப், படங்கொள் பாம்பும் விடாகம் புகூம், தடங்கொள் உச்சித்தாழ்வரையடுக்கத்து” என்றதனால் மாசுணம் களிற்றைக் கண்டு அஞ்சியொளிக்குமென்பது தெரிகின்றது. “நால்வாய்க் களிறு பாந்தட்பட்டெனத், துஞ்சாத்துயரத்தஞ்சு பிடிப்பூசல், நெடுவரை விடரகத்தியம்பும், கடிமான்புல்லிய காடிறந்தோரே.” என்று சங்கநூல்களுள் ஒன்றான நற்றிணையிலும், “பரிய களிற்றை அரவு விழுங்கி மழுங்கவிருள் கூர்ந்த, கரியமிடற்றர் செய்ய மேனிக் கயிலை மலையாரே” என்று தேவாரம் திருக்கயிலாயம் முதல் திருமுறையிலும், “இடிகொள் வேழத்தை எயிற்றொடு மெடுத்துடன் விழுங்கும், கடியமாசுணம் கற்றறிந்தவரென அடங்கிச், சடைகொள் சென்னியர் தாழ்விலர் தாம் மிதித்தேறப், படிகள் தாமெனத் தாழ்வரை கிடப்பன பார்ப்பாய்.” என்று கம்பராமாயணச் சித்திரகூடப் படலத்திலும் உள்ளபாட்டுக்களால் மாசுணம் யானையை விழுங்கும் என்பது தெரிகின்றது. அஞ்சியொளித்தல் சிறுபான்மையும், விழுங்குதல் பெரும்பான்மையுமாயிருத்தலால் “களிறென்றுபெரிய மாசுணம் வரையெனப் பெயர்தரு” என்ற இவ்விடத்திற்கு—மலைப்பாம்புகள் மேகங்களை நோக்கி யானைகளாக ப்ரமித்து அவற்றை விழுங்குதற்காக மலை பெயருமாபோலே பெயர்ந்து கிட்ட வரும்—எனப்பொருள் கொள்ளுதல் நன்குபொருந்துமென்பது நம்பிள்ளை திருவுள்ளமாயிற்று.

(1—3—1.) “முற்றமூத்துக் கோல் துணையா” என்றவிடத்து வியாக்கியானத்தில் ஓர் ஐதிஹ்யம் அருளிச் செய்கிறார்;—நஞ்சீயர் ஸந்யாஸாச்ரமஸ்வீகாரம் செய்துகொள்ளும்

போதுத் ரிதண்டம் தரித்துக்கொள்வதற்கான மந்திரம் "ஸகா மே கோபாய" (ஒத்ரிதண்டமே! நீ எனக்குத் துணையாயிருந்து என்னை ரக்ஷிக்கவேணும்) என்பதாகக் கேட்டு, ஸர்வஜ்ஞனுயும் ஸர்வசக்தனுயும் பரம சேதநனுயுமிருக்கிற எம்பெருமானையே துணையாகப் பற்றவேண்டியிருக்க, அசேதநமான தண்டத்தை நோக்கி இங்ஙனே சொல்லும்படியாக ஒரு ஆச்ரமம் நேருவதே: என்று (நஞ்சீயர்) ஸாதித்தாராம்.

(3—7—3) "அஞ்சுவன் வெஞ்சொல் நங்காய் அரக்கர் குலப்பாவை தன்னை, வெஞ்சின மூக்கரிந்த விறலோன் திறம் கேட்கில்." என்ற பாசுரத்தின் வியாக்கியானத்தில்— "பட்டர் இப்பாட்டை அருளிச் செய்து, ஒரு ஸ்த்ரீயை விரூபையாக்கினவனுடைய திறம் கேட்கில் அஞ்சுவன் என்கையால் இத்தலைக்கு குணஹாநியாய்த் தோற்றுகின்றது; இது ஆழ்வார் அருளிச்செய்யக்கூடாது; இது எங்ஙனே சேரும்படி? என்று ஆச்சானைக் கேட்க 'துடுப்பிருக்கக் கைவேகவேணுமோ? எம்பெருமானர்தாமே அருளிச் செய்துவைத்தாரிறே' என்ன, அருளிச் செய்தபடி எங்ஙனே? என்றுகேட்க, முன்பொரு புணர்ந்து உடன்போக்கிலே பிறந்த்ப்ரமாதத்தைக் கேட்டு அத்தை நினைத்து இப்போது பயப்படுகிறாள் என்றருளிச் செய்தார்—என்றுள்ளது.

இதனைச் சிறிது விவரிப்போம்: இவ்விடத்தில் ஆழ்வாருடைய திருத்தாயார் சூர்ப்பணகாபங்க விருத்தாந்தத்தை யெடுத்துரைத்து 'இப்படிப்பட்ட தன்மையைக் கேட்க நான் அஞ்சுகின்றேன்' என்று சொல்லியிருப்பதன் கருத்தியாது? அரக்கியின் மூக்கையறுத்தது போலே என் மகளின் மூக்கையும் (திருவாலியெம்பெருமான்) அறுத்திடுவனேவென்று அஞ்சுகின்றேனென்பதாகவன்றோ இங்குக் கருத்துத் தோற்றுகின்றது. குணக்கடலாகிய எம்பெருமான் விஷயத்தில் இவ்வாறு நினைத்து அஞ்சுதல் கூடுமோ? இது குணஹாநி சொல்லுகிறபடியாகுமன்றோ என்று பட்டர் சங்கித்து ஆச்சானைக் கேட்டார். அதற்கு ஆச்சான், 'துடுப்பு இருக்கக் கைவேக வேணுமோ? எம்பெருமானர் இனிதாக நிர்வஹித்துப் பொருளருளிச் செய்து வைத்திருக்க நாம் ஏன் வருந்தவேண்டும்—என்று சொல்லி அப்பொருளையும் வெளியிட்டார்; அதாவது—'அரக்கர் குலப்பாவைதன்னை மூக்கரிந்த விறலோன்' என்றதனால் பெருமாளுக்கும் பிராட்டிக்கும் நேர்ந்தபிரிவு தெரிவிக்கப்படுகிறது. இராவணன் ஸீதையைக் கவர்ந்து சென்றதற்கு மூலகாரணம் சூர்ப்பணகையின் அங்கபங்கமேயாதலால் இந்த அங்கபங்கத்தை ப்ரஸ்தாவிக்கும் முகத்தால் ஸ்ரீராமஸீதைகளின் பிரிவு நினைப்பூட்டப்படுகின்றது. ஆகவே முன்பு இருவருமாய்ப் புறப்பட்டுச் சென்று ஒருவரை யொருவர் பிரிந்து பல்நாள் வருந்திக்கிடக்க நேர்ந்ததே; அவ்விதமாக இப்போதும் இவர்களுக்கு [வயலாலி மணவாளனுக்கும் பரகாலநாயகிக்கும்] ஏதேனும் விதிவசத்தாலே பிரிவு நேர்ந்து யிதப்பிக்கப்ராப்தமாகுமோவென்று அஞ்சுகின்றேன்—என்பதாம்.

(4—4—6) "தான் போலுமென்றெழுந்தான் தரணியாளன் அது கண்டு தரித்திருப்பானரக்கர் தங்கள், கோன் போலுமென்றெழுந்தான் குன்றமன்ன இருபது தோளுடன் துணித்தவொருவன் கண்டீர்—நாங்கூர்த்திருத் தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே."— இப்பாட்டின் முன்னடிகட்குப் பொருள் சொல்லுவது ஸூக்ஷ்மபுத்திசாலிகளுக்கன்றி மற்றையோர்க்கு இயலாது; முற்காலத்தில் ஆப்பான் திருவழுந்தூரரையர் என்கிற ஒரு ஸ்வாமியும் இன்னுஞ் சில முதலிகளுமாக இதற்குப் பொருள் என்னவென்று ஆராயத் தொடங்கினர். அவர்கட்குப் பொருள் புலப்படவில்லை. அப்போது பட்டர் மிகச் சிறு பிராயத்தவராயிருந்தார். அப்போது அவர் அருளிச் செயல் மூலம் ஓதியிருந்தாரல்லர். ஆனாலும் பட்டர் சிறுபிராயமே தொடங்கி எல்லாவழிகளிலும் தமது ஸூக்ஷ்ம புத்தியைச் செல்லவிட்டுப் பலவகையான அர்த்த விசேஷங்களை வெளியிட்டுக் கொண்டு ஆச்சரியமாக விளங்கிவந்தமையால் பல பெரியோர்களும் பட்டரைப்பணிந்து அர்த்தங்கள் கேட்பதுண்டு: அப்படியே கீழ்ச் சொன்ன அரையர்முதலானாரும் பட்டரிடம் சென்று இப்பாட்டுக்குப்பொருள் என்ன? என்று கேட்டனர். அப்போதே பட்டர் 'பாசுரத்தை விளங்கச் சொல்லுங்கள்' என்று சொல்லி ஒருகால் பாசுரத்தைக் கேட்டவாறே 'தான் போலுமென்றெழுந்தான் தரணியாளன்

அதுகண்டு தரித்திருப்பான் அரக்கர் தங்கள்கோன் போலும்' என்கிறவரையில் இராவணன் வார்த்தையின் அநுவாதம் என்று சொல்லிப் பொருளை விளக்கிக் காட்டினர். இங்கே பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியான ஸ்ரீஸூக்திவருமாறு—"ஆப்பான் திருவழுந்தூரரையரும் மற்றுமுள்ள முதலிகளுமாக இப்பாட்டிற் சொல்லுகிறதென்? என்று பட்டருக்கு விண்ணப்பஞ் செய்ய, ஒருகால் இயலைக் கேளா 'ராவணன்வார்த்தை காண்' என்றருளிச் செய்தார். [தான்போலுமித்யாதி] ஒரு க்ஷத்ரியன்போலே எதிரியென்று வந்தான்; அது கண்டு தரித்திருப்பான் ராக்ஷஸராஜனும்—என்று கிளர்ந்தெழுந்த ராவணனுடைய மலை போலேயிருக்கிற இருபது தோளையும் துணித்த தனிவீரன் கிடீர்"—என்று. இப்பொருளை விவரித்துக் காட்டுவோம். காங்கூர்த் திருத்தெற்றியம்பலத் தெம்பெருமான் யாவனென்னில்; இராவணனுடைய மலைபோன்ற இருபது தோள்களையும் துணித்த தனிவீரன். அந்த இராவணன் எப்படிப்பட்டவனென்னில்; மிகவும் அஹங்காரத் தோற்றச் செருக்கி வார்த்தை சொல்லிக்கொண்டே போர்க்களத்தில் கிளர்ந்தவன். அப்படி அவன் செருக்குடன் சொன்ன வார்த்தை ஏதென்னில்; 'தான்போலுமென்றெழுந்தான் தரணியாளன் அது கண்டு தரித்திருப்பான் அரக்கர் தங்கள் கோன் போலும்' என்கிற இவ்வார்த்தையாம். இவ்வார்த்தைக்கு அர்த்த மேதென்னில்?; இராமனென்று ஒரு பயல் தான் ஒரு பெரிய க்ஷத்ரியன் போல எதிரியென்று வருகிறதாம்; அதைக் கண்டு ஒருவன் பொறுத்திருக்கிறதாம். அப்படிப் பொறுத்திருப்பவன் ராக்ஷஸர்கட்குத் தலைவனென்றுபெயர் சுமந்திருப்பதாம்—என்று வெகு அற்பமாகச் சொல்லி யுத்தத்திற்குக் கிளம்பினனென்கை. இதனால், இராமன், தனக்கு எதிரியென்று புறப்படுவதற்கும் தகுதியற்றவன் என்பதும், இராமன் போர்க்கு வரச் செய்தேயும் இராவணன்தான் ஆறியிருப்பது தன் பெருமைக்குத் தகாதென்பதும் தெரிவிக்கப் பட்டனவாம்.

இப்பாட்டின் இவ்வரிய பெரிய பொருளை உணராதவர்கள், பிறரும் உணர்ந்து கொள்ள இடமில்லாதபடி "தான்போலுமென்றெழுந்தான்" என்றும் "கோன்போலுமென்றெழுந்தான்" என்றும் பாடத்தையே மாறுபடுத்திப் பதிப்பித்தும் ஓதுவித்தும் வருவது வருந்தத் தக்கது.

(5—1—2.) "பள்ளச்செறுவில் கயலுகளப் பழனக் கழனியதனுள் போய்ப், புள்ளூப் பிள்ளைக்கு இரைதேடும் புள்ளம் பூதங்குடிதானே."—முற்காலத்தில், ஆலவாயுடையான் என்பானொருதமிழன் பட்டரிடம் வந்து இப்பாட்டில் ஒரு கேள்விகேட்டான்: 'பள்ளச் செறுவிற் கயலுகள' என்றபோதே அவ்விடத்து வயல்களில் மீன்கள் அளவற்றுக் கிடக்கின்றமை வெளிவந்துவிட்டது: அப்படியிருக்க ஈற்றடியில் 'இரைதேடும்' என்று எங்ஙனே சொல்லலாம்? மீன் அருமைப் பட்டிருந்தாலன்றோ இரைதேடவேண்டும்; கொள்வார் தேட்டமாம்படி குறையற்றுக் கிடக்கும்போது தேடிப்பிடிப்பதாகச்சொல்லுவது பொருந்துமோ? என்றுகேட்டான்; இதற்குப் பட்டர் அருளிச் செய்ததாவது—பிள்ளாய்! நீ கற்றவனாயினும் சொற்போக்கு அறிந்திலை; "பிள்ளைக்கு இரைதேடும்" என்றுள்ளது காண்; அங்குள்ள மீன்கள் நிலமிடியாமே ஆலும் துலாமும் போலே தடித்திருக்கும்; அவை பறவைக் குட்டிகளின் வாய்க்குப் பிடிக்கமாட்டாவாகையால் உரியசிறுமீன்கள் தேடிப்பிடிக்க வேண்டுமத்தனையன்றோ என்றும். பாலசிஷ்யர்கள் அவகாஹித்துக் கொள்ளக்கூடிய சிறு விஷயங்களை மஹாசாஸ்த்ர ஸாகரத்திலிருந்து ஆசாரியர்கள் உபதேசிக்கத் தேடுகின்றமை இவ்விடத்திற்கு உள்ளுறை பொருளாகும்.

இப்படிப்பட்ட அர்த்தவிசேஷங்கள் தனிப்புத்தகமாக இட்டு அநுபவிக்கவேண்டியவையாதலால் இங்குஇவ்வளவோடு நிற்போம். ஸ்ரீராமாயண தனிச்லோக வியாக்கியானங்களிலெழுந்தாலோ "கொள்ளமாளாவின்பவெள்ளம்" என்னவேண்டுமத்தனை.

வேதாந்ததேசிகர்க்கு இப்பேராசிரியரிடத்தில் அளவுகடந்த கௌரவப்ரதிபத்தியுண்டு. ஆனதுபற்றியே த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளியிலும் த்ரமிடோபநிஷத்ஸாரத்திலும் பெரும்பாலும் இவருடைய இருபத்தினாலாயிரப்படியை யடியொற்றியே அருளிச்செய்து

போந்தார். அது அடியேனுடைய பல க்ரந்தங்களில் பலகால் விரிவாக நிரூபிக்கப்பட்டிருப்பதால் இங்கு விடுக்கப்பட்டது.

## வியாக்கியானங்களைப்பற்றின ஓர் ஆராய்ச்சி

சில விஷயங்கள் சில வருஷகாலமாக ஒருவிதமான ப்ரஸித்தியை அடைந்து விட்டால் அவற்றில் வஸ்துத: அநுபபத்தி மலிந்திருந்தாலும் அதை எடுத்துக் காட்டுமவர்கள் பழிக்கப் படுவார்களே யல்லது, எடுத்துக்காட்டும் அநுபபத்தியில் ,உள்ள ஔசித்யத்தை ஆராய்ந்து உகப்பார் மிகச் சிலரே. இஃதறிந்துவைத்தும் இப்போது ஒரு விஷயத்தை விவரித்துரைக்கப் புகுகின்றேன்.

பெரியாழ்வார்திருமொழிக்குத் திருவாய்மொழிப் பிள்ளை யருளிச் செய்த ஸ்வாபதேச வியாக்கியான மென்றொரு வியாக்கியானம் சில வருஷங்களுக்கு முன் அச்சிடப்பட்டு வெளிவந்திருக்கின்ற தென்பது ஸுப்ரஸித்தம். இது திருவாய்மொழிப் பிள்ளையருளிச் செய்ததாக விருக்க நியாயமுண்டா வென்பதைப் பற்றி இங்குப் பரிசீலனை செய்யலாகிறது.

மணவாள்மாமுனிகள் உபதேசரத்தின மாலையில்—* ஆழ்வார்களேற்ற மருளிச்செயலேற்றம், தாழ்வாதுமின்றி அவைதாம் வளர்த்தோர்—ஏழ்பாரு முய்ய வவர்செய்த வியாக்கியைகளுள்ளதெல்லாம், வையமறியப் பகர்வோம் வாய்ந்து * என்கிற பாசுரத்தினால் திவ்வியப் பிரபந்தங்களுக்கு இன்னாரின்னார் வியாக்கியானங்கள் அருளிச் செய்தார்களென்பதைத் தாம் ஸ்பஷ்டமாய் எடுத்துரைப்பதாக ப்ரதிஜ்ஞைபண்ணி, திருவாய்மொழிக்கு வியாக்கியானஞ் செய்தருளின ஐந்து திருநாமங்களை விவரித்தருளி, நாலாயிரத்திற்கும் பூர்த்தியாக வியாக்கியானம் செய்தருளினவர் பெரியவாச்சான் பிள்ளை என்பதை * பெரியவாச்சான் பிள்ளை பின்புள்ளவைக்குந் தெரிய வியாக்கியைகள் செய்வால் * என்கிற பாசுரத்தினால் பேசி, சிற்சில திவ்யப் பிரபந்தங்கட்குச் சிற்சில ஆசாரியர்கள் வியாக்கியானம் செய்தருளின படியை மேலொரு பாட்டாலே அருளிச் செய்துள்ளார்; அப்பாட்டாவது:—

* நஞ்சீயர்செய்த வியாக்கியைகள் நாலிரண்டுக்கு, எஞ்சாமை யாவைக்கு மில்லையே—தஞ்சீரால் வையகுருவின்தம்பி மன்னுமணவாளமுனி செய்யுமவை தாமுஞ்சில. * என்பதாம்.

திருவாய்மொழி தவிர்ந்த மூவாயிரத்தினுள் நாலிரண்டு பிரபந்தங்களுக்கு நஞ்சீயர் வியாக்கியானம் செய்தருளினாரென்றும், பிள்ளை லோகாசார்யருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் சில பிரபந்தங்களுக்கும், வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயர் சில பிரபந்தங்களுக்கும் வியாக்கியானஞ் செய்தருளினார்களென்றும் அருளிச்செய்து தலைக்கட்டினார்: முப்பது நாற்பது பாசுரங்களுக்கு மாத்திரமே வியாக்கியானம் செய்தருளினவர்களை எடுத்துரைக்கும்போது, திருவாய்மொழிப் பிள்ளை பெரியாழ்வார் திருமொழிக்கு வியாக்கியானம் பணித்தவராயிருந்தால் நானூற்றைம்பது பாசுரங்களுக்கு வியாக்கியானஞ் செய்தருளின அவரை மாமுனிகள் எடுத்துரைக்க வேண்டுவது மிகவும் அவசியமல்லவா? திருவாய்மொழிப் பிள்ளை மாமுனிகளுக்கு ஸாக்ஷாத் ஆசார்யரல்லவா? ஸ்வாசார்யர் வியாக்கியானமருளிச் செய்திருந்ததை மாமுனிகள் அறியாதிருந்திருப்பாரா? மறந்திருப்பாரா? உபேக்ஷித்திருப்பாரா?

மற்றொன்றும் நோக்கவேணும்: பெரியாழ்வார் திருமொழிக்குப் பெரியவாச்சான் பிள்ளை அருளிச் செய்திருந்த வியாக்கியானம் நானூறு பாசுரம் வரையில் கரையானுக்கு இரையாயிற்றென்றும் அதை மாமுனிகள் தமது சிஷ்யர்களின் பரம ப்ரார்த்தனையினால் தாம் அருளிச்செய்து பூர்த்தி செய்தாரென்றும் ப்ரஸித்தியாகவுள்ளது. ஏற்கெனவே திருவாய்மொழிப் பிள்ளையின் வியாக்கியானம் அவதரித்திருந்தால் அதைக் காட்டியே மாமுனிகள் சிஷ்யர்களை த்ருப்தி செய்வித்திருப்பாரன்றோ? ஆக இவ்விரண்டு காரணங்களும் நன்கு விமர்சிக்கத் தக்கவை.

இதற்குமேல் சிலர் சொல்லக்கூடிய ஆக்ஷேபத்தையும் நாமே எடுத்துக் காட்டுகின்றோம். பெரியாழ்வார் திருமொழியில் (3—9—4) * மாற்றுத்தாய் சென்று * என்கிற பாசுரத்திற்கு மணவாளமாமுனிகள் மிக விரிவாக வியாக்கியானமருளிச் செய்துள்ளார். அவ்விடத்தில்—'இது நாலூர்பிள்ளை இட்டருளின வியாக்கியான ப்ரக்ரியை' 'இது பிள்ளையிட்டருளின வியாக்கியான ப்ரக்ரியை' என்று இரண்டு நிர்வாஹங்கள் காட்டப்பட்டிருக்கின்றன. இதனால் மாமுனிகளின் வியாக்கியானத்திற்கு முன்னே இரண்டு வியாக்கியானங்கள் அவதரித்திருந்தனவாக விளங்கா நின்றது. இங்குப் பிள்ளையிட்டருளின வியாக்கியானமென்றது திருவாய்மொழிப் பிள்ளையிட்டருளின வியாக்கியானத்தையே யாகும். நாலூர் பிள்ளையும் ஒரு வியாக்கியானமிட்டருளி யிருந்ததாக இதனால் விளங்கினாலும் அது லோபித்திருக்கக் கூடும் திருவாய்மொழிப் பிள்ளையிட்டருளின வியாக்கியானம் இருக்கின்றமையால் இதனை இல்லைசெய்வானேன்? என்று ஆக்ஷேபம் விளையக் கூடும்.

இதற்குச் சொல்லுகிறோம். திருநெடுந்தாண்டகத்தில் * மைவண்ண நறுங்குஞ்சிப் பாசுரத்திற்கு மாத்திரம் பட்டருடைய தனி வியாக்கியானம் அவதரித்திருப்பது போல இந்த * மாற்றுத் தாய் பாசுரத்திற்கும் நாலூர் பிள்ளையும் பிள்ளையும் தனியே வியாக்கியானமிட்டருளி யிருக்கலாம்; அதைக் கொண்டு அந்த நிர்வாஹங்களை மாமுனிகள் உதாஹரித்ததாகக் கொள்ளக் குறையில்லை.

எதற்காக இப்படி கொள்ளவேண்டும். உபலப்தமாயிருக்கின்ற வியாக்கியானத்தையே திருவாய்மொழிப் பிள்ளையினுடையதாகக் கொண்டால் என்ன குற்றம்? என்கிற ப்ரத்யவஸ்தானமே வலிதாக நிற்கும். உபதேச ரத்தினமாலையில் திருவாய்மொழிப்பிள்ளை வியாக்கியானம் செய்தருளினதாக எடுத்துரையாமை கொண்டே இந்த வியாக்கியானம் அவருடையதன்று என்று கூறவேண்டியதாகிறது. ஸ்வாசார்யர் வியாக்கியான மருளிச் செய்திருந்தால் மாமுனிகள் தாமும் பிறிதொரு வியாக்கியானம் பணித்திருக்க மாட்டாரென்பதும் ஒரு சிறந்த சான்று.

திருவாய்மொழிப் பிள்ளை ஸந்ததியில் தோன்றின வொரு மஹான் அருளிய வியாக்கியானமாகவே இது இருக்கத் தகும். ஸ்ரீகுலசேகராழ்வாருடைய ஸந்ததியில் தோன்றினவொரு மஹநீயர் தொடுத்த முகுந்தமாலையைக் குலசேகராழ்வாருடைய க்ருதியாகவே வ்யவஹரிக்க நேர்ந்துவிட்டது போல இதுவும் நேர்ந்திருக்கலாம்.

இப்படித்தானென்று ஸ்தாபிக்க வேணுமென்று நமக்கொரு ஆக்ரஹமில்லை. விவாதாஸ்பதமான வியாக்யானத்தின் வைகரியை நன்கு நோக்குங்கால் இது மணவாள மாமுனிகளுக்குப் பிற்பட்டவருடைய வாக்காக இருக்கவேணுமென்று தோன்றிற்று. அதற்கு மேல் ஆராய்ச்சி செய்யுமளவில் தோன்றிய விஷயங்களை விஜ்ஞாபித்துக் கொண்டபடி.

## 12. புரட்டாசி மாதம்.

### 36. வேதாந்ததேசிகர்.

இது வேதாந்ததேசிகன் அவதரித்த மாதமென்பது உலகமறிந்தது. திருவேங்கடமுடையானுடைய மஹோத்ஸவத்தில் அவப்ருத நாளாகிய திருவோணத்தன்று காஞ்சிபுரியைச் சேர்ந்த தூப்புலில் திருவவதரித்த பேராசிரியர் இவர். விளக்கொளி யெம்பெருமானுடைய ஸந்நிதியைச் சேர்ந்தவொரு பகுதிக்குத் தூப்புல் என்கிற வ்யவஹாரமிருந்தது. தூப்புல் தூப்பில் என்று இரண்டுவகையான வ்யவஹாரங்களுமுண்டு. இரண்டும் பொருந்தும். தூய்மை வாய்ந்த புல்—தூப்புல். அதாவது தர்ப்பம். வைதிகர்கள் தர்ப்பத்தை விச்வாமித்ரமென்று வழங்கிவருவர்கள். இச்சொல் விச்வாமித்ர குலத்தவர்கள் வாழுமிடத்திற்கு இடப்பட்டதாகி தூப்புல் என்று வழங்கிவந்தது என்பது ஒருசாரார்கொள்கை. தூப்பு இல்—தூப்பில். பரிசுத்திபொருந்திய ஸ்தலமென்றபடி. இதுவே மிகப்பொருத்தமான வழக்காம்.

நம்மிராமாநுச தர்சனத்தை வளர்த்தருளின ஆசார்யர்களில் ஸ்ரீ நிகமாந்த மஹா தேசிகன் முதல் ஸ்தானம் பெறுவர். இவர் பல படிகளாலும் ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்தத்தைப் பெருமைப்படுத்தினவர். ஸ்ரீ பாஷ்யத்திற்குக் காப்பாகப் பல பல க்ரந்தங்களை யருளிச்செய்தும், ஸ்ரீபாஷ்யத்தைப் பலகால் ப்ரவசநஞ் செய்தருளியும், ஸ்ரீபாஷ்யார்த்த தூஷகர்களைப் பலவாறு கண்டித்தும்; ஸ்ரீபாஷ்யகாரரைப் பல பல ச்லோகங்களாலும் பாசுரங்களாலும் ஏத்தியும்—இப்படியே தமது வாழ்நாளைக் கழித்தருளின மஹாநுபாவர் இவர். ந்யாயஸித்தாஞ்ஜநம், தத்வமுக்தாகலாபம், ஸர்வார்த்தஸித்தி, அதிகரண ஸாராவளி, தத்வடீகா, சததூஷணீ, தாத்பர்ய சந்த்ரிகை—இப்படிகளான உத்க்ரந்தங்கள் நமது விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு அணி விளக்காக இவ்வாசிரியரால் அருளிச் செய்யப் பட்டவை.

இவர் முப்பது தடவை ஸ்ரீபாஷ்யப்ரவசநம் செய்தருளினவர் என்பது ஸங்கல்பஸூர்யோதயத்தில் இவர் தாமே பணித்த *த்ரிம்சத் வாரம் ச்ராவிதசாரீரகபாஷ்ய: * என்ற ச்லோகத்தினால் விளங்கும்.

ஞானம் அநுஷ்டானம் வைராக்யம் முதலிய ஸகலகுணங்களிலும் நிகரற்ற இவ்வாசிரியருடைய சரித்திர வரலாறுகளைப்பற்றிச் சுருக்கமாகவும் விரிவாகவும் பல வெளியீடுகள் வெளியிட்டிருக்கின்றேனாதலால் இங்கு சரித்திரத்தில் புகுந்து பேசுவதைவிட்டு இவரருளிச் செய்த திவ்யக்ரந்தங்களிலிருந்து அநுபவிக்கக்கூடிய அர்த்தவிசேஷங்களைப்பற்றி இங்கு விரிவாகப் பேசிக் களிக்க விரும்புகிறேன். ஸ்தோத்ரவகுப்பிலும் காவ்யநாடகவகுப்பிலும் சாஸ்த்ரவகுப்பிலும் வியாக்கியான வகுப்பிலும் ரஹஸ்யஸம்ப்ரதாய வகுப்பிலும் வாதவகுப்பிலும் நூற்றுக்கணக்கான மிகச்சிறந்த க்ரந்தங்களை வடமொழியிலும் தென்மொழியிலும் அருளிச்செய்திருக்கின்ற இவ்வாசார்யசிகாமணியின் எந்த க்ரந்தத்தை யெடுத்துக்கொண்டு அநுபவித்தாலும் ஆனந்தவெள்ளம் அபரிமிதமாகப் பெருகும். நமக்கோ ஞானமும் சக்தியும் மிகப் பரிமிதம். ஆசையோ பெரிது. அப்பராசார்யரின் திருவடிகளைச் சிந்தனை செய்து கொண்டே அவரது திருவருளால் தோன்றும் விஷயங்களை வரைகின்றேன்.

உலகிலுள்ள ஸகலமதஸ்தர்களும் நிச்சலும் நினைந்து வியக்கக் கூடிய பலவிஷயங்கள் ஸ்வாமியின் திருவாக்கில் வெளிவந்திருக்கின்றன. அவற்றுள் சிலவற்றையெடுத்துக்காட்டுகிறேன். [யாவரும் நெஞ்சில் தேக்கிக்கொள்ளும்படியாக ச்லோகரூபமாகவேயருளிச் செய்துள்ளவற்றில் சில ச்லோகங்கள் எடுத்துக் காட்டப்படுகின்றன.]

प्रथितं पातकिवर्गे कृतघ्न एको हि कृत्स्नमतिशेते ।
तमिमं क्रियमाणघ्नः तमपि दुरात्मा करिष्यमाणघ्नः ॥

[ப்ரதிதம் பாதகிவர்க்கம் க்ருதக்ந ஏகோ ஹி க்ருத்ஸ்நமதிசேதே,
தமிமம் க்ரியமாணக்நஸ் தமபி துராத்மா கரிஷ்யமாணக்ந:.]

இது ஸங்கல்பஸூர்யோதயத்திலுள்ள ச்லோகம். *எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு* என்பது திருக்குறள். *க்ருதக்நே நாஸ்தி நிஷ்க்ருதி: * என்பர் வடமொழியாளரும். பிறர்செய்தவுபகாரங்களை மறப்பவன் பஞ்சமஹாபாதகிகளிலும் சிறந்தவன். என்றைக்கோ செய்தவுபகாரங்களை மறப்பது கிடக்க; செய்து கொண்டேயிருக்கிற வுபகாரங்களை மறப்பவன் அவனிலும் சிறந்தவன். இதுவுங்கிடக்க; 'இவர் நாளைக்கு நமக்கு ஓர் பெரியவுதவி செய்யப் போகிறார்' என்று தெரிந்து கொண்டு முந்தியே அப்பெரியார்க்குத் தீங்கிழைக்குமவன் ஸர்வோத்க்ருஷ்டன்—என்பதாம்.

तिमिं किल तिमिंगिलो गिलति तद्गिलस्तं तथा तमप्यथ च तद्गिलस्तदिह पश्य कर्मक्रमे ।
समस्तवृजिनोदधिग्रसनडम्भकुम्भोद्भवं निवृत्तिमपि धर्ममत्त्यनघतत्त्वविन्निग्रहः ॥

[திமிம் கில திமிங்கிலோ கிலதி தத்கிலஸ் தம் ததா
தமப்யத ச தத்கிலஸ் ததிஹ பச்ய கர்மக்ரமே,
ஸமஸ்தவ்ருஜிநோததிக்ரஸநடம்பரம்போத்பவம்
நிவ்ருத்திமபி தர்மமத்தி அநகதத்வவிந்நிக்ரஹ:.]

இதுவும் ஸங்கல்பஸூர்யோதயத்திலுள்ளது. பாகவதாபசாரம் மிகக்கொடிதென்பது இதனால் வெகு அற்புதமாகக் காட்டப்படுகிறது. கடலில் திமிங்கிலமென்பேருரு ஜந்துவுண்டே; அந்தப்பெயர் அதற்கு எதனால் வந்தது தெரியுமோ? திமியென்கிற ஜந்துவை விழுங்குவது திமிங்கிலம். [திமிம்—திமியென்கிற ஜந்துவை, கிலதி—விழுங்குகின்றது; அதனால் திமிங்கிலம்.] இந்தத் திமிங்கிலத்தையும் விழுங்குவதொரு ஜந்துவுண்டு; அதற்குத் திமிங்கில கிலம் என்று பெயர்; அதையும் விழுங்கவல்லதொரு ஜந்துவுண்டு; அதற்குத் திமிங்கிலகிலகிலம் என்றுபெயர். இப்படியே பெயர்கள் ஏறிக்கொண்டேபோய் திமிங்கிலகில கிலகிலகிலகிலம் என்று மிகப்பெரிய ஜந்துவொன்று இருக்குமாம். அதுபோலவே மிகச்சிறியபாபம் முதற்கொண்டு மிகப்பெரியபாபம்வரையில் ஸகலபாபங்களையும் விழுங்கவல்லது சரணாகதிநிஷ்டை; அதையும் விழுங்கவல்லது மஹாபாகவதாபசாரம் என்றதாயிற்று.

एकयैव गुरोर्दृष्ट्या द्वाभ्यां वाऽपि लभेत यत् ।
न तत्तिसृभिरष्टाभिस्सहस्रेणापि कस्यचित् ॥

ஏகயைவ குரோர் த்ருஷ்ட்யா த்வாப்யாம் வாபி லபேத யத்,
ந தத் திஸ்ருபிரஷ்டாபிஸ் ஸஹஸ்ரேணாபி கஸ்யசித்.

இது ஸாம்பரதாயிக ரீதியில் ஸதாசாரநபத்ததியிலுள்ள (10) ச்லோகரத்நம். ஸங்கல்பஸூர்யோதயத்திலும் (2—62) உள்ளது. ஆசார்யருடைய ஒரு திருக்கண்ணினாலோ இரண்டு திருக்கண்களினாலோ ஒருவன் அடையக்கூடிய நன்மையை மற்றையோருடைய மூன்று கண்களினாலும் எட்டுக்கண்களினாலும் ஆயிரம் கண்களினாலும் அடையமுடியாது என்பது இச்ச்லோகத்தின் கருத்து. ஆசார்யனுடைய ஒரு திருக்கண்ணாவது "* சுபேந மநஸா த்யாதம் * என்னும்படியான அந்தரங்க கடாக்ஷம். எம்பெருமானாரை ஆளவந்தார் 'ஆமுதல்வனிவன்' என்று திருவுள்ளம்பற்றினது இங்கு நினைக்கத்தக்கது. இனி ஆசார்யனுடைய இரண்டு திருக்கண்களாவது உட்கண்ணாலும் வெளிக்கண்ணாலும் கடாக்ஷிக்கையாம். * சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி ரகுநந்தந! * என்று சபரி சொன்னகணக்கிலே வெளிக்கண்பார்வைதானே பவித்ரமாக்கவல்லது; உட்கண்கடாக்ஷமும் உடன் சேர்ந்தால் கேட்கவேணுமோ?

உத்தரார்த்தத்தில் திஸ்ருபி: என்றதனால்—ஸர்வஜ்ஞனென்று பேர்பெற்ற பரமசிவனுடைய கண்பார்வையினாலும் பெறலாகாது என்றதாயிற்று. அஷ்டாபி: என்றதனால்—நான்கு வேதங்களையுமறிந்த நான்முகனுடைய கடாக்ஷத்தினாலும் பெறலாகாது என்றதாயிற்று. ஸஹஸ்ரேணாபி என்றதனால் "ஸஹஸ்ரசீர்ஷா புருஷஸ் ஸஹஸ்ராக்ஷஸ் ஸஹஸ்ரபாத் * என்று புருஷஸூக்தத்திலும் "தோள்களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய் துணைமலர்க்கண்களாயிரத்தாய்" என்று திருவாய்மொழியிலும் ஆயிரக்கண்ணனாகக் கோதப்பட்ட ஸ்ரீமந்நாராயணனுடைய கடாக்ஷத்தினாலும் பெறலாகாது என்றபடி. இந்திரனுக்கு ஸஹஸ்ராக்ஷனென்று பெயருண்டாதலால் அவனுடைய கடாக்ஷத்தாலும் பெறலாகாதென்று கூறுவதாகச் சிலர் பொருள் சொல்லுவர்; அது ஒரு படியாலும் பொருந்தாது. இங்கு அதை யெடுத்துக் கழிக்கவும் ப்ரஸக்தியில்லையே.

## யாதவாப்யுதயாநுபவம்.

தேசிகன் அருளிச்செய்த திவ்யக்ரந்தங்களுள் யாதவாப்யுதய காவ்யம் பக்தர்களுக்குப் பரம போக்யமானது. கண்ணபிரான் திருவாய்ப்பாடியில் வளர்ந்தருளுங் காலத்தில் செய்த சிறு சேஷ்டிதங்களை [பாலிச சேஷ்டிதங்களை] வெகு அழகாகப் பேசுகின்ற நான்காவது ஸர்க்கம் விசேஷித்து இனிமைதானே வடிவெடுத்த தென்னலாம். அந்த ஸர்க்கத்திலுள்ள 120 ச்லோகங்களும் பக்தர்களால் நியமேந கண்டபாடம் செய்யத் தக்கவை. சில ச்லோகங்களைமாத்திரம் இங்கு எடுத்துக் காட்டுவோம்.

आरण्यकानां प्रभवः फलानामरण्यजातानि फलान्यभीप्सन् ।
विस्रंसिधान्याञ्जलिना करेण व्याघ्रात्मजां विश्वपतिस्सिषेवे ॥ ३० ॥

ஆரண்யகாநாம் ப்ரபவ: பலாநாமரண்யஜாதாநி பலாந்யபீப்ஸந்,
விஸ்ரம்ஸிதாந்யாஞ்ஜலிநா கரேண வ்யாதாத்மஜாம் விச்வபதிஸ் ஸிஷேவே. (30)

திருவாய்ப்பாடி வீதியில் ஒரு குறத்தி களாப்பழம் நாவல்பழம் பிரப்பம்பழம் முதலான காட்டுப்பழங்களைக் கொணர்ந்து விற்கையில் அவற்றை வாங்கியுண்ணவேணுமென்று விருப்பங் கொண்ட கண்ணபிரான் நெல்லைக் கொடுத்து அந்தப் பழங்களை வாங்க வேணுமென விரும்பிக் கைநிறைய நெல்லைக் கொண்டு உள்ளிருந்து புறப்பட்டான். இளங்கையாகையாலே நெல்லுகள் கையில் தங்காமல் கீழே விழுந்து கொண்டே வந்தன. பழக்காரியிடம் வரும் போது வெறுங்கையனாகவே காணப்பட்டான் கண்ணன்.

सुजातरेखात्मकशंखचक्रं ताम्रोदरं तस्य करारविन्दम् ।
विलोकयन्त्याः फलविक्रयिण्या विक्रेतुमात्मानमभूद्विमर्शः ॥ ३१ ॥

ஸுஜாதரேகாத்மகசங்கசக்ரம் தாம்ரோதரம் தஸ்ய கராரவிந்தம்,
விலோகயந்த்யா: பலவிக்ரயிண்யா விக்ரேதுமாத்மாநமபூத் விமர்ச:. (31)

கண்ணன் கையில் கொண்டுவந்த நெல்லுகள் கீழே உதிர்ந்து போனபடியாலே வெறுங்கையை விரித்தவாறே அந்தக் கையில் சங்கும் சக்கரமும் ரேகையாக நன்கு காணலாயின. * செய்த்தலை நேமியும் சங்கும் நிலாவிய கைத்தலங்கள் வந்து காணீரே * என்னும்படியான திருக்கைத்தலங்களன்றோ. அவற்றைக்கண்ட அந்தக் குறத்தியானவள் ஐயோ! இந்த பரம புருஷக் குழந்தைக்கு இந்தக் காட்டுப்பழங்களையா நாம் விற்பது!, ஆத்மாவையே விற்கவேண்டாவோ வென்று தோன்றிற்றும். [இவன் ஆயர் புத்திரனல்லன் அருந்தெய்வம் என்று தெரிந்து கொண்டாளென்கை.]

आपूरयत्स्वादुफलार्पणेन क्रीडाशिशोर्हस्तपुटं किराती ।
रत्नैस्तदा कौस्तुभनिर्विशेषैरापूरितं तत् फलभाण्डमासीत् ॥ ३२ ॥

ஆபூரயத் ஸ்வாதுபலார்ப்பணேந க்ரீடாசிசோர் ஹஸ்தபுடம் கிராதீ,
ரத்நைஸ் ததா கௌஸ்துபநிர்விசேஷைராபூரிதம் தத் பலபாண்டமாஸீத். (32)

பழங்களுக்கு விலையாகக் கூடிய நெல் கண்ணன் கையில் சிறிதுமில்லையாயினும், விளையாட்டுக்காகவே குழந்தையாயிருக்கின்ற இந்தப் பரம புருஷனைப் பரிபூர்ணத்ருப்தி பெறத்தகுமோவென நினைத்த குறத்தியானவள் கைநிரம்பப் பழங்களைக் கொட்டினாள். உடனே அந்தப் பழக் கூடை முழுவதும் கௌஸ்துப ஸமானமான ரத்னங்களினால் நிறைக்கப்பட்டதாயிற்று.

विमोहने वल्लवगेहिनीनां न ब्रह्मचर्यं बिभिदे तदीयम् ।
संपत्स्यते बालकजीवनं तत् सत्येन येनैव सतां समक्षम् ॥ ६४ ॥

விமோஹநே வல்லவகேஹிநீநாம் ந ப்ரஹ்மசர்யம் பிபிதே ததீயம்,
ஸம்பத்ஸ்யதே பாலகஜீவநம் தத் ஸத்யேந யேநைவ ஸதாம் ஸமக்ஷம் (64)

கண்ணபிரானுடைய சேஷ்டிதங்களில் ஜாரக்ருத்யங்களும் பல காண்கின்றன. * தொத்தார் பூங்குழல் கன்னி யொருத்தியைச் சோலைத்தடம் கொண்டு புக்கு, முத்தார் கொங்கை புணர்ந்து இராநாழிகை மூவேழு சென்ற பின் வந்தாய் * என்ற பெரியாழ்வார் திருமொழிப் பாசுரம் போன்ற பல பாசுரங்களை நாம் அநுஸந்தித்து வருகின்றோம். * மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்கு கச்சொடு பட்டைக் கிழித்துக் காம்பு துகிலவை கீறி நிச்சலும் தீமைகள் செய்கையாகிற இந்த ஜாரக்ருத்யம் கண்ணனுக்குத் தகுமா? இதனால் அவனுடைய ப்ரஹ்மசர்யத்திற்குக் குறைபாடு நேராதா? என்று சங்கிப்பாருடைய சங்கையைத் தீர்க்கவே இந்தச்லோகம் அவதரித்தது. * கருமலர்க் கூந்தல் ஒருத்தி தன்னைக் கடைக் கணித்தாங்கே யொருத்தி தன்பால் மருவி மனம் வைத்து மற்றொருத்திக் குரைத்து ஒரு பேதைக்குப் பொய் குறித்துப் புரிகுழல் மங்கை யொருத்தி தன்னைப் புணர்தி அவளுக்கும் மெய்யனல்லை. * [பெருமாள் திருமொழி 6—3.] என்னும்படியான சேஷ்டிதங்கள் எத்தனை செய்தவளவிலும் கண்ணபிரானுடைய ப்ரஹ்மசர்யம் சிறிதும் குறைபாடுற்றதில்லை. ஏனெனில்; பாரதப் போரில் அர்ஜுநன் மகனான அபிமந்யுவின் மனைவியாகிய உத்தரை யென்பவளுடைய கருவை நோக்கி அச்வத்தாமாவினால் பிரயோகிக்கப்பட்ட அபாண்டவாஸ்த்ரத்தினால் அக்கருவிலிருந்த சிசு [பரீக்ஷித்] நீறாயொழிய, அச்சிசுவை மீண்டும் உயிர்பெறுத்த வேணுமென்று ஸுபத்ரையினால் பிரார்த்திக்கப்பட்ட கண்ணபிரான் தனது செந்தாமரைமலர் போன்ற திருவடியினால் அச்சிசுவை அடிதொடங்கி முடியீறாக

ஸ்பர்சித்தருள, உத்தரகருணத்திலேயே அச்சிசு உயிர்பெற்றமை ப்ரஸித்தம். அப்படிகண்ணபிரான் திருவடியினால் ஸ்பர்சிக்கும் போது * யதி மே ப்ரஹ்மசர்யம் ஸ்யாத் ஸத்யஞ் ச மயி திஷ்டதி, அவ்யாஹதம் மமைச்வர்யம் தேந ஜீவது பாலக:— * [நான் உண்மையான ப்ரஹ்மசாரியாக—அஸ்கலிதவீர்யனாக—இருப்பேனாகில், ஸத்யவாக்தவமுமென்னிடத்திலிருக்குமாகில் இந்தசிசு உயிர்பெற்று எழுந்திருக்கட்டும்] என்று சபதஞ்செய்தருளினதாகப் புராணங்கள் கூறுகின்றன. இதையே தேசிகன் இந்தச்லோகத்தில் எடுத்துக்காட்டியருளுகின்றார்.

இனி, வேதாந்த சாஸ்த்ரார்த்த நிர்ணயங்களிலும் தேசிகனுடைய பலபல ச்லோகங்கள் கண்டபாடம் செய்யத்தக்கவை. அவற்றுள் சில காட்டுவோமிங்கு:—

मिथो भेदं तत्त्वेष्वभिलपति भेदश्रुतिरथो विशिष्टैक्यादैक्यश्रुतिरपि च सार्था भगवती ।
इमावर्थौ गोप्तुं निखिलजगदन्तर्यमयिता निरीशो लक्ष्मीशः श्रुतिभिरपराभिः प्रणिदधे ॥

மிதோ பேதம் தத்வேஷ்வபிலபதி பேதச்ருதிரதோ
விசிஷ்டைக்யாத் ஐக்யச்ருதிரபி ச ஸார்த்தா பகவதீ,
இமாவர்த்தௌ கோப்தும் நிகிலஜகதந்தர் யமயிதா
நிரீசோ லக்ஷ்மீச: ச்ருதிபிரபராபி: ப்ரணிததே.

இந்தச்லோகம் ஸங்கல்பஸூர்யோதயத்தில் (2-94) உள்ளது. இதனால் விசிஷ்டாத்வைத ஸித்தாந்த ஸாரம் சுருக்கமாகத் தெரிவிக்கப்படுகிறது. சித்து அசித்து ஈச்வரன் எனமூன்றுதத்துவங்கள் உள்ளன வென்று பிரித்துக்காட்டுகிற உபநிஷத்வாக்யங்களையும் நாம் காணுநின்றோம்; பலதத்துவங்களில்லை, ஈச்வரதத்வமொன்றேயுள்ளது [*நேஹ நாநாஸ்தி கிஞ்சந—ஏகமேவ அத்விதீயம்*] என்று ஓதுகின்ற உபநிஷத்வாக்யங்களையும் நாம் காணுநின்றோம். இவை முறையே பேதச்ருதிகளென்றும் அபேதச்ருதிகளென்றும் வழங்கப்பெறும். இருவகையான இவ்வேதவாக்கியங்கள் பரஸ்பரம் விருத்தங்கள்போல் தோன்றும். ஆனால் சிறிதும் விரோதமில்லை, எம்பெருமான் ஸர்வாந்தர்யாமியென்று [அதாவது, ஸர்வசரீரகனென்று] காட்டுகின்ற வேதவாக்கியங்களினால் மேற்கூறிய பேதச்ருதி அபேதச்ருதியிரண்டையும் ஸவிரோதமமைக்வயப்படுத்திக் கொள்ளலாம். சரீரங்களைவேறாகவும் சரீரியைவேறாகவும் கொள்ளுமிடத்திலேயே தத்வங்களுக்குப் பரஸ்பரபேதத்தைக்காட்டுகின்ற பேதச்ருதிகள் கூடும். சரீரங்களோடு கூடிய சரீரி ஒருவனேயென்று கொள்வது முண்டாகையாலே ஐக்கியத்தைப் பேசுகின்ற அபேதச்ருதிகளும் கூடும். இந்தஸமந்வயத்தை நன்கு செய்துவைக்கின்ற ச்ருதிகள் *யஸ்ய ஆத்மா சரீரம், யஸ்ய ப்ருதிவீ சரீரம் *இதயாதிகளேயாம். இவற்றுக்கு கடகச்ருதிகளென்றுபெயர். ஆக ஸகலச்ருதிகளையும் யதார்த்தமாகக் கொண்டு, நிர்வஹிப்பது ஸ்ரீராமாநுஜதர்சநமென்று ஸமந்வயத்தின் பெருமை கூறப்பட்டதாயிற்று.

यद्भेदं यतिसार्वभौमकथितं विद्याद्विद्यासमः प्रत्यूषं प्रतितन्त्रमन्तिमयुगे कश्चिद्विपश्चित्तमः ।
तत्रैकत्र झटित्युपैति विलयं तत्तन्मतस्थापनाहेवाकप्रथमानहैतुककथाकल्लोलकोलाहलः ॥

யத்பேதம் யதிஸார்வபௌமகதிதம் வித்யாதவித்யாதம:
ப்ரத்யூஷம் ப்ரதிதந்த்ரமந்திமயுகே கச்சித் விபச்சித்தம:,
தத்ரைகத்ர ஜடித்யுபைதி விலயம் தத்தந்மதஸ்தாபநா
ஹேவாகப்ரதமாநஹைதுககதாகல்லோலகோலாஹல:.

இது ஸ்ரீபாஷ்யத்ரய ஸாரத்தில் ப்ரதாந ப்ரதிதந்த்ராதிகாரத்திலுள்ள ச்லோகரத்நம். நம்முடைய விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு மிகவும் முக்கியமாக அறியவேண்டியது சரீராத்மபாவம். அதாவது சேதநாசேதநரூபங்களான ஸகல ப்ரபஞ்சங்களும் பகவானுக்கு சரீரம்; பகவான் சரீரி—என்பதாம். இந்த அறிவு ஊர்ஜிதமாயிருந்தால் ஸகலச்ருதிவாக்யங்களையும் அநாயாஸமாக ஒருங்கவிட்டு நற்றெளிவு பெறலாம். இப்படி நற்றெளிவுபெற்ற ஒரு விசிஷ்டாத்வைதியின் முன்னிலையில் எத்தனை மதாந்தரஸ்தர்கள் எவ்வளவு அட்டஹாஸங்கள் செய்து கொக்கரித்துவந்தாலும் அவர்களுக்குத் தோல்வியேயாகும். இந்த சரீராத்மபாவமாகிற ஒரு அஸ்த்ரத்தைக் கொண்டு எந்த வாதிகளையும் எளிதாக வென்றுவிடலாமென்பது இந்தச்லோகத்தின் கருத்து.

இனி, ஸத்ஸம்பிரதாயார்த்தங்களில் தேசிகன் நல்ல தெளிவுகொண்டு அருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்திகளில் சில காட்டப்படுகின்றன. ப்ரபத்தி உபாயமென்றும் பிராட்டியுங்கூட உபாயமென்றும் சொல்லுமவரைத் தள்ளி அருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்தி—

इयं केवललक्ष्मीशोपायत्वप्रत्ययात्मिका ।
स्वहेतुत्वधियं रुन्धे किंपुनस्सहकारिणाम् ॥

இயம் கேவலலக்ஷ்மீசோபாயத்வப்ரத்யயாத்மிகா,
ஸ்வஹேதுத்வதியம் ருந்தே கிம் புநஸ் ஸஹகாரிணாம். ( ந்யாயஸித்தாஞ்ஜநே.]

ச்ரியப்பதியான பகவானை மாத்திரமே உபாயமாகக் கொள்ளுகையாகிற இந்தப்ரபத்தியானது 'தான் உபாயம்' என்கிற எண்ணத்தை வேரோடே தவிர்க்கிறது. [தர்மிக்ராஹக ப்ரமாணத்தாலே என்றபடி.] அங்கியான ப்ரபத்தியே உபாயமன்றென்று தேறினபோது இதற்கு ஸஹகாரிகளானவை உபாயமல்லவென்பது சொல்லவேணுமோ வென்கை. இந்தச்லோகத்தில் ப்ரபத்தியின் உபாயத்வம் ஸாக்ஷாத்தாக நிராக்ருதம். "இயம் லக்ஷ்மீததிசாகோபாயத்வப்ரத்ய யாத்மிகா" என்று ச்லோகமிடாதே 'கேவலலக்ஷ்மீ சோபாயத்வ......' என்றுஇட்டபடியாலே பிராட்டியின் அநுபாயத்வமும் நன்கு காட்டப்பட்டதாயிற்று.

अस्ति कर्मार्हफलदे पत्यौ कृत्यद्वयं श्रियः ।
निग्रहाद्वारणं काले संधुक्षणमनुग्रहे ॥

அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:,
நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷணமநுக்ரஹே.

சதுச்ச்லோகீபாஷ்யத்திலுள்ள இந்த ச்லோகத்தினால் பிராட்டியின் க்ருத்யம்இத்தனையே யென்பது ஸுஸ்பஷ்டமாக வருளிச்செய்யப்பட்டது. செயலுக்குத் தக்கபடி பலப்ரதானம் செய்பவன் எம்பெருமானேயாவன்; ஆகில் பிராட்டிக்கு என்ன உபயோகமென்னில், அவன் சேதநனை நிக்ரஹிக்க நினைக்குமளவில் புருஷகாரக்ருத்யம்பண்ணி அந்த நிக்ரஹத்தை நீக்கிவிடுதலும், அவன் அநுக்ரஹோந்முகனுமளவில் அந்த அநுக்ரஹத்தைப் பெருக்கடிப்பதுமே பிராட்டியின் க்ருத்யம் என்கை.

இப்படியாக ஸகல விஷயங்களிலும் ஸ்வாமியருளிய ஸ்ரீஸூக்திகள் அமுதிலுமாற்றவினியவை. விரிப்பிற்பெருகும். 'தேசிகஹ்ருதய.' மென்கிற க்ரந்தத்திலே பரக்க நிரூபித்தோம். இனி, ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களிலே ஸ்வாமிக்குள்ள ப்ரதிபத்தி விசேஷத்தை யெடுத்துக் காட்டுவோம்.

## தேசிகனும் திவ்யப்ரபந்தமும்.

ஆழ்வார்களுடைய அருளிச்செயல்கள் தமிழ்ப்பாஷையிலே அவதரித்திருக்கின்றமையால் வடமொழியில் பரிசயமில்லாதவர்கள் மாத்திரமே ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களைக் கொண்டு போதுபோக்கவேணுமென்றும், ஸம்ஸ்க்ருத வித்வான்களாகவுள்ளவர்கள் உபநிஷத்துக்கள் முதலானவற்றைக்கொண்டே போதுபோக்கவேணுமென்றும் சிலர் வரம்பிட்டுப் பேசுவர்கள். இவ்விஷயத்தில் ஸ்ரீதேசிகனுடைய திருவுள்ளம் எப்படிப்பட்டது என்பதைப்பற்றி இங்குச் சிறிது ஆராய்வோம்

வடமொழிப்பாற்கடலைத் திருநாவின் மந்தரத்தாற் கடைந்தவர் நம்முடைய தேசிகன். இவரைப்போன்ற ஸம்ஸ்க்ருத வித்வான் *ந பூதோ ந பவிஷ்யதி * என்றால் மிகையாகாது. ஸம்ஸ்க்ருத வேதாந்தத்திற்கு உபப்ரும்ஹணங்களாகவுள்ள இதிஹாஸபுராணாதிகள் இவர்க்கு வாசோவிதேயங்கள். ஸஹகாரிஸாமக்ரிகளான ந்யாய மீமாம்ஸைகளும் இவர் திருவுள்ளத்தைப் பின்செல்லுமவை. இங்ஙனே திருநாவீறுடைய பிரானுமியவிவர் பேசியிருக்கிற ஒரு பாசுரத்தைக் காணுங்கோள் ;

" பொய்கைமுனி பூதத்தார் பேயாழ்வார் தண் பொருநல்வருங் குருகேசன் விட்டுசித்தன்
துய்ய குலசேகரன் நம்பாணநாதன் தொண்டரடிப்பொடி மழிசைவந்தசோதி
வையமெலாம் மறைவிளங்க வாள்வேலேந்தும் மங்கையர்கோ னென்றிவர்கள் மகிழ்ந்துபாடும்
செய்யதமிழ் மாலைகள் நாம்தெளிய வோதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே."

இது தேசிகப்பிரபந்தங்களுள் ஒன்றான அதிகாரஸங்க்ரஹத்தின் முதற் செய்யுள். ஸம்ஸ்க்ருதவேத வேதாந்தங்களில் எவ்வளவு பரிச்ரமப்பட்டாலும் கலங்கின ஞானமே அவற்றால் உண்டாகுமென்றும், ஆழ்வாருளிச் செயல்களைக் கொண்டுதான் தெளிவு பெறத்

इयं केवललक्ष्मीशोपायत्वप्रत्ययात्मिका ।
स्वहेतुत्वधियं रुन्धे किंपुनस्सहकारिणाम् ॥

இயம் கேவலலக்ஷ்மீசோபாயத்வப்ரத்யயாத்மிகா,
ஸ்வஹேதுத்வதியம் ருந்தே கிம் புநஸ் ஸஹகாரிணாம். [ ந்யாயஸித்தாஞ்ஜநே.]

ச்ரியப்பதியான பகவானை மாத்திரமே உபாயமாகக் கொள்ளுகையாகிற இந்தப்ரபத்தியானது 'தான் உபாயம்' என்கிற எண்ணத்தை வேரோடே தவிர்க்கிறது. [தார்மிக்ராஹக ப்ரமாணத்தாலே என்றபடி.] அங்கியான ப்ரபத்தியே உபாயமன்றென்று தேறினபோது இதற்கு ஸஹகாரிகளானவை உபாயமல்லவென்பது சொல்லவேணுமோ வென்கை. இந்தச்லோகத்தில் ப்ரபத்தியின் உபாயத்வம் ஸாவ்யக்தமாக நிராக்ருதம். — "இயம் லக்ஷ்மீதநிசாகோபாயத்வப்ரத்ய யாத்மிகா" என்று ச்லோகமிடாதே 'கேவலலக்ஷ்மீ சோபாயத்வ......' என்றுஇட்டபடியாலே பிராட்டியின் அநுபாயத்வமும் நன்கு காட்டப்பட்டதாயிற்று.

अस्ति कर्माहफलदे पत्यौ कृत्यद्वयं श्रियः ।
निग्रहाद्वारणं काले संधुक्षणमनुग्रहे ॥

அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:,
நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷணமநுக்ரஹே.

சதுச்ச்லோகீபாஷ்யத்திலுள்ள இந்த ச்லோகத்தினால் பிராட்டியின் க்ருத்யம்இத்தனையே யென்பது ஸாஸ்பஷ்டமாக வருளிச்செய்யப்பட்டது. செயலுக்குத் தக்கபடி பலப்ரதானம் செய்பவன் எம்பெருமானேயாவன்; ஆகில் பிராட்டிக்கு என்ன உபயோகமென்னில், அவன் சேதநனை நிக்ரஹிக்க நினைக்குமளவில் புருஷகாரக்ருத்யம்பண்ணி அந்த நிக்ரஹத்தை நீக்கிவிடுதலும், அவன் அநுக்ரஹோந்முகனாமளவில் அந்த அநுக்ரஹத்தைப் பெருக்கடிப்பதுமே பிராட்டியின் க்ருத்யம் என்கை.

இப்படியாக ஸகல விஷயங்களிலும் ஸ்வாமியருளிய ஸ்ரீஸூக்திகள் அமுதிலுமாற்றவினியவை. விரிப்பிற்பெருகும். 'தேசிகஹ்ருதய' மென்கிற க்ரந்தத்திலே பரக்க நிரூபித்தோம். இனி, ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களிலே ஸ்வாமிக்குள்ள ப்ரதிபத்தி விசேஷத்தை யெடுத்துக் காட்டுவோம்.

## தேசிகனும் திவ்யப்ரபந்தமும்.

ஆழ்வார்களுடைய அருளிச்செயல்கள் தமிழ்ப்பாஷையிலே அவதரித்திருக்கின்றமையால் வடமொழியில் பரிசயமில்லாதவர்கள் மாத்திரமே ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களைக் கொண்டு போதுபோக்கவேணுமென்றும், ஸம்ஸ்க்ருத வித்வான்களாகவுள்ளவர்கள் உபநிஷத்துக்களை முதலானவற்றைக்கொண்டே போதுபோக்கவேணுமென்றும் சிலர் வரம்பிட்டுப் பேசுகிறார்கள். இவ்விஷயத்தில் ஸ்ரீதேசிகனுடைய திருவுள்ளம் எப்படிப்பட்டது என்பதைப்பற்றி இங்குச் சிறிது ஆராய்வோம்.

வடமொழிப்பாற்கடலைத் திருநாவின் மந்தரத்தால் கடைந்தவர் நம்முடைய தேசிகன். இவரைப்போன்ற ஸம்ஸ்க்ருத வித்வான் * ந பூதோ ந பவிஷ்யதி * என்றால் மிகையாகாது. ஸம்ஸ்க்ருத வேதாந்தத்திற்கு உபப்ருஹ்மணங்களாகவுள்ள இதிஹாஸபுராணங்கள் இவர்க்கு வசீகரிதங்கள்; ஸஹகாரிகளான ந்யாய மீமாம்ஸைகளும் இவர் திருவுள்ளத்தைப் பின்செல்லுமவை. இங்ஙனே திருநாவீறுடைய பிரானுமிவர் பேசியிருக்கிற ஒரு பாசுரத்தைக் காணுங்கோள்.

" பொய்கைமுனி பூதத்தார் பேயாழ்வார் தண் பொருநல்வரும் குருகேசன் விட்டுசித்தன்
துய்ய குலசேகரன் நம்பாணநாதன் தொண்டரடிப்பொடி மழிசைவந்தசோதி
வையமெலாம் மறைவிளங்க வாள்வேலேந்தும் மங்கையர்கோ னென்றிவர்கள் மகிழ்ந்துபாடும்
செய்யதமிழ் மாலைகள் நாம்தெளிய வோதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே."

இது தேசிகப்பிரபந்தங்களுள் ஒன்றான அதிகாரஸங்க்ரஹத்தின் முதற் செய்யுள். ஸம்ஸ்க்ருதவேத வேதாந்தங்களில் எவ்வளவு பரிச்ரமப்பட்டாலும் கலங்கின ஞானமே அவற்றால் உண்டாகுமென்றும், ஆழ்வாரருளிச் செயல்களைக் கொண்டுதான் தெளிவு பெறத்

றிக் கொள்ளவேண்டுமென்றும் இதனால் காட்டினாராயிற்று. இங்கு ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரங்களைப்பற்றிச் சொல்லுகையில் * தெளியாத மறைநிலங்கள் * என்று அருளிச்செய்தமை நோக்கத்தக்கது.

இதிஹாஸ புராணாதிகளைக் கொண்டு உபநிஷத்துக்களின் தாத்பர்யத்தை அறிவதைக் காட்டிலும் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளைக் கொண்டு அறிவதே மிகச் சிறந்தது என்கிற திருவுள்ளத்தை த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளியிலும் நிரூபித்தருளியுள்ளார்; அதில் நான்காவது ச்லோகத்தில் * [யத் தத் க்ருத்யம் ச்ருதீநாம் முநிகணவிஹிதைஸ் ஸேதிஹாஸை: புராணை: தத்ராஸௌ ஸத்வஸீம்நச் சடமதநமுநேஸ் ஸம்ஹிதா ஸார்வபௌமீ] * என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. (இங்கு அடியேனுடைய வியாக்யானம் வருமாறு:) வேதங்களுக்கு உபப்ருஹ்மணமாக மஹர்ஷிகள் இயற்றிய இதிஹாஸ புராணங்களைக்கொண்டு நாம் யாதொரு உபயோகமடைகின்றோமோ அந்தவுபயோகமே திருவாய்மொழியினாலும் உள்ளது. ஆனால் அந்தப் புராணாதிகள் ராஜஸங்களென்றும் தாமஸங்களென்றும் த்யாஜ்யங்களாகவுமாகின்றன; இங்கு அப்படியில்லை; ஸத்வகுணத்திற்கு எல்லைநிலமான ஆழ்வாராலே அருளிச்செய்யப்பட்டதாகையாலே கேவலம் ஸாத்விகமாயிருக்கின்ற இத்திருவாய்மொழியாகிற த்ராவிடப்ரஹ்மஸம்ஹிதையானது வேதோபப்ருஹ்மணங்களில் தலைமை பெற்றதாகும்.

ஆளவந்தார் ஸ்தோத்ரரத்நத்தில் மாதாபிதாயுவதய: என்கிற ச்லோகத்தினால் ஆழ்வாரை இறைஞ்சினார். அங்கு ஸ்தோத்ரபாஷ்யத்தில் ஸ்வாமி தேசிகன் அருளிச்செய்துள்ள அவதாரிகா ஸ்ரீஸூக்திகள் ஆஸ்திகர்களுக்குக் கண்டபாடம் செய்யத்தக்கவை.

“ अथ पराशरप्रवचनादपि वेदान्तरहस्यवैशद्यातिशयहेतुभूतैः सद्यः परमात्मनि चित्तरञ्जकतमैः सर्वोपजीव्यैः उपबृंहणैः मधुरकविप्रभृति संप्रदायपरम्परया नाथमुनेरप्युपकर्तारं कालविप्रकर्षेऽपि परमपुरुषसंकल्पात् कदाचित् प्रादुर्भूय साक्षादपि सर्वोपनिषत्सारोपदेष्टारं पराङ्कुशमुनिं *मातापितेत्याद्युपनिषत्प्रसिद्धभगवत्स्वभाव-दृष्ट्या प्रणमति—मातेति ॥

என்பவை அங்குள்ள ஸ்ரீஸூக்திகள். பராசரமஹர்ஷிப்ரணீத ஸ்ரீவிஷ்ணுபுராணத்திற்காட்டிலும் வேதாந்தரஹஸ்யார்த்தங்களை மிகத் தெளிவாகக் காட்டுகின்றவை ஆழ்வாரருளிச் செயல்கள் என்பது இங்கு ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டுள்ள விஷயம்.

யதிராஜஸப்ததியில் நம்மாழ்வாரைப்பற்றி ஒரு ச்லோகமருளிச்செய்கிறார் காண்மின்; * [யஸ்ய ஸாரஸ்வதம் ஸ்ரோதோ வகுளாமோதவாஸிதம், ச்ருதீநாம் விச்ரமாயாலம் சடாரிம் தமுபாஸ்மஹே] * என்பதாமது. இதில் பிற்பாதியின் தாத்பர்யம் யாதெனில்; ஸம்ஸ்க்ருத வேதங்கள் தத்வஹித புருஷார்த்தங்களைத் தெளிய வெளியிடவேணுமென்று மிகவும் ச்ரமப்பட்டன; ஆனால் ச்ரமத்திற்குத் தகுதியான பலன் கிடைக்கவில்லை. 'அந்தோ! நமக்கு ச்ரமமே மிக்கதே!' என்று அந்த வேதங்கள் விடாய்த்தனவாம்; அந்த நிலைமையில் மகிழ்மாலை மார்பினரான ஆழ்வார் திருவவதரித்து ஈரச்சொற்களாலே வேதங்களுக்கு உத்தேச்யமான பொருள்களைத் தெளிய வெளியிட்டமையால், வேதங்களுக்கு உண்டாயிருந்த விடாய் தொலைந்ததாம் என்பதே. அன்றி, 'பகவத்ஸ்வரூபரூபகுண விபூதிகளை ப்ரதிபாதிக்கும் விஷயத்தில் வேதங்களே! நீங்கள் ஏன் வீணாக ச்ரமப்படுகின்றீர்கள்? அந்தத் தொழிலை நான் வஹிக்கக்கடவேன்; நீங்கள் இளைப்பாறலாம்' என்று சொல்லி ஆழ்வார் திவ்யப்ரபந்தங்களை அருளிச் செய்வாராயினர் என்பதும் கருத்தாகும். மிகவும் கம்பீரமான தேசிக திவ்யஸூக்திகளிலே இன்னமும் எவ்வளவோ விசேஷதாத்பர்யங்களை ஊஹித்துணரலாம்.

இனி, பாதுகாஸஹஸ்ரத்தில் ஆழ்வார் விஷயமாக அருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்திகளை ஆராயப்புகுந்தாலோ ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளை அநுஸந்தித்தவாயினால் மற்றொரு ஸரஸ்வதியைப் பேசவும் கூசவேண்டும்படி அருளிச் செயல்களுக்கு அத்தனை பெருமை அருளிச் செய்யப்பட்டுளது. அதைப்பற்றி மற்றொருகால் பேசுவோம்.

திவ்யப்ரபந்தங்களின் பெருமை தேசிகனுடைய திருவுள்ளத்தில் இடைவிடாது குடிகொண்டிருந்ததென்று நன்கு புலப்படுகிறது. அம்ருதாஸ்வாதினீ யென்னும் தேசிகப்ரபந்தத்திலுள்ள "அந்தமிலாப் பேரின்பமருந்தப்பேர்க்கும் அடியோமை யறிவுடனே யென்றுங் காத்து, மூர்த்தைவிசை நிரைவழியிலொழுகா தெம்மை முன்னிலையாந் தேசிகர்தம் முன்னே சேர்த்து, மந்திரமும் மந்திரத்தின்வழியுங்காட்டி வழிப்படுத்தி வானேற்றியடிமைகொள்ளத், தந்தையென நின்ற தனித்திருமால்தாளில் தலைவைத்தோஞ் சடகோபனருளினாலே'' (28), என்ற ஒருபாசுரமே போதும். ஆங்காங்கு ஊடே அருளிச்செய்துள்ள (1) "அணிகுருகை நகர் முனிவர் நாவுக்கு அமைந்தன......விடலரிய பெரிய பெருமாள் மெய்ப்பதங்களே'' (2) "குருகையில் வந்து கொழுப்படக்கிய குலபதிதந்த குறிப்பில்வைத்தனர்'' இத்யாதி பாசுரங்கள் ஆழ்வாரிடத்திலும் அருளிச்செயல்களிடத்திலுமுள்ள பக்தியே வடிவெடுத்து தேசிகனாகத் திருவவதரித்ததோ! என்னலாம்படி யிருக்கின்றதேயன்றி வேறென்றுஞ் சொல்லப்போகாது. ஸ்வாமி தம்மை விசேஷித்துக் கொள்ளுமிடத்தும் (1) "சந்தமிகு தமிழ் மறையோன் தூப்புல் தோன்றும் வேதாந்தகுரு'' என்று த்ராவிடப்ரஹ்மஸம்ஹிதைக்கே தாம் இட்டுப்பிறந்தவராக அருளிச் செய்கிறார். ஸ்வாமியை வாழ்த்துகின்றவர்களும் "செந்தமிழ்த் தூப்புல் திருவேங்கடவன் வாழியே'' என்கிறார்கள். ஸ்வாமி தாம் மங்களாசாஸனம் செய்தருளுவதும் (3) "தொண்டைமண்டலவேதியர் வாழவே தூய தென் மறை வல்லவர் வாழவே'' என்று தமிழ்வேதமறிந்த பகவர்களுக்கேயாயிற்று.

இப்படிப்பட்ட அபிநிவேசம் தேசிகனுக்கு உண்டானது இரண்டு காரணத்தினால். ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் ஆழ்வான் பட்டர் முதலான பூருவாசாரியர்களெல்லாரும் ஒருமிடறாக ஆழ்வார்ஸ்ரீஸூக்திகளையே சேமநிதியாகக் கொண்டிருந்தார்களென்பது ஒருகாரணம். அவற்றில் தாம் கண்ட ஒப்புயர் வற்ற குணாதிசயங்கள் மற்றொரு காரணம். *ப்ரியா து ஸீதா ராமஸ்ய தாரா: பித்ருக்ருதா இதி, குணரூபகுணைச் சாபி ப்ரீதிர் பூயோப்யவர்த்தத.'' என்னுமாபோலே.

இப்படிப்பட்ட மஹாசார்யர்பக்கலில் நாம் ஹார்த்தமான பக்தியை வஹிப்பதற்கு அவர்களுடைய அருளிச் செயல்களை வரியடைவே கற்றுவல்லாராவதே. மற்றும் பலவகைகளாலும் நாம் ஆசார்யபக்தியைக் காட்டலாமாயினும் இவ்வழியிலே காட்டுவது மிகச் சிறந்ததாகும்.

## நிகமனம்.

அநுபவரஸிகர்களுக்கு நித்யாநுபவயோக்யமாக இந்த க்ரந்தம் அதிஸங்க்ஷேப விஸ்தரமாக இவ்வளவிலே தலைக் கட்டப்பட்டது. இந்த க்ரமத்திலே அநுபவிக்க வேண்டிய ஆர்த்த விசேஷங்கள் கடல் போன்றுள்ளன. அவற்றைப் பல்வேறு க்ரந்தங்களின் மூலமாக மேன் மேலும் அநுபவிப்போமாக. இதிலுள்ள குற்றங் குறைகளைப் பெரியோர்கள் இயற்கை யின்னருளால் க்ஷமித்தருள்க.

Released by Maaran's Dog , Toronto , Canada

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் எழுதிய

**பன்னிருதிங்களனுபவம்**

முற்றுப்பெற்றது.